

# முல்லைச்சரம்

## கவிஞர் பொன்னடியார்

இலக்கியப் பணி 40ஆம் ஆண்டு விழா மலர்

# செயற்கரிய செய்தாரை வாழ்த்துவோம்!



*"வெற்று விளம்பரம் வீண் புகழ்ச்சிக்கெல்லாம்
சற்றும் இடம் கொடுக்காதே!
தொற்று நோய் ஆனதோர் பட்டம் பதவிக்கு
முற்றும் உனை இழக்காதே!"*

என்று புதுமைக் குரல் கொடுப்பவர் கவிஞர் பொன்னடியான்.

ஒரு கவிஞனின் - எழுத்தாளனின் படைப்புகளால் மட்டும் ஒரு மொழி, அம் மொழியின் இலக்கிய வரலாறு பெருமை பெற்று விடுவதில்லை. அப்படைப்பாளனின் உயரிய பண்புகளும் - பொதுநலம் சார்ந்த சமுதாய நோக்கில் செயல்படும் செயல்பாடுகளும் அம் மொழிக்கு அம்மொழி சார்ந்த நாட்டிற்குப் பெருமை சேர்ப்பவை என்றால் மிகை இல்லை - இந்த உள்ளங்கை நெல்லிக்கனியான உண்மைக்கு உண்மையிலேயே சொந்தக்காரராக விளங்குகிறார் கவிஞர் பொன்னடியான்.

கடந்த நாற்பது ஆண்டு காலமாக அதாவது புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் அணுக்கத் தொண்டராக, உதவியாளராக இருந்து கைமாறு கருதாமல் அக்கவிஞருக்காக உழைத்த காலந்தொட்டு இன்று வரை உழைத்துக் கொண்டே இருக்கின்றார், உலகம் போற்றும் உயர்தனிச் செம்மொழியான தமிழுக்கு!

என்னுயிர் மூச்சும் என்னுடற் பேச்சும் எல்லாம் தமிழினுக்கே
என்விழி வீச்சும் என் புகழ் பூச்சும் எல்லாம் தமிழினுக்கே!

என்று பாடத் தலைப்பட்ட தன் இருபதாம் வயது காலந்தொட்டு அவர் தமிழ் இலக்கிய உலகில் உழைத்த, உழைத்திருக்கின்ற உழைப்பு நிகரற்றது.

புரட்சிக் கவிஞரிடம் அவர் அணுக்கத் தொண்டராவதற்கு முன்பே அவர் படைப்புகள் புகழ்பெற்ற பல இதழ்களிலும் வெளிவரத் தொடங்கி விட்டன. அவரின் மொழிநலம் சார்ந்த செயல்கள் ஆரம்பமாகிவிட்டன. கவிஞரின் இலக்கியப் பணி வெள்ளி விழா, என் தந்தையார் முத்தமிழ்க் காவலர் தலைமையில் சென்னையில் மிகச் சிறப்பாக நடத்தப்பட்ட போது அவர் இப்படிப் பேசினார்:

"எல்லோரும் பேசுவார்கள். அவர்களால் செயல்பட முடியாது. கோடை இடி இடித்துக் குளம் நிரம்பாது. பேசுவதனால் மட்டுமே ஒரு செயல் வெற்றி பெறாது. ஆகவேதான் செயற்கரிய செய்கிறவர்களைப் பெரியர் என்கிறார் திருவள்ளுவர். ஒரு பத்திரிக்கையைத் தொடர்ந்து 19 ஆண்டுகள் நடத்துவது என்பது செயற்கரிய செயல்தானே. 14 ஆண்டுகளாக கடற்கரையில் கவியரங்கம் நடத்தி வருவது செயற்கரிய செயல்தானே?" இளைஞர்களை ஊக்கப்படுத்தி அவர்களை அரவணைத்துச் செல்வது என்பதுவும் செயற்கரிய செயல்தானே. இத்தகைய அரிய செயல்களைச் செய்துவரும் கவிஞர் பொன்னடியானும் பெரியவர்தானே!" என்று பலபடக் கூறி வாழ்த்தினார். இதே பொருள் புதைந்த பொன் போன்ற வரிகளையே கவிஞர் பொன்னடி அவர்களின் இலக்கியப் பணி 40-ம் ஆண்டு விழா நேரத்திலும் குறிப்பிடுவது மிகப் பொருத்தமானதாகும்.

இந்திய இலக்கிய வரலாற்றில் ஏன், உலக இலக்கிய வரலாற்றில் இன்று இத்தகைய செயற்கரிய செயல்களால் கவிஞர் பொன்னடியான் தனித் தன்மை வாய்ந்த தன்மானக் கவிஞராக நிமிர்ந்து நிற்கிறார்.

*"ஒரு,*
*புல்முனை அளவான*
*தீப்பொறி கிடைத்தாலும்*
*பூமிக்கு ஒளியூட்டு வேன்!"*
*சிறு,*
*நெல்மணி கிடைத்தாலும்*
*அதையே நான் விளைவாக்கி*
*நில மக்கள் பசி போக்குவேன்"*

என்ற உறுதிப் பாட்டோடு உண்மை ஒளியேந்தி, உறுதி குன்றா உழைப்போடு நிற்கும் புதுமைக் கவிஞர் பொன்னடியாரை வாழ்த்தி விழா எடுக்கும் இவ்வேளையில் இச்சிறுமலர் உங்கள் கரங்களில் தவழ வருகின்றது. மலர் சிறியது தான். ஆனால் இதனுள் பொதிந்துள்ள இலக்கிய மணம் பெரிது என்பதைப் பக்கங்களைப் புரட்டிப் படிக்கும்போது உணர்வீர்கள்! இம்மலரின் மலர்ச்சிக்குத் துணை நின்ற அனைவருக்கும் நன்றி மலர்களைக் காணிக்கையாக்குகின்றோம்!

நன்றி!



அன்புடன்,

(signature)

(விழாக் குழுச் செயலர்)

தமிழக அரசின் பாவேந்தர் விருதினை (1990) மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர், மாண்புமிகு பேராசிரியர் க. அன்பழகன் கவிஞருக்கு அளிக்கின்றனர்.



முல்லைச்சரம் 31 ஆம் ஆண்டு விழாவில் மாண்புமிகு கல்வி அமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன், மாண்புமிகு ஆர்.எம். வீரப்பன் ஆகியோர் கவிஞருக்கு மலர் மாலை அணிவித்து மகிழ்கின்றனர்.



துணைவியார் இந்திரா, மகன் பொன். லெனின்குமார், மகள் பொன்மலர் ஆகியோருடன் கவிஞர்.



குடும்பத்தினருடன் கவிஞர்.



இசையமைப்பாளர் கங்கை அமரன், கவிஞர் வாலி ஆகியோருடன் கவிஞர்.



முப்பலச்சரம் 2ஆம் [illegible] வடிவ விழாவில் இசைஞானி இளையராஜா, கல்கண்டு [illegible] ணன், உழைப்புச் செல்வர் (அமரர்) ஜி. உமாபதி ஆகியோருடன் கவிஞர்.



விழாக்குழுத் தலைவர், முத்தமிழ் வித்தகர் வித்வான் வே. லட்சுமணன் அவர்கள்.



பாரதப் பிரதம மாண்புமிகு வாஜ்பாய், கணவர் மதிப்புமிகு அறிஞர் த.சி.க. கண்ணன்
ஆகியோருடன் வி. [illegible] செயலர் திருமதி. மணிமேகலை கண்ணன்.






மு. கருணாநிதி
முதலமைச்சர்.

தலைமைச் செயலகம்,
சென்னை - 600 009
நாள்: 28-6-2000

## வாழ்த்துச் செய்தி

"கவிஞர்களை வளர்க்கும் கவிஞர்" எனப் புகழப்படும் கவிஞர் பொன்னடியான் அவர்களின் நாற்பது ஆண்டு கால இலக்கியப் பணிகளைப் பாராட்டுமுகத்தான் சென்னையில் விழா ஏற்பாடு செய்யப்படுவதும், அதனையொட்டிச் சிறப்பு மலர் ஒன்று வெளியிடப்படுவதும் அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைந்தேன்.

1990-ஆம் ஆண்டில் இந்த அரசினால், "பாவேந்தர் விருது" வழங்கிப் பாராட்டப் பெற்ற பெருமைக்குரிய கவிஞர் பொன்னடியான், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களின் அன்புக்குரிய நன்மாணாக்கர்; அவரது, "குயில்" ஏட்டின் உதவி ஆசிரியராக விளங்கிய சிறப்பைப் பெற்றவர்; முப்பது ஆண்டுகளுக்கும் மேலாகக் கடற்கரைக் கவியரங்கம் நடத்திப் பாவேந்தர் பரம்பரையை வளர்த்து வருபவர். முப்பத்தைந்து ஆண்டுகளாக "முல்லைச்சரம்" கவிதை இதழை நடத்தி வரும் இலக்கியப் படைப்பாளி இவர். இவர் பணிகள் தமிழ் இதயங்களால் போற்றத்தக்கவை.

இவர்தம் இலக்கியப் பணிகளைப் பாராட்டி எடுக்கப்படும் விழா இனிதே நிகழ்ந்தேறவும், வெளியிடப்படும் சிறப்புமலர் தமிழ்த்தொண்டு புரிவோரை மகிழ்வித்து, எழுச்சியூட்டிக் கிளர்ந்தெழச் செய்வதாய்த் திகழ்ந்திடவும் என் உளமார்ந்த நல்வாழ்த்துக்கள் உரித்தாகுக.

அன்புள்ள,

(மு. கருணாநிதி)





முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பி.எச்.டி.
தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு,
இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள்: 14-6-2000
தி.பி.2031/வைகாசி 32

# வாழ்த்துச் செய்தி

'கவிஞர் பொன்னடியார்' 40 ஆண்டு இலக்கியப் பணியைக் குறித்த விழாவின் தொடர்பில் 'வண்ண மலர்' வெளிவரவிருப்பதறிந்து மகிழ்கிறேன். 'கடற்கரைக் கவியரங்கம்' அவரது திறந்த உள்ளத்தைக் காட்டும்! பாவேந்தருடன் பழகிய கவிஞர்! நல்ல பல இலக்கியத் தொண்டுகள் ஆற்றி வருபவர்! வாழும் காலத்திலேயே அவரது தொண்டுகளைப் பாராட்ட நினைத்த உள்ளங்கள் வாழ்க! விழா சிறப்புற நடப்பதாக!

பல்துறை அறிஞர்களின் கருத்துக் களஞ்சியமாக மிளிரப் போகும் மலர் சிறப்புற வெளிவரவும் எனது நெஞ்சார்ந்த வாழ்த்துக்கள்!

அன்புடன்

(மு. தமிழ்க்குடிமகன்)







சென்னை மாநகராட்சி
ரிப்பன் கட்டடம்
சென்னை - 600 003


நாள்: 29-5-2000

# வாழ்த்துச் செய்தி

கலை இலக்கியத் துறையில் அருந்தொண்டாற்றி வருபவரும் 'முல்லைச் சரம்' பத்திரிகையின் நிறுவனரும், ஆசிரியருமான கவிஞர் பொன்னடியார் அவர்களின் 40 ஆண்டு கால இலக்கியப் பணியைப் பாராட்டி விழா எடுத்து மலர் வெளியிட இருப்பது அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களின் மாணவராக இருந்து தொண்டாற்றிய பெருமைக்குரியவர். இல்லத்திலேயே இலக்கியப் பணியைச் செய்து புகழ் பெற்றவர். புதுமை நிகழ்ச்சியான கடற்கரைக் கவியரங்கத்தின் தந்தையாக விளங்குபவர். திரைப்படங்களில் பிரபலமான பாடல்களை எழுதியவர் என்ற பெருமை கவிஞருக்கு உண்டு. பல அரிய நூல்களைப் படைத்து, இளம் எழுத்தாளர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளித்து வருபவர் கவிச் செம்மல் திரு. பொன்னடியார்.

விழா சீரும் சிறப்புடன் நடைபெறவும், மலர் சிறந்த கருத்துக்களைத் தாங்கி மணம் பரப்பவும், இலக்கியப் பணி மென்மேலும் சிறப்புடன் நடைபெறவும் என் நெஞ்சம் நிறைந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மு. க. ஸ்டாலின்
மேயர்.



23, சாலை
பெசந்த் நகர்,
சென்னை - 600 090
தொலைபேசி: 4919797
4919898

Dr. வா. செ. குழந்தைசாமி
Ph.D. D.Litt. F.N.A.Sc., FNAE, FIE,

நாள்: 17-6-2000

அன்புள்ள திருமதி. மணிமேகலை கண்ணன் அவர்களுக்கு,

வணக்கம்.

'கவிஞர் பொன்னடியார்' அவர்களது 40 ஆண்டு இலக்கியப் பணியைப் பாராட்டி நடத்தப்பட இருக்கும் விழா பற்றிய தங்கள் கடிதம் கிடைத்தது. நன்றி. கவிஞர் பொன்னடியான், கவிஞர்களில் தனித்தன்மை வாய்ந்தவர். புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களின் நம்பிக்கைக்குரிய மாணவர். கவிஞர்களை உருவாக்கும் கவிஞர் என்று பொருத்தமாகப் பாராட்டப்படுபவர். 35 ஆண்டுகளுக்குப் பக்கமாக 'முல்லைச்சரம்' என்ற இலக்கிய இதழையும், 30 ஆண்டுகளுக்கும் மேலாக 'கடற்கரைக் கவியரங்கம்' என்ற ஒப்பற்ற நிகழ்ச்சியையும் தொடர்ந்து நடத்தி வருபவர். அவருடைய கவிதைத் தொகுப்புகள் இலக்கிய ரசிகர்களுக்கு விருந்து. அவருடைய திரைப்படப் பாடல்கள் பொது மக்களுக்கு விருந்து. மூன்று துறைகளில் காலடி எடுத்து வைத்து முன்னேற்றம் கண்டவர்.

பாராட்டு விழா சிறப்பாக நடைபெற எனது மனம் நிறைந்த வாழ்த்துக்கள்.

தங்கள் அன்புள்ள,

(வா. செ. குழந்தைசாமி)




Dr. A. Ma. Samy
Editor
"RANI" WEEKLY,
RANI MUTHU,
RANI COMICS.




## வாழ்த்து

அன்பு நண்பர் பொன்னடியான் அவர்களின் நாற்பதாண்டு இலக்கியப் பணியையொட்டி நாடு புகழ நல்ல முறையில் விழா எடுக்கப்பட இருப்பது அறிந்து மிகவும் மகிழ்ந்தேன்.

நாவீறு படைத்த நல்ல கவிஞர் பொன்னடியான். கடற்கரை தன்னை கவியரங்கமாக மாற்றிப் புகழ்கரை கண்டவர். பாவேந்தன் பாரதிதாசனின் பக்கமிருந்த மிக்க சிறப்புடைய மாணவர். பல துறை வித்தகர். பண்பாளர், நல்ல அன்பாளர். நாற்பதாண்டு இலக்கியப் பணி என்பது சாதாரணமானது அல்ல. அது ஒரு 'மாரத்தான் ஓட்டம்'. பொன்னடியான் போன்ற நெஞ்சுறுதி உடையவர்களால்தான் அது முடியும்.

அவர் இன்னும் ஒரு நூற்றாண்டு பணியாற்றித் தமிழ் இலக்கியத்தை வளப்படுத்த வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

வாழ்க பொன்னடியான்! வளர்க அவரின் இலக்கியப் பணி!

அன்புடன்

(அ.மா. சாமி)


*Phone : 626 24 79*
1, Crescent Salai,
Shenoy Nagar,
Madras - 600 030

# ஞாலம் தன்னில் பல காலம் வாழ்கவே!



செந்தமி ழதற்குச் சிறப்பினைத் தேடி
தந்தநல் லாருள் தலைசிறந் தவரெனப்
பாரெலாம் போற்றும் பாரதி தாசனின்
சீரிய மாணவ ராகத் திகழ்ந்திடும்
பொன்னடி யான்நம் பூந்தமிழ்த் தாயின்
அன்பிற் குகந்த அருமைப் புதல்வர்!
தெய்வமாய்க் கவிதையைச் சிந்தையில் தாங்கி
வையகம் புகழ வாழ்ந்துகொண் டிருப்பவர்!
நல்லவை சேர்க்கவும் அல்லவை நீக்கவும்
சொல்லெனும் வாளைச் சுழற்றும் திறத்தினர்!
கவிஞர்கள் என்னும் கவினார் பயிர்களைப்
புவிதனில் வளர்க்கும் பொறுப்பை ஏற்றவர்!
காளான்கள் இல்லாக் கவிஞர் பண்ணையை
ஆளாய் இருந்தே அனுதினம் காப்பவர்!
எல்லையில் லாத எழிலுடன் இலங்கும்
முல்லைச் சரத்தை முயன்று தொடுப்பவர்!
சுந்தர நெஞ்சத் துடியிடை யான
இந்திரா தன்னை இணையெனக் கொண்டவர்!
போற்றுதற் குரிய புரட்சிக் கவிஞர்
நாற்பதாண் டுகள்முன் நயந்து தொடங்கிய
நற்றமிழ்க் கவிஞர் மன்றினை நாளும்
பெற்ற குழந்தைபோல் பேணி வளர்ப்பவர்!
இனிய அக்கவிஞர் இந்த நன்னாளில்
நனிமகிழ்வோடு நாற்பதாம் ஆண்டு
இலக்கியப் பணிவிழா இனிதே காண்கின்றார்!
இறைவன் அருளால் என்றும்அக் கவிஞர்
மேலும் பற்பல மேன்மைகள் எய்தி
ஞாலம் தன்னில்பல காலம் வாழ்கவே!

கவியரசி சௌந்திரா கைலாசம்



# எனக்கு திசை காட்டிய இறைவனடியார்

## பாலகுமாரன்

வாழ்க்கையில் ஓரளவு வெற்றியடைந்த பிறகு, வெற்றியடைந் தோமென்று உள்ளுக்குள் மெல்லிய எண்ணம் ஏற்பட்ட பிறகு, இந்த வெற்றிக்குக் காரணமாக இருந்தது என்ன என்று வெற்றியடைந்தவருக்கு நிச்சயம் யோசிக்கத் தோன்றும். இறைவன் கருணை என்று ஆத்திகரும், சந்தர்ப்ப சூழ்நிலைகளைச் சரியாகப் பயன்படுத்திக் கொண்ட புத்தி சாலித்தனம் என்று நாத்திகரும் பதில் சொல்வார்கள். ஆனால், இந்த இரண்டு பேருமே, அவ்வப்போது பல மனிதர்கள் செய்திருக்கிற உதவி தான் என்னை நல்ல நிலைக்குக் கொண்டு வந்திருக்கிறது. எனவே இறைவனென்பது இங்கு மனித ரூபம் என்று ஆத்திகரும், நல்ல மனிதர் களை நண்பர்களாகப் பெற்ற இயற்கைச் சூழல்தான் காரணம் என்று நாத்திகரும் விளக்கம் சொல்வார்கள்.

சுயமாக, தானே வந்தேன் என்று எவரும் சொல்ல இயலாது. அப்படிச் சொன்னால் சொல்லுகிறவருக்கு மன நிலை பூரணமாகவில்லை என்றே

அர்த்தம். நன்றியில் மனம் நனையாது போனால் தன்னுடைய வெற்றியைக் கூட ஒருவர் நன்கு அனுபவிக்க முடியாது. நன்றியில் நனைகிறபோது வெற்றி என்கிற இனிப்பான விஷயம் இன்னும் மிருதுவாகி, சுவைக்கு ஏற்ற ஒரு பக்குவமாக மாறி விடுகிறது. அது மட்டுமல்ல. இந்த நன்றி அந்த மனிதரை வேறு விதமாக மாற்றுகிறது.

எனக்கு இன்னார் இவ்விதமாக உதவி செய்தாரல்லவா? அதே விதமாக வெற்றி பெற்ற நான் மற்றவர்க்கு விரிவாக, விரைவாக உதவி செய்வேன். 'செய்துதான் ஆகவேண்டும்' என்ற சங்கல்பம் செய்வதற்கும் இந்த விஷயம் காரணமாகிறது.

சுமார் முப்பது வருடங்களுக்கு முன்பு பாலகுமாரன் என்கிற இருபத்திநாலு வயது இளைஞன் வாழ்க்கையில் ஏதாவது செய்து முன்னேற வேண்டும் என்று வெறியோடு அலைந்து கொண்டிருந்தான். அவனைச் சுற்றியிருந்த உறவுகள் எல்லாமே நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவை. நடுத்தர வர்க்கத்திலும் கீழ்த்தட்டைச் சேர்ந்தவை.

இன்னார் என்னுடைய உறவினர். அவர் பெரிய உத்தியோகத்தில் இருக்கிறார். இன்னார் எங்களுக்கு மிகவும் தெரிந்தவர். இந்தத் துறையில் அவர் பிரபலமானவர் என்று சொல்லிக் கொள்ள அவனைச் சுற்றி எவருமே இல்லை

பாலகுமாரனுடைய உறவுகளும், நட்புகளும் சில நூறு ரூபாய் சம்பளம் வாங்கும் குமாஸ்தா வேலைக்குத் தங்களை மும்முரமாகத் தயார் செய்து கொண்டு வற்றல் குழம்புடன் கூடிய மோர் சாதம், கரையோடு கூடிய எட்டு முழ வேட்டி, ஏரோப்ளேன் டயர் போட்டு கெட்டியாய்த் தேயவே தேயாது என்கிற தோல் செருப்பு, சிலோன் எடுக்கிற வானொலிப் பெட்டி, வருடம் தவறாது சௌகரியமாய் போய் போடப்படும் திருப்பதி மொட்டை, கிராமத்திலிருந்து வரும் உளுத்தம் பருப்பு, புழுங்கல் அரிசி என்று தங்கள் நிலையிலேயே திருப்தியடைந்தார்கள்.

ஒரு வாரப் பத்திரிகையில் தடவி அனுப்பப்படும் குனேகா வாசனைத் திரவியத்தை அனுபவிக்க, அந்தப் புத்தகத்தை அப்படியே முகத்திலும், மார்பிலும் தேய்த்துக் கொண்டு 'என் மீது வாசனை அடிக்கிறதா' என்று கேட்டுக் கொள்கிற சந்தோஷம் மட்டுமே அவர்களுக்கு உச்சபட்சம். நான் அந்த குனேகா சென்ட்டை எட்டு ரூபாய் கொடுத்து வாங்கிய போது, அதை தம்பியோ, தங்கையோ உபயோகப்படுத்தக் கூடாது என்று ஒளித்து வைக்க, என்னுடைய சிறிய சென்ட் பாட்டிலை எலி தூக்கிக் கொண்டு போய் தன் வளையில் பதுக்கிக் கொண்டு விட்டது. கடைசி வரை எடுக்கவே முடியவில்லை. வளைக்குள் வெந்நீரை விட்டு எலியைக் கொன்று விடுகிறேன் என்று முயற்சித்தபோது அம்மா தடுத்து விட்டாள். 'போனா போறது விட்டுடுறா. நீ பெரியவனான பிறகு இன்னும் நல்ல சென்ட்டே வாங்கிக்கலாம்' என்று சொன்னாள். அதற்குக் கிட்டத்தட்ட பதினைந்து வருடங்கள் காத்திருக்க வேண்டியிருந்தது.

நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால், வாழ்க்கையின் உச்சபட்ச சந்தோஷங்கள் மிகச் சிலவையே. அவை கிடைப்பதிலும் மிகப் பெரிய

போராட்டத்தை நடத்த வேண்டியிருந்தது. நடுத்தர வர்க்கம் என்பதால் பற்றாக்குறை எப்போதும் நிரந்தரமாய் இருந்து வந்தது. பற்றாக்குறையின் காரணமாகவே. ஆதரவாகப் பேசுகிற மனிதனும் அனுசரித்து நடக்கிற

உறவுகளும் மிகக் குறைவு. பேசினால் காசுக்குச் செலவு வந்து விடுமோ என்று வாயை இறுக்க மூடிக் கொள்கிறவர்கள் அதிகம். இவ்விதமாகவே 'இரு' என்று எனக்கும் சொல்லித்தரப்பட்டது. என்னைச் சுற்றியுள்ள நண்பர்களும் அவ்விதமே இருந்தார்கள்.

'கதை புஸ்தகம் படிக்கிறதெல்லாம் கெட்ட பழக்கம்னு எங்கப்பா சொல்லியிருக்காரு. என்னைக் கொன்னு போட்டாலும் கதை புஸ்தகம் படிக்க மாட்டேன்' என்று என்னுடைய நண்பன் அதாவது அடுத்த வீட்டில் வசிக்கிறவன் என்னிடம் தன் நிலை பற்றிச் சொன்னான். 'நான் கதை புஸ்தகம் படிக்கிறேன் என்று உங்கப்பாவிடம் சொல்லேன்' என்று நான் சொன்னபோது அவன் அதை அவரிடம் சொல்ல, 'இதற்கு மேல் பாலகுமாரனோடு பேச வேண்டாம்' என்று அவனுடைய அப்பா அவனுக்கு கட்டளையிட்டு விட்டார்.

'பொன்னியின் செல்வன்'லாம் படிச்சு என்ன பிரயோஜனம்? காசு நஷ்டப்படுத்தாதே. பத்து ரூபா காசு சம்பாதிக்கிற வழியைப் பாரு. அப்பா எப்படி கஷ்டப்பட்டு உன்னை வளர்த்திருக்காரு. நீ கதை புஸ்தகம் படிச்சுகிட்டு இருக்குறியே நியாயமா' என்று என் நண்பனின் தகப்பனார் எனக்கு அறிவுரை சொன்னார்.

'கதை புஸ்தகம் படிப்பதில் என்ன தவறு?' என்று நான் திரும்பக் கேட்டபோது, அது கற்பனைக்களைத் தூண்டி விடும். கற்பனைகள் தூண்டப்பட்டால் ஆசைகள் அதிகமாகும். ஆசைகள் அதிகமானால் அதற்கேற்றபடி செலவு செய்ய நேரிடும். செலவு செய்கிற எண்ணம் வந்தால் சம்பாதிக்க முடியாமல் திருட்டுத்தனம் வந்துவிடும். திருட்டுத் தனம் வந்துவிட்டால் மொத்த வாழ்க்கையும் பாழாகி விடும். எனவே இலக்கியம் படிப்பது என்பது திருட்டுக்குத்தான் வழிவகுக்குமே தவிர, வேறு எதற்கும் அழைத்துப் போகாது என்று உறுதியாகச் சொன்னார். நான் குழம்பினேன்

பதினெட்டிலிருந்து இருபத்துநாலு வயது வரை நான் சந்தித்த பல மனிதர்கள் நான் கதை புஸ்தகம் படிப்பதையோ, கதை எழுத வேண்டும் என்று ஆர்வப்பட்டதையோ ஒருநாளும் ஆதரித்ததே இல்லை. ஒருவர் கூட பாராட்டியதில்லை. 'இது கெட்டுப்போற மூஞ்சின்னு தெள்ளத் தெளிவா தெரியறது' என்றுதான் என் காதுபடச் சொன்னார்கள்.

'நீ ரொம்ப யோசிக்கிறே. யோசிக்கிறவனுக்குக் கீழ்ப்படிதல் வராது. கீழ்ப்படிதல் இல்லாத பையன் கெட்டுத்தான் போவான். நீ என் பிள்ளை யோட சேராதப்பா' என்று பல தகப்பனார்கள் எனக்குத் தடையுத்தரவு போட்டார்கள். நான் தனித்துப் போனேன்.

பதினெட்டு வயதில் வேலை கிடைத்து கையில் கொஞ்சம் காசு இருந்தது. அந்த வேலை நேரத்தில் ஒவ்வொரு செவ்வாய்க்கிழமையும்

டெலிபோனைத் துடைப்பதற்காக ஏழ்மையான ஆனால் மிகுந்த அழகுள்ள ஒரு பெண் வருவாள். என் அலுவலகம் மொத்தமும் அவள் வருகைக்குத் தன்னை தயார்படுத்திக் கொள்ளும். உரத்துப் பேசுதலும், சிரித்தலும் ஒருவரையொருவர் பெயர் சொல்லி அழைத்தலும் அங்கு நடைபெறத் துவங்கும்

என் மனதிலும் அந்தப் பெண்ணின் வருகை ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தியது. 'இன்றைக்கு செவ்வாய்க்கிழமை. நிலா பகலிலே வரும்' என்று ஒரு எதிர்பார்ப்பை ஏற்படுத்தி, அந்த எதிர்பார்ப்பை கவிதையாக எழுத வைத்தது. அந்தக் கவிதையை நண்பனிடம் காட்ட அது பல பேரிடம் பரவி, பாலகுமாரன் எப்போதும் லேடீஸ் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறான் என்று செய்தி உலவி என்னை இன்னும் தனிமைப்படுத்தினார்கள். இன்னும் சில கவிதைகளும் ஆசிரியர் கஸ்தூரி ரங்கன் அவர்களால் பாராட்டப்பட்டு கணையாழி என்ற பத்திரிகையில் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு கவிதையாக வெளியாகியது.

தேவகோட்டை வா. மூர்த்தி, டி.ஆர். நடராஜன், சுப்ரமண்ய ராஜு, ஜெயபாரதி, கதாசிரியர் ஜெயந்தன் என்று நண்பர்கள் கிடைத்தார்கள். எழுத்தாளர் வண்ணநிலவனுடைய அன்பும் கிடைத்தது. நண்பர்கள் விலகிப் போக, வெளியே என்னைப் போலவே தனித்திருந்த ஒரு இலக்கிய வட்டம் என்னைச் சுற்றிக் கொண்டது. ஆனால் எல்லா நேரமும் அவர்களோடு இருக்க முடியவில்லை. அப்படித் தனியே தவித்த நேரம் கடற்கரைக்குப் போய் கதைகள் யோசனை செய்யலாம் என்று ஒரு நாள் முயற்சித்தபோது வட்டமாய் ஒரு குழு அமர்ந்திருந்தது. என்ன என்று விசாரித்தபோது, தங்கள் கவிதைகளைப் படித்துக் கொண்டிருக்கிறார்கள். பரஸ்பரம் பரிமாறிக் கொள்கிறார்கள் என்று தகவல் வந்தது. நான் புதுக் கவிதைகளா என்று கேட்டபோது, 'கவிதைகளாக இருக்க வேண்டும் என்பதுதான் முக்கியம். புதியதா, பழையதா என்பது முக்கியமில்லை. ஆனால், மரபுக் கவிதைக்கு நல்ல மரியாதை உண்டு' என்று சொன்னார்கள்.

என் தாயார் தமிழ் பண்டிதை. தமிழில் வித்வான் பட்டம் பெற்றவர். அவரால் எனக்கு யாப்பு சொல்லித்தரப்பட்டது. ஆயினும், நான் புதுக் கவிதை எழுதுபவன் என்ற குழுவில் சார்ந்ததால், 'இந்தக் கூட்டத்திற்குப் போகலாமா, கூடாதா; ஒருவேளை நாம் கவிதை சொன்னால் கேலி செய்வார்களோ. இதெல்லாம் கவிதையா என்று இடித்துரைப்பார்களோ, சண்டை வந்துவிடுமோ' என்று பயந்தேன்.

அங்கே நடுநாயகமாக மஞ்சள் ஜிப்பாவுடன் உட்கார்ந்து கொண்டிருந்த மனிதர் பெயர்-பொன்னடியான் என்று சொன்னார்கள். அவர் கவிஞர்களை ஆதரித்து வழிநடத்துகிறார் என்று புகழ்ந்தார்கள்.

**தொலைவிலிருந்து பொன்னடியானை நான் உற்றுப் பார்த்தேன். நாகர்கோவிலிலிருந்து வந்த, ஆசிரியராய் வேலை பார்க்கும் கிறிஸ்தவ இளைஞரின் தோற்றம் அவரிடம் இருந்தது. குனிந்து யார் கவிதை யையோ மனதிற்குள் படித்துக் கொண்டிருந்ததைப் பார்க்கும்பொழுது லேசான கடுகடுப்பான ஆசிரியர் போல் எனக்கு அவர் தோற்றமளித்தார். கணக்குத் தவறாகப் போட்டால் கள்ளென்று பிரம்பால் அடிக்கிற கோபம், ஒரு படபடப்பு**

அவர் முகத்திலே தென்பட்டது. நான் கூட்டத்திற்குள் நுழையாமல் விலகிப் போய்விட வேண்டும் என்று தீர்மானம் செய்தேன். இருப்பினும் ஒரே ஒரு கவிதை கேட்கலாம் என்று அருகே போய் நின்று கொண்டேன்.

நான் அங்கு போய் நிற்க, பொன்னடியான் தலைதூக்கிப் பார்த்தார். 'யார்' என்று கேட்டார். கவிதை கேட்க வந்திருக்கிறேன் என்று நான் சொல்ல, 'வருக, வருக' என்று செந்தமிழில் அழைத்தார். அவருடைய இடப்பக்கம் மரியாதையின் நிமித்தம் ஒரே இடைவெளி விடப்பட்டிருந்தது. அந்த இடைவெளியைத் தட்டி உட்காரச் சொன்னார். கிட்டத்தட்ட முதல் ஆசனம் போல, முக்கியமான ஆசனம் போல என் மனதுக்குள் ஒரு எண்ணம் ஏற்பட நான் அவருக்கு அருகே போய் உட்கார்ந்து கொண்டேன்.

அங்கு பல கவிஞர்கள் வேட்டியும், அரைக்கை சட்டையுமாக இருக்க, நான் பேண்ட்டும், டீ ஷர்ட்டுமாய் போய் உட்கார்ந்து கொண்டது எனக்கே சற்று சங்கடமாக இருந்தது. ஒரு கவிஞன் இப்படி உடை உடுத்தலாகாது என்று எனக்குள்ளும் தோன்றியது. பொன்னடியான் போல ஒரு ஜிப்பா வாங்கிக் கொள்ள வேண்டும். வெள்ளை ஜிப்பாவும், வேட்டியுமாக இருந்தால் கவிஞனாகத் தோற்றமளிப்பதற்கு சௌகரியமாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டேன்.

"நண்பர்களே இன்று காலையில் நான் எழுதிய சில கவிதைகளை உங்களிடம் படித்துக் காண்பிப்பதில் விருப்பமுடையவனாக இருக்கிறேன். கவிதைகளைப் படிப்பதற்கு முன்பு உங்களை அறிமுகம் செய்து கொள்ளுங்கள். புதிய நண்பரும் தன்னை அறிமுகம் செய்து கொள்வார்" என்று சொல்ல, நான் என்னைப் பற்றிச் சொல்லி, கணையாழியில் என்னுடைய கவிதைகள் வந்திருக்கின்றன. நான் புதுக் கவிதை எழுதுகிறவன் என்று சொல்ல, சில பேர் முகம் சுளித்தார்கள். இரண்டு பேர் கை தட்டினார்கள். அந்தக் கூட்டத்தில் எனக்கு ஆதரவும், எதிர்ப்பும் இருப்பதை உடனடியாகக் கண்டு கொண்டு, நண்பர்களுடைய பெயர்களை ஆவலாக உற்றுக் கவனித்தேன். கிருஷ்ண மூர்த்தி என்ற தன் பெயரை கிருட்டிணமூர்த்தி என்று எதிரே உள்ள நண்பர் சொல்ல, அங்குள்ள நண்பர்களின் தமிழ்ப்பற்று எனக்குப் புரிந்தது.

பொன்னடியான் தன்னுடைய கவிதைகளைப் படித்தார். நான் மிகக் கூர்மையாகக் கேட்டேன். அறுசீர் விருத்தத்தில் இருந்தாலும் பொன்னடியான் கவிதைகள் மிக எளிமையாக இருந்தன. தூது போல் ஒரு கவிதை, மாலைப் பொழுது பற்றிய ஒரு கவிதை என்றுதான் ஞாபகப்படுத்திக் கொள்ள முடிகிறதே தவிர, கவிதையினுடைய வார்த்தைகள் எதுவும் இப்போது ஞாபகமில்லை.

கவிதைகளைப் படித்து முடித்து விட்டு, திரும்ப என்னைப் பார்க்க, 'மரபிலே இவ்வளவு எளிமையாய் கவிதை செய்ய முடியுமா என்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. எனக்கு யாப்பிலக்கணம் தெரியும். என் தாயார் தமிழ் பண்டிதை. என்னால் வெண்பா வேகமாக எழுத முடியும். ஆனாலும், நான் புதுக் கவிதை வடிவத்தையே விரும்புகின்றேன். உங்கள் மரபுக் கவிதை வடிவம், அதன் கட்டுமானம், உள்பொருள் எனக்குப் பிடித்திருந்தது.

**நான் இந்தக் கூட்டத்திற்கு தவறாது வந்து கலந்து கொள்ள விரும்புகிறேன் என்று சொல்ல, நண்பர்கள் ஆதரித்துக் கைதட்டினார்கள்.**

அந்தக் கூட்டத்தில்தான் எனக்கு இன்னொரு வழிகாட்டலும் கிடைத்தது. உங்களிடம் கவிதைகள் இருக்கிறது என்று சொன்னால், எதிரே அகில இந்திய வானொலி நிலையத்தில் கணேசன் என்பவர் இருக்கிறார். அவரிடம் கொண்டுபோய் உங்கள் கவிதைகளைக் காட்டினால், இளையபாரதம் என்ற பகுதியிலே உங்களுக்கு நேரம் ஒதுக்கித் தருவார்கள். கவிதைகள் படித்தால் இருபது ரூபாய், முப்பது ரூபாய் என்று காசும் தருவார்கள் என்று சொல்ல, நான் மறுநாளே அகில இந்திய வானொலி நிலையம் போய் நின்றேன்.

"இந்தக் கவிதைகள் போதாது. இன்னும் நிறைய எழுதிக் கொண்டு வாருங்கள். நான் இருபது நிமிட நேரம் ஒதுக்குகிறேன்" என்று அங்குள்ள அதிகாரி சொல்ல, நான் மிகச் சந்தோஷமாக கவிதைகள் எழுதுவது என்ற உறுதியான முடிவிற்கு வந்தேன். என்னைச் சுற்றியுள்ள நண்பர் களிலிருந்து மேலும் தனிமையாக்கப்பட்டேன்.

அடுத்த முறை கூட்டத்திற்கு நான் போனபோது, அங்கு பொன்னடியான் வரவில்லை. ஆனால், என் கவிதைகள் வானொலியில் அரங்கேறுகின்ற நாள் எனக்குத் தரப்பட்டுவிட்டது. இதை அங்குள்ள நண்பர்களிடம் சொன்ன போது அவர்கள் பாராட்டி கை குலுக்கினார்கள். மரபுக் கவிஞர்களும் நெருங்கி வந்து பேசினார்கள். எனக்கு இன்னொரு இலக்கிய வட்டம் கிடைத்தது.

**கவிஞர் பொன்னடியானைப் பற்றி அங்குள்ள அத்தனை பேரும் வாயாரப் புகழ்ந்தார்கள். 'இப்படி ஒரு சபை இவர் இல்லையெனில் கிடைத்திருக்காது. நான் இன்று கவிதை எழுதுகிறேன் என்றால் இந்த நண்பர்கள்தான் காரணம். இந்த நண்பர்கள் கிடைக்க கவிஞர் பொன்னடியான் காரணம். அலுக்காது சலிக்காது கவிஞர் பொன்னடியான் இந்தக் கூட்டத்தை நடத்திக் கொண்டிருக்கிறார்** என்று சொல்லும்போதே, 'அந்தக் கூட்டத்திற்குத் தன்னால் வர முடியவில்லை என்றும், ஆனாலும் தவறாது கூட்டத்தை நடத்தும்படியாகவும் பொன்னடியான் அவர்களிடமிருந்து தகவல் வந்தது. நண்பர்கள் அன்று பொன்னடியான் இல்லாமல் கூட்டம் நடத்தினார்கள். தங்கள் கவிதைகளைப் பரிமாறிக் கொண்டார்கள். நான் சமீபகாலமாய் எழுதிய என்னுடைய புதுக் கவிதைகளைப் படித்தேன்.

*உனக்கென்ன*
*சாமி பூதம் கோவில் குளம் ஆயிரம் ஆயிரம்*
*ஜாலியாய்ப் பொழுது போகும் வலப் பக்கக் கடல் மணலை*
*இடப் பக்கம் இறைத் திறைத்து நகக் கணுக்கள் வலிக்கின்றன*
*அடியே நாளையேனும் மறக்காமல் வா.*

என்று நான் படிக்க, சிறிது நேர இடைவெளி விட்டு அத்தனை பேரும் பலத்த கையொலி எழுப்பினார்கள். அந்தக் கையொலி நெஞ்சில் அமிர்தமாய்ப் பொழிந்தது.



'அஞ்சு வரியிலே பின்னுட்டீங்கண்ணே! ரொம்ப நல்லா சொல்லியிருக்கீங்க. புதுக் கவிதையை இப்படித்தான் செய்யணும். லேசா அறுசீர் விருத்தத்தோட சாயல் இருக்கு பாத்தீங்களா' என்று மரபுக் கவிஞர் சொல்ல, இல்லை விருத்தம் இங்கே உடைத்துச் சொல்லப்பட்டிருக்கிறது' என்று இன்னொரு புதுக் கவிஞர் சொல்ல, அங்கு சுவையான விவாதம் நடந்தது. என் கவிதையைப் பாராட்ட முதன் முதலாய் எனக்கென்று ஒரு ஆதரவுக் குழாம் அமைந்தது. இது பொன்னடியான் எனக்குக் கொடுத்த கொடை.

இந்தக் கைதட்டல் இல்லையெனில், இந்த நண்பர் வட்டம் இல்லையெனில், ஆதரவுடன் பேசி அணைத்துக் கொள்வார் இல்லையெனில் நான் கவிதை எழுதுவதை அப்போதே கைவிட்டிருப்பேன். தபாலில் பி.ஏ. எம்.ஏ. என்று உபயோகமற்ற படிப்பை படித்துக் கொண்டிருப்பேன். ஒரு உதவாக்கரை வேலையில் உயர் பதவிக்குப் போயிருப்பேன்.

திருவல்லிக்கேணியில் சரஸ்வதி கான நிலையம்னு ஒரு இடம் இருக்கு. அதுக்கு மாடியிலே ஞானக் கூத்தன்னு ஒரு கவிஞர் இருக்காரு. அவருடைய ரூமில புதுக் கவிஞர்கள் ஒன்றாக சேரறாங்க. இன்னைக்குக் கூட்டம் தேவநேயப் பாவாணர் நூலகத்துல இருக்கு. வர்றீங்களா? நண்பர் அழைக்க, அங்கிருந்து கிளம்பி, அவசர அவசரமாக நூலகத்திற்குப் போனேன். அங்கே எனக்கேற்ற புதுக் கவிதைக் குழு கிடைத்தது.

அன்றைக்கு கவிஞர் பொன்னடியான் அவர்கள் கூட்டத்திற்குப்போகாமல் இருந்திருந்தால், கவிஞர் பொன்னடியான் தன்னுடைய இடது பக்கத்தில் உட்கார் என்று சொல்லாமல் இருந்திருந்தால், என்னை அங்கே கவிதை

சொல்ல பணிக்காமல் இருந்திருந்தால், அங்கே நான் பாராட்டப்படாமல் போயிருந்தால், என் வாழ்க்கை வெகு நிச்சயமாய் திசை மாறிப் போயிருக்கும். கவிஞர் பொன்னடியான் தன்னையுமறி யாமல் இந்த பாலகுமாரனைத் திசை திருப்பி அவனுக்குண்டான ஆட்களோடு சேர்த்து விட்டார். அவன் அந்த இடத்திலே வேகமாய் வளர்ந்தான்.

இன்றைக்கும் அவன் கவிஞர் பொன்னடியானின் அன்பை, அவர் கூட்டிய கூட்டத்தை, கைக் காசு செலவு செய்து நடத்திய நிகழ்ச்சிகளை மிக நன்றியோடு நினைத்துக் கொள்கிறான்.

கவிஞர் பொன்னடியானுடைய கூட்டத்திற்குப் போனதால்தான் மரபுக் கவிதை பற்றிய எதிர்ப்பு எனக்கு வெகுவாகக் குறைந்து போயிற்று. மரபுக் கவிதை புதுக் கவிஞனுக்கு நிச்சயம் தெரிந்தாக வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. மரபுக் கவிதை தெரிந்திருந்தால்தான் பைந்தமிழ் இலக்கியம் பயிற்சி பெற முடியும் என்பதும் எனக்குப் புரிந்தது. பழந்தமிழ் இலக்கியப் பயிற்சி இல்லாமல் ஒருவன் கவிதை எழுத வருவது மகா பாவம். அது தவறு என்பதும் என்னுடைய எண்ணமாயிற்று. கிட்டத்தட்ட என் எல்லாக் கவிதைகளுமே எதுகை மோனை நயத்தோடும் சீர்தட்டாமலும் இருக்கும்படி நான் பார்த்துக் கொண்டேன். உள்ளுக்குள் சொல்கிற விஷயம் புதிது. மொழியின் ஆளுமை புதிது என்பது தவிர அளவுகள் மரபு சார்ந்த தாகவே என்னிடமிருந்து வெளிப்பட்டன. மரபை கண் மூடித்தனமாக புதுக் கவிஞர்கள் எதிர்த்துக் கொண்டிருந்த காலத்தில், நான் கம்பனையும், இளங்கோவையும் தேவார, திருவாசகங்களையும், பிரபந்தங்களை யும் வெகு வேகமாய் மனனம் பண்ண வேண்டிய அவசியத்தை உணர்ந்து கொண்டேன்.

நானும், கவிஞர் ஞானக் கூத்தனும் சங்கப் பாடல்களை மியூசியம் தியேட்டர் வாசலில் உட்கார்ந்து உரக்கப் படித்து விவாதிப்போம். குறுந் தொகையின் பல பாட்டுக்கள் இன்னும் எனக்கு ஞாபகமிருக்க அன்றைய பயிற்சிதான் காரணம். அந்தப் பயிற்சிக்கு கவிஞர் பொன்னடியான் தான் ஆரம்ப வித்து.

கவிதைகள் திடமாக எழுத முடிந்ததால்தான், சரியாகப் புரிந்து கொள்ள முடிந்ததால்தான், பழந்தமிழ் இலக்கியப் பயிற்சி இருந்ததால் தான் என்னால் உரைநடையை ஒரு அழகிய வீச்சோடு எழுத முடிந்தது. கதைகளின் நடுவே மிகச் சரியான இடத்தில் உணர்வுகளை வெளிக் காட்ட, பிரபந்தங்களையும் தேவார திருவாசகங்களையும் நான் அழகாகப் புகுத்தினேன். அதனாலேயே பலராலும் கவனிக்கப்பட்டேன்.

உரைநடை என்கிற சிறு தேர் ஒட்டுவதற்கு எனக்கு நன்கு தெரிந்ததும் கவிதையிலிருந்து விலகி முழுக்க முழுக்க கதை எழுதுபவனானேன்.

என் இலக்கிய வளர்ச்சிக்கு ஆரம்ப காரணம் கவிஞர் பொன்னடியான். அவருக்கு விழா எடுக்கிறார்கள் என்று தெரிந்ததும் மிக சந்தோஷமாக என் ஆதரவை, அன்பைத் தெரிவித்தேன். பயன்படுபவர்களாக வேண்டும் என்பது தான் அடிப்படை விதி எனப்படுமாயின், கவிஞர் பொன்னடி யானை விட இந்தச் சமுதாயத்திற்கு மிகப் பெரிய உதவி செய்தவர்கள் வேறு எவரும் இல்லை. தமிழ்ச் சமுதாயத்தில் பல இளைஞர்கள் கவிஞர் பொன்னடியானை இன்னமும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை என்னால் உணர முடிகிறது.

இலக்கியம் பேசினாலே இழுக்கு என்ற வறண்ட காலத்திலே, தமிழ் பேசுவதே தரக் குறைவு என்று நினைத்துக் கொண்டிருந்த என் இளமைப் பருவத்திலே இப்படிப்பட்ட கூட்டங்களைக் கூட்டி தன் மிகுதியான நேரத்தை இளைஞர்களுக்கு நடுவே செலவழித்து, தன் கைக்காசு போட்டு பத்திரிகை நடத்தி, தமிழுக்கு அவர் செய்திருக்கும் தொண்டு மிக மிகப் பெரியது. தனியே ஒரு அரசாங்கம் செய்ய வேண்டிய விஷயங்களையெல்லாம் மிக எளிதாய் கவிஞர் பொன்னடியான் தன் வாழ்நாளில் செய்திருக்கிறார். ஆயிரக்கணக்கான கவிஞர்களை, தமிழ் ஆர்வலர்களை உருவாக்கியிருக்கிறார்.

ஒரு நல்ல பரம்பரையை உருவாக்குவதை விட மிகச் சீரிய பணி உலகத்தில் எதுவுமில்லை. இதுதான் இறைப்பணி. இவர்கள்தான் இறையம்சம் உள்ளவர்கள். இன்றைக்கும் கவிஞர் பொன்னடியான் என் கண்களுக்கு இறைவனடியாராக, இறைவன் புகழைப் பரப்புகின்ற சமயக் குரவராக காட்சியளிக்கின்றார். அவர் தொண்டும், வாழ்வும் வளம்பெற வேண்டுமென்று என் சத்குருநாதன் யோகிராம்சுரத்குமார் அவர்களை மனமுருக பிரார்த்தித்து இந்தக் கட்டுரையை முடித்துக் கொள்கிறேன்.



# ஏடெடுத்தேன்

## கலைமாமணி
## மன்னர் மன்னன்

ஏடெடுத்தார் கவிஞர். எண்ணக்குவியலை வண்ணக்கவிதையாக வடித்துவிட்டார். அது மக்களைச் சென்றடையவேண்டுமே!

நாட்டில் வெளிவந்த ஏடுகள் சிலவற்றில் இவரின் படைப்புகள் வெளிவந்ததுண்டு. இவர் முற்போக்குச் சிந்தனைகளை மிக ஆழமாக - காரமாக வெளியிடத் தொடங்கிய காலந்தொட்டு அந்த ஏடுகள் இவரைத் தீண்டுவதில்லை.

அப்படியானால் கவிஞர் கரும்படிச்சாறாயினும் இரும்படித் தீயாயினும் மக்களின் பார்வையை எட்டிப் பிடித்து - அவர்களின் இதயத்தில் இடம் பிடித்து அவர்களின் செயலில் சூடு பிடித்து ஒரு சமுதாயம் மாற்றம் நிகழ வேண்டுமே.

இதற்கென்ன வழி?

சொந்தமாக ஏடு வெளியிடுவது ஒன்றே வழி.



வேறு வழியில்லை. ஏடு நடத்த வேண்டும். எப்படி? சிந்தனையில் ஆழ்கிறார் கவிஞர். எங்கெல்லாமோ சுற்றித் திரிந்துகொண்டிருந்த அவருடைய மனப் பறவை அவரின் பரந்த நெற்றியில் நெடுங்கோடுகளாகச் சுருண்டு- பின் நீண்டு.....

"தம்பி!"

என்னை அழைத்தார்.

"அச்சுக்கூடத்தை நம் வீட்டிற்கே கொண்டு வந்து விடலாம். மாதம் ஒரு வெளியீடு. நானும் வீட்டில்தானே இருக்கப் போகிறேன். நீயும் கல்லூரிப் படிப்பை விட்டாச்சு!"

சென்னைக்கு நாங்கள் எடுத்துச் சென்றிருந்த எங்கள் அச்சகம் எவர் எவருடைய சொந்தமாகவோ பறிபோய்விடப் பார்த்தது. தப்பிப் பிழைத்துப் பத்திரப் படுத்தி வைத்திருந்தோம். அது மீண்டும் எங்கள் வீட்டுத் தாழ்வாரத்தில் வந்து அமர்ந்தது.

தாம் எழுதுவதெல்லாம் உடனடியாக அச்சகத்தில் புகுந்து, ஈய வடிவெடுத்து, மை பூசி, இயந்திரத்தில் ஏறி தாளில் தன் சுவடுகளை அழுத்தி மீண்டும் தம் கைக்கு வந்து சேரும்போது பார்த்தால், அந்தப் படைப்பாளிக்கு மகிழ்ச்சி பெருகிக் கூத்தாடத்தான் தோன்றும்!

பழங்கால மரச்சாய்வு நாற்காலியில் நீண்ட இரு கைகளின் குறுக்காகப் பலகை ஒன்று. அதன்மீது அடுக்கியுள்ள தாளில் தம் எழுதுகோலை நட்டால், சரசரவெனப் போய்க் கொண்டே இருக்கும்.

ஆகா., என்ன இனிமை! - எழுதுகிறேன், அச்சுத் தொழிலாளி வருகிறார். எடுத்துச் செல்கிறார். பலமுறை திருத்தப்பட்டு அச்சு உருவம் பெற்றுவிடுகிறது.

இந்த இனிமையின் நடுவே அவர் நினைப்பில் மின்னல் ஒன்று வெட்டுகிறது. -

'டே இவனே!" மொட்டையாய் அழைப்பார். அவரின் கவனம் முழுவதும் படைப்பில் ஊறிப்போய் விட்டதால், காலம் - நேரம், பசி - தாகம், வருவார் - போவார், பணியாளர் - அச்சகம், பதிப்பு, எதுவுமே நினைவில்லை.

தானும் அவருமாய் "சல்லாபம்" புரிந்திருக்கையில்-

"ஊம்!" உரத்த குரலில் ஊம்காரம் அழைப்பு ஒலியாய் வரும்.

அச்சுக்கோப்பவர்கள் ஞானப்பிரகாசம், சுப்பிரமணியன், லட்சுமணன், பொன்னுவேலு, இவர்களில் யாராவது ஒருவர் எதிரே வந்து நிற்பார். எழுதிய தாளை அவரிடம் நீட்டுவார். சிறிது நேரத்தில் திரும்பித் திரும்பிப் பார்ப்பார். யாரும் இல்லை! மீண்டும் எனக்கு அழைப்பு வரும்.

"அதெல்லாம் அடுக்கியாச்சா?"

அடுக்கியவற்றை இவரின் திருத்தத்திற்காகக் கொண்டு வந்து தருவேன்

"எங்கே அவன்?"

மிரட்டலாய்க் குரல் வரும்.

அச்சகப் பணியாளர்கள் வேலை நேரம் முடிந்து வீட்டிற்குப் போய் இருப்பார்கள். அவர்களுக்காக நான் பேச வேண்டிய நிலை.

"அன்று மாலை, கவிஞர் பொதுக்கூட்டம் ஒன்றில் பேசுகையில்" - என்பதற்குப் பதிலாக மாலைக் கவிஞர் என்று கோக்கப்பட்டிருந்தது. மாலைக் கவிஞராவது, காலைக் கவிஞராவது!

கவிஞருக்கு அடங்காத சினம். "கூப்பிடு ஞானப்பிரகாசத்தை!"

அவர் இப்போது இங்கில்லை. நானே அவருக்காகப் பேசுகிறேன். "மாலைக் கவிஞரென்று" இச்செய்தியை எழுதிக் கொடுத்த புலவரே எழுதியிருக்கிறார்.

புலவர் சொன்னா, நீ என்ன செய்துகிட்டு இருந்தே'......"

உண்மைதான். நானாவது திருத்தியிருக்கலாம். ஆனால், இவருடைய திருத்தத்திற்கு அளிக்கப்பட்டதுதானே அந்தத் தாள்? திருத்துவதுதானே என்றெல்லாம் என் மனம் வாதம் புரிகிறது. வாய்திறக்க வழியில்லை.

அச்சுக் கோப்பவர், அச்சு எந்திரம் ஓட்டுபவர். எல்லாப் பணியாளர்களும் முறையாக இலக்கணம் படித்தவர்கள் என்று நினைக்க வழியில்லை. ஆனால், இவரிடம் வந்து பணி செய்தவர்கள் இலக்கணம் கற்றுப் போனார்கள் என்பதை மறுப்பதற்கில்லை.

மாதந்தோறும் "குயில்" இதழை வெளியிடுகையில் இவ்வாறு எண்ணற்ற இடர்ப்பாடுகள். பணியாளர்க்கும் எந்தையார்க்கும் இடையில் அவ்வப்போது சச்சரவுகள், மனத்தாங்கல்கள் வரும். நடுவராக நான் புகுந்து, தணிவு காட்டி, வேலை தொடரும்படியாக ஏற்பாடு செய்வேன். குயில் மாத இதழின் ஓராண்டு நிறைவு மலர் ஒன்று வெளியிடுவதாக அறிவிக்கப்பட்டது. "கடல்மேற் குமிழிகள்" என்னும் நூல் அச்சாகிக் கொண்டிருந்தது. அவர் எழுத எழுத அச்சாகி வந்ததால் பக்கங்கள் அதிகமாகிக் கொண்டே இருந்ததைக் கண்டு, கட்டுப்படியாகும் அளவில் அந்த நூலின் பதிப்பு வேலை முடியவேண்டும். மெல்ல எந்தையாரிடம் இதை நான் சொல்ல, மிக நீண்ட முற்பகுதியாக இருந்த காப்பியம், திடுமென நிறைவு எய்திவிட்டது.

"சேரதாண்டவம்" என்ற வரலாற்று நாடகமும் இப்படித்தான் உருவாகியிருக்கிறது.

பதிப்பாளருக்கும் அச்சகத்தாருக்கும் ஏற்படக்கூடிய சிக்கல்களை இந்தப் படைப்பாளி அறிந்துகொள்ளாமல் எழுத்தில் தன் மனதை ஓட்டிக் கொண்டே இருந்து விட்டால், சிக்கல்கள் பல ஏற்படுவதுண்டு. பதிப்பு வேலை முடிந்து மேலட்டை போட்டாக வேண்டும். கவிஞர் தமக்கேயுரிய வடிவம் ஒன்றை மெலட்டையாகப் பதிக்க விரும்புகிறார். படத்தின் சுற்றுப்புறங்கள் பொன்னிறமாய் இருக்கவேண்டும் என்பது அந்தப் படைப்பாளியின் ஆவல். அச்சகப் பணியாளர்களின் கருத்தைக் கேட்கிறேன். பொன்னிறமாய் பதிக்கப்பட வேண்டிய பகுதியை முதலில்

மஞ்சள் மையில் நிறைத்துவிட்டு, பொன்னிற மென்பொடியை பஞ்சில் ஒற்றி அதை மஞ்சள் மையின் மீது ஒற்றியெடுக்கின்ற பழங்கால முறையை அவர்கள் சொன்னார்கள். சென்னைக்குப் போனார் பாவேந்தர். அவரிடம் பொன்னிறத்தில் அச்சடிக்கும் புதிய முறைகள் ஏதேனும் தெரிந்துவருமாறு சொல்லியிருந்தேன். சென்னை அத்வானி நிறு வனத்துதிற்குச் சென்று ஓர் எண்ணையும் அச்சுக் கட்டையும் பொன்னிற மையும், பொன்னிறத் துகளும் வாங்கிக் கொண்டு வந்தார். பணி யாளர்களும் நானும் பலமுறை இவைகளை ஒன்று சேர்த்து அச்சிட முயன்றோம். பொன் துகள் படிந்தது. ஆனால், ஈரமாகவே இருந்து கொண்டு இருந்தது. முகப்பு அட்டை இரண்டாயிரம் படிகள் அச்சிட்டு எங்கள் வீடு முழுவதும் ஒன்றன் பக்கம் ஒன்றாய் அடுக்கி இரவு பகலாய் உலர்த்தினோம். வீட்டில் நடமாடவும் வழியில்லை. சமையல் கூடத்தில் வேலையும் நடைபெற முடியவில்லை. இரண்டு இரவுகளும் ஒரு பகல் முழுவதும், இந்த அட்டைகள் வீடு நிறைந்திருந்தது. வீடெல்லாம் பொன் துகள்கள் பறந்து எங்கள் கை முகம், வீட்டின் சுவர், நிலை பேழை, மெத்தை, தலையணை, பாய் எங்கும் பொன் துகள்!!

படைப்பாளியின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

"பாரதிதாசன் கவிதைகள் இரண்டாம் பகுதியின் முதல் பதிப்பு," எங்கள் வீட்டையே பொன் துகளில் நனைத்தது.

எந்தையாரின் விருப்பப்படி ஓரளவேனும் மேலட்டை அமைந்து விட்டதில் எங்களுக்கெல்லாம் மகிழ்ச்சிதான். புத்தகங்களை ஒன்றன் மீது ஒன்று வைத்துக் கட்டி வெளியூருக்கு அனுப்பச் சென்ற அஞ்சலகத்திலும் புகை வண்டி நிலையத்திலும் கூட இந்தப் பொன் துகள்கள் பரவியதை என்னால் மறக்கமுடியவில்லை. அச்சக வேலை களில் நிறைந்த பழக்கம் உடையவர் பாவேந்தர். அதுவே சிக்கலாகவும் இருந்தது. மிகக் குறுகிய காலத்தில் அச்சிட்டு முடிந்த 8 பக்கங்களைச் சுப்பிரமணியன் கொண்டு வந்து இவரிடம் காட்டுகிறார். எழுத்துகள் பலவற்றில் புள்ளியே இல்லை. அச்சு விழவேயில்லை. படிக்க முடியாமல் திணற வேண்டியிருக்கிறது. சுப்பிரமணியனை நோக்கி, "இந்த நாலு வரியைப் படித்துக் காட்டு" என்கிறார். அவரும் சரியாகவே படித்துக் காட்டி விடுகிறார். சுப்பிரமணியன் படித்தத் தாளைப் பறித்து இவர் படிக்கிறார். "புள்ளிகள் இல்லை. புள்ளியெல்லாம் எங்கே? அச்சு சரியாக விழவில்லை." என்கிறார்.

சுப்பிரமணியன் மிக மென்மையாக "கையினால் புள்ளி வைச்சுட்டாப்போச்சு" என்கிறார். நான் குறுக்கிடுகிறேன். இயந்திரத்தில் சரியான பதிவு இல்லை. அதைச் சீர்படுத்த வேண்டும் என்கிறேன். கையில் இருந்தவற்றையெல்லாம் சுக்கல் சுக்கலாகக் கிழித்து வீசி எறிந்துவிட்டு, "இவன் சம்பளத்தைக் கொடுத்து அனுப்பிவிடு." என்று எனக்குக் கட்டளை இடுகிறார்.

ஏடெடுத்தேன்.......கவியொன்று எழுதிட.....! இவர் பாடத்தொடங்கும் போது தாமரைப் பூக்களும் தடாகமும் மற்ற எழிலின் கூட்டங்களும் எதிர்வந்து நின்றது கற்பனைதான். ஆனால், ஏடெடுத்த அந்த

படைப்பாளியின் எழுத்து அச்சேறி மக்களைச் சென்றடைய எத்தனை எத்தனை பாடுகள் பட்டாக வேண்டும்.

பாவேந்தரின் "குயில்" மாத. இதழ் 1948-ஆம் ஆண்டு தொடங்கி, நடந்தது. புத்தகங்கள் புதிய தொகுப்புகளும், பழைய நூலின் மறுபதிப்புகளும் வெளிவந்தன. இவற்றிற்கு அச்சு வடிவம் கொடுப்பதில் எண்ணற்ற இடர்பாடுகள். இழப்புகள்.

எத்தனை இருந்தாலும் அவருடைய படைப்புகள் நூல் வடிவம் பெற்று வெளிவரச் செய்வதில் அவர் மிகுந்த பிடிவாதம் காட்டினார்.

'ஒரு படைப்பாளி இத்தனை தொல்லைகள் படத்தான் வேண்டுமா?' என்று கேட்பீர்கள்.

நாமெல்லாம் எண்ணிப் பார்க்கமுடியாத அளவுக்கு இடர்பாடுகள் இருந்தன. "அன்பர்கள்" தொகை அனுப்பாமலே தங்கள் படைப்புகளை மட்டும் அனுப்புவார்கள். விற்பனையாளர்கள் பட்டியல் தொகையைப் பற்றிக் கவலைப்படமாட்டார்கள். அஞ்சல் செலவுகளே நம்மை அஞ்ச வைக்கும். இடையிடையே நிர்வாகக் குளறுபடிகள். அச்சகப் பணியாளர்களின் தேவைகள். இவைகளையெல்லாம் சமாளிப்பதில் எந்தையாரின் கவனம் திசை மாறிவிட்டால் அவருடைய படைப்பு வேலையில் அவருடைய வேலையில் தொய்வு விழுந்துவிடுமே என்று கவலைப்பட்டு நான் என் பள்ளிப் படிப்பை நிறுத்திவிட்டு, மேனி யெல்லாம் சொறியும் சிறங்குமாய் அவதியுற்ற நேரத்திலும், அச்சகம், பதிப்பு, விற்பனை முதலிய எல்லாப் பணிகளிலும் சலிப்பின்றி ஆழ்ந்தேன்

இவற்றிற்கெல்லாம் பயனாகப் பணத்தை நாங்கள் எதிர்பார்த்திருக்க வில்லை. பலனை எதிர்பார்த்தது உண்மைதான்.

எந்தப் பலனை?

தமிழ் மக்கள் தாழ்நிலையிலிருந்து எழுந்து வீறுகொண்டு தங்கள் உரிமைக்காகக் குரல் கொடுக்க வேண்டும். தமிழ் மொழி மேம்பாட்டிற்காக உழைக்க வேண்டும் என்று எதிர்பார்த்தோம் அவருடைய எழுச்சிக் குரல் தமிழ்நாட்டில் பெரும் பயனை விளைத்தது என்பது முற்றிலும் உண்மை.

பாவேந்தர் ஏடெடுத்துத் தம் எழுத்துப் பணியைத் தொடர்ந்த போதெல்லாம், அவர் எதிர்கொள்ள வேண்டி இருந்த பல துன்பங்களை-

இதோ கவிஞர் பொன்னடியான் தம் பங்குக்கு இவரும் எதிர் கொண்டு, கவிதை வாளினை வீசிக் கொண்டு இருக்கிறார்.

கடந்த 35 ஆண்டுகளாகக் கவிஞர் பொன்னடியான் தமது கடுமையான உழைப்பினாலும் கவிதைத் தொண்டு உள்ளத்தினாலும், "முல்லைச் ்ரம்" இதழினை விடாமல் வெளியிட்டு வருகின்றதைக் கண்டு நான் திகைப்பேன். இதனால் பொருள் இழப்பு ஏற்படுவதுடன், பல வஞ்சகர்களின் பொல்லாப்பும் ஏற்பட்டு வருவதையும் நன்கு அறிவேன்.

சிறுமை கண்டு வெகுண்டெழும் பாங்குடையவர் பொன்னடியான்! தம்மைச் சுற்றிலும் பொய்யும் புரட்டும் தொழிலாய்க் கொண்ட பலரைச்

சாடி விடுவார். இதன் காரணமாக ஏற்படும் இடர்பாடுகளைக் கண்டு அஞ்சமாட்டார்.

இழி செயல் புரிவாரைக் கண்டு எட்டி நடந்துவிடு என்று நான் கூறுவதுண்டு. "நம்ம காலத்தில் இவர்களின் பூண்டை அழித்தொழிந்தா லொழிய இந்தப் பதர்களின் வாலாட்டம் ஒயாது" என்ற ஆவேசம் கொண்டவர் பொன்னடியான்.

பாவேந்தரின் சொந்த வாழ்க்கையில் நிகழ்ந்தவற்றை ஒரு தொகுப்பாய் அவர் எழுதும்போது அவரின் வாய்மை நெஞ்சம் பதறும். பாவேந்தர் பாடலில் அவர்க்குள்ள ஈடுபாடு நமக்கெல்லாம் புலப்படும் என்பமு மிகையன்று.

"புதுவை முரசு" வார இதழ், ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி "கவிதா மண்டலம்" கவிதைத் திங்கள் இதழ், 'குயில்' கவிதை இதழ் - இவ்வாறு பல இதழ்களை வெளியிட்டுத் தமக்குப் பின் ஒரு கவிதைப் பட்டாளத்தை உருவாக்கிய பாவேந்தரின் அடியொற்றிய பொன்னடியான் பாட்டு வழியில் வெற்றி வீரராக நடைபோடுவது கண்டு களிப்புறுகிறேன். நெடிய பாதையில் பயணம் தொடரட்டும். தமிழ் நலம் சிறக்கட்டும்.

ஏடெடுத்துள்ள இவருக்கு நாம் தோள் கொடுக்க வேண்டும். கவிஞரின் வாள் வீச்சு, இந்த மனித நேயத்தின்பாற்பட்டது என்பதால், அது வெற்றியடையும் என்பது உறுதி.

கவிஞர் பொன்னடியானின் தொண்டு வெல்க!

– மன்னர் மன்னன்

27–6–2000

பகுத்தறிவுத் தளபதி திருவாரூர் தங்கராசு

பகுத்தறிவு இதழ் பாராட்டு:

மதிப்புமிகு திருவாரூர் தங்கராசு அவர்கள் பகுத்தறிவு இயக்கத்தின் பண்பார்ந்த தலைவர்களில் ஒருவர். 'ரத்தக்கண்ணீர்' 'பெற்ற மனம்' போன்ற பல பிரபலமான படங்களில் திரைக்கதை -வசன கர்த்தா. "பாவேந்தர் பாரதிதாசன் அவர்களைத் தவிர உரசில் வேறு பெருங்கவிஞர் இல்லை" என்ற விடாப்பிடியான கொள்கை உடையவர். அப்பெருமகனார் தன் 'பகுத்தறிவு' இதழில் (29-7-75) 'கேட்டார்கள்' என்ற பகுதியில் அளித்துள்ள கேள்வி-பதில் இதோ:

கேள்வி: பாவேந்தர் பாரதிதாசனுக்குப் பிறகு அவரது புரட்சியும், இதயத்திலிருந்து எழும் எழுச்சியும், புதுமையும் மிக்கக் கவிதை வரிகளை யாருடைய பாக்களில் அதிகம் காணலாம்?

பதில்: பாவேந்தரே தனது வாரிசுபோல கடைசி நாட்களில் விட்டுப் போயிருக்கும் கவிஞர் பொன்னடியான் கவிதைகளை நீங்கள் இன்னும் பார்க்கவில்லையா?

நன்றி – 'பகுத்தறிவு' 29–07–75

# இவர் ஒரு ஆச்சரியம்



## புஷ்பா தங்கதுரை

ஒருவரைப் பற்றி அதிகம் அறிய நேரும் போது இவரை முன்னமே தெரிந்து கொள்ளாமல் போனோமே என்று நினைப்பது உண்டு!

கவிஞர் பொன்னடியான் எனக்கு அப்படி ஒருவர்.

அண்மையில் !சில வருடங்களில்) இவர் எனக்குப் பழக்கம் ஆனவர்

பொதுவாக கவிஞர் என்றால் தயக்கப்படுவேன்.

அதுவும் பாவேந்தர் பாரதிதாசனின் சீடர் என்று அறிந்த போது மிகவும் தயக்கம்

பல கவிஞர்கள் தமிழில் சற்று வெறியான பற்றை வைத்திருப்பார்கள். அதை நான் குறை சொல்லவில்லை.) அவர்கள் எனது நடைமுறைத் தமிழை ரசிக்க மாட்டார்கள். ஒருவேளை அதை எதிர்த்தாலும் எதிர்ப்பார்கள் என்று நினைப்பது உண்டு. அந்த நினைப்பு என் தவறாகக் கூட இருக்கலாம்.

எனவே கவிஞர் பொன்னடியானின் அறிமுகம் கிடைத்த பிறகு சற்று இடைவெளியோடுதான் இருந்தேன்.

ஆனால் ஆச்சரியம். கவிஞர் பொன்னடியான் என்னை விடவில்லை. அதே புன்னகை நிறைந்த முகத்துடன் எங்கு கண்டாலும் பேசினார் அரவணைத்துக் கூடப் பேசினார்.

ஒரு சமயம் இருவரும் சிங்கப்பூரில் சந்தித்தோம். அங்கே நெருக்கம் அதிகமாகியது.

பின்னர் என் தயக்கம் தெளிந்து அவரிடம் தைரியமாகப் பேசப் பேச, கிட்டத்தட்ட நிறைய விஷயங்களில் என்னைப் போலவே அவர் திறந்த மனத்தோடு இருப்பதைப் பார்த்து அதிசயப்பட்டேன்.

இவரைப் பற்றி இன்னும் அதிகம் தமிழகம் அறிய வேண்டும் என்று ஆதங்கத்தோடு நினைப்பவன் நான்.

இன்னொரு விஷயம்!

இவர் மூலம் பாவேந்தர் பற்றியும் நான் அறிய நேர்ந்தது.

புதுவையில் சில வருடங்கள் நான் இருந்தேன்.

பெருமாள் கோவில் தெருவில் அவரது வீட்டுக்கு நேர் எதிர் வீட்டு மாடியில் வசித்து வந்தேன். (அப்போது எனக்கு டீன் ஏஜ்.)

காலையில் தமது வீட்டு மாடியில் பாவேந்தர் வருவதைப் பிரமையோடு பார்ப்பேன்.

சீடர் பொன்னடியான் மூலம் குருவை (பாவேந்தரை) இப்போது அறிந்து கொள்ளும்போது, "ஆகா! குருவிடம் பழகாமல் இருந்துவிட்டோமே! பயத்தில் விலகி இருந்து விட்டோமே! " என்று நினைத்துக்கொள்கிறேன்.

தமிழைப் புதுக் கொணங்களில் என்னைப் பார்க்க வைத்தவர் கவிஞர் பொான்னடியான்.

எங்கெயோ ஒட்டை! எங்கேயோ பணம் வெளியே ஓடுகிறது.

பலன், நஷ்டம் நாலு லட்சம் ருபாய்.

பத்திரிகை நடத்துவது மிகவும் கடினம்.

யாருக்.குமே!

பெரிய நிறுவனங்கள்தான் நடத்த முடியும்.

தனி ஆட்கள் நடத்துவது கஷ்டம்.

'இலக்கியம்', 'கவிதை' என்று எல்லோரும் மயக்கத்தோடு கூறுவார்களே ஒழிய, ஒருவரும் பத்திரிகை வாங்கிப் படிக்க முன் வர மாட்டார்கள்.

முன்னைவிட, தற்போது பத்திரிகை உலகம் திண்டாடுகிறது.

விற்பனையைக் கூட்டவோ, நிலை நிறுத்தவோ பத்திரிகை நிறுவனங்கள் படாதபாடு படுகின்றன.

இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையில் கவிஞர் பொன்னடியான் அவர்கள் "முல்லைச்சரம்" நடத்துவது ஒரு உலக அதிசயம் போல் தோன்றுகிறது.

ஓராண்டு, இரண்டு ஆண்டுகள் அல்ல 35 ஆண்டுகளுக்கு மேலாக நடத்தி வருகிறார்.

இதன் லாப நஷ்டத்தை அவரிடம் பேசிய போது அதிர்ச்சி அடைந்தேன்.

பெரிய நிறுவனம் இல்லாதவர்கள் நடத்தும் பத்திரிகைகள், உலகில் அடைந்த பேற்றைத் தான் இவரும் அடைந்திருக்கிறார்.

அதாவது நஷ்டம்.

அவரது தோற்றம் என் மனத்தில் பெரிதாக விஸ்வரூபம் எடுத்துவிட்டது.

பரந்த நோக்கில் மொழியைப் பற்றி மட்டுமல்ல, வரலாற்றையும் பார்க்கும் மனம் படைத்திருந்தார்.

குறுகிய கூட்டுக்குள் இல்லை.

இதனால் அன்னியோன்யம் ஏற்பட்டதால் நாங்கள் நிறைய விஷயங்களில் பல மணிகள் பேச சந்தர்ப்பங்கள் கிடைத்தது.

அவர் எழுதியதை அதிகம் படித்தறியாத நான் அவர் கவிதைகளை நிறைய படிக்கத் தொடங்கினேன்.

சந்தமும், பொருளும், அழகான வார்த்தைகளும் நிறைந்த இன்பச் சொட்டுக்களாகத் தோன்றின அவை! வார்த்தைகள் மனத்துக்குள் அர்த்தங்களாகவே (பொருளாகவே) நழுவிப் புகுந்தன. தங்கு தடை ஏதும் இல்லை.

செக்ஸ் தொடங்கி இலக்கியக் காட்சிகள் வரை பல பொருள்களில் அருமையான சொல் பிரயோகங்களுடன் விளையாடி இருக்கிறார்.

(சொல் பிரயோகங்களை ரசிப்பவன் நான்.)

அவர் பிரயோகங்கள் எனக்கு பல உத்திகளைக் காட்டிக் கொடுத்தது.

இவர் ஒரு மகா கவிஞர்.



ஒரு விஷயம்!

கவிஞர் பொன்னடியான் 'முல்லைச்சரம்' நடத்துவது ஒரு வேள்வி.

நான் பத்திரிகை நடத்தி இருக்கிறேன். "ஊதாப்பூ" மாதப் பத்திரிகை.

55000 ஓட்டத்தை அடைந்தது.

ஆனால் அதற்கு வேண்டிய நிர்வாகத்தை நிலை நிறுத்தி இயங்க வைப்பது கடினம்.

முழுநேர கண்காணிப்பு வேண்டும்.



ஆனால் அப்படியும் அவர் அதை ஒரு 'வேள்வி'யாக நடத்தி வருவதுதான் சற்று ஸ்தம்பிக்க வைக்கும் செயல்!

இனியும் இந்த வேள்வியை அவர் தொடர்ந்து நடத்த வேண்டுமா?

இன்னும் கைப்பொருளை இழக்க வேண்டுமா?

பலமுறை அவரிடம் பேசி இருக்கிறேன்.

"சீக்கிரம் ஒரு முடிவு எடுத்து விடுவேன்." என்று கூறி வந்திருக்கிறார் அவர்.

யாராவது பெரும் புரவலர் அதை அவரிடமிருந்து எடுத்துக் கொண்டு நடத்தினால் நன்றாக இருக்கும் என்று பலர் நினைக்கிறார்கள்.

கவிஞரின் வேள்வியும் தொடர்வது போலிருக்கும்!

இத்தனை நாள் கட்டிக் காத்து வந்த ஒரு பத்திரிகை பாரம்பரியத்தைக் கவிஞர் அவ்வளவு எளிதாக விடச் சம்மதிப்பாரா?

அதற்கு அவர் மனம் சம்மதிக்குமா?

இந்த விஷயத்தில் கவிஞர் ஒரு ஆச்சரியம்! ஒரு அதிசயம்!

தமிழகத்தில் இன்னும் லட்சிய புருஷர்கள் இருக்கிறார்கள் என்பது கவிஞரின் விடாப்பிடியான உறுதி ஒரு சான்று.

இன்று அவர் வாழ்வில் நடைபெறும் இந்த முக்கிய இலக்கிய விழாவில், ஒரு நல்ல முடிவு அவருக்குக் கிடைக்கும்படி, இறைவன் அருளவேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன். ✶



# அன்றே இவர் ஓர் அக்கினிக் குஞ்சு!

## வெங்கனூர் புகழேந்தி (உதவி நீதிபதி)

"நாக்குத் தொழில் கவிதை,
நாட்டுக்குழைத்தல்
இமைப்போதும்
சோராதிருத்தல்"

என்ற பாரதியின் வரிகளுக்கு வடிவம் கொடுத்தால் எப்படி இருக்கும் என்று சிந்தித்தேன். அப்பொழுது கணிணி பொறியியல் உருவாவது போல் ஒரு வடிவம் உருவானது. அந்த வடிவம் தான் நம் போற்றுதற்கரிய கவிஞர் பொன்னடி உருவம்.

*இரு!*

*உழைத்துக் கொண்டே இரு*
*உணர்ந்து கொண்டே இரு!*
*புதுப்புதுக் கருத்தினை*
*உரைத்துக் கொண்டே இரு*
*தோழனே! - நீ*
*விழிப்புக்கு வழிகாட்டும்*
*விடியலின் நினைவோடு*
*விரைந்துகொண்டே இரு*
*தோழனே!*

*சுடர்ந்து கொண்டே இரு!*
*சுழன்று கொண்டே இரு*
*சூழ்ந்துள சூழ்ச்சிகள்*
*களைந்து கொண்டே இரு*
*தோழனே! - நீ*
*தொடர்ந்திடும் சுரண்டல்கள்*
*தொடர்க்கதைக் கொடுமைகள்*
*துடைத்துக் கொண்டே இரு*
*தோழனே!*



இதோ "இரு" என்ற கவிதையில் அந்த பார்ரதியின் வாழ்வியல் இலக்கணத்தின் வடிவமாக அவர் திகழ்வதைக் கண்டேன். திகழ்வது வேறு இருப்பது வேறு. கல் ஒன்று இருக்கிறது என்றால் இருப்பது ஏனறாகும். தோட்டம் ஒன்று அழகாக இருக்கிறது என்றால் அதில் வளர்ச்சி, செழிப்பு, வளமை, மகிழ்ச்சி என்றெல்லாம் நிறைந்து கிடக்கும். அப்படித்தான் நம் கவிஞர் பெருமகன் வெறுமனே இருக்கிறார் என்றில்லாமல் மொழியுணர்வாலும், உலகப் பார்வையாலும், அறிவியல் நோக்காலும், முடை நாற்றம் வீசும் மூடத்தனங்களைப் பொசுக்கும் பகுத்தறிவுப் பார்வையாலும் நம் முன்னே எழுந்து உயர்ந்து,சிறந்து திகழ் கின்றார். நம் கவிஞரைப் படம் பிடித்துக் காட்டும் அவரின் படைப்புகள் காலப்பெட்டகங்கள், உணர்ச்சியின் உந்துதல்கள். அவருடைய கவிதைகள் பல நூல்களாக வெளி வந்திருந்த போதும் நூற்றுக்கணக்கான கவிதை சித்தாந்தங்கள் நூல் வடிவில் வராமல், வெளியுலகின் வெளிச்சம் படாமல் மண்ணில் புதையுண்ட மாணிக்கங்களாக, வைரங்களாக கிடக்கின்றன. அவைகளைத் தேடிப்பிடித்து தூசித் தட்டிப் பார்க்கும் அரிய வாய்ப்பு எனக்குக் கிட்டியது கண்டு மகிழ்ச்சி யடைகிறேன். இந்த அற்புதமான கவிதைகளை எல்லாம் கவிஞரின் எத்தனையாவது வயதில் உருவாயின என்பது கண்டால் அனைவரும் திகைப்புறுவர். ஆம்! அவைகள் அவருடைய பதினேழாவது பதினெட்டாவது வயதுகளில் கவிஞரின் இதயப் பையிலிருந்து பிறப்பெடுத்துள்ளன. பதினேழாவது வயதில் கவிதை எழுதுவது இயலும் என்று சிலர் கருதலாம். ஆனால், இக் கவிஞரின் கவிதைகளில் மிளிர்கின்ற முதிர்ச்சி, தத்துவம், இயல்பு, உலகப் பார்வை, அறிவியல், பகுத்தாய்வு நோக்கு, இவைகள் வேறெவரின்

கவிதையிலும் இராது; வராது. வயதுக்கு மீறிய திறமையை, முதிர்ச்சியை அவற்றில் கண்டதால்தான் இவ்வளவு சிறிய வயதில் எவ்வளவு அற்புதமான கவிதைகளைக் கவிஞர் யாத்துள்ளார் என்பதைக் கண்டு வியக்காமல் என்னால் இருக்க முடியவில்லை. "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" என்பதைக் கொண்டு தான் இதைக் கூறுகின்றேன் அப்படிப்பட்ட அவரது இளமைக் கால கவிதைக்ளில் சிலவற்றை நான் கூர்ந்து நோக்க ஆரம்பித்தேன். அவைகளில் நெருப்பின் சீற்றமும், நீரின் குளிர்ச்சியும், புயலின் வேகமும், பூந்தென்றல் வருடலும், அருவியின் சலசலப்பும், ஆற்றின் ஓட்டமும், அறிவின் முதிர்ச்சியும், ஆற்றலின் வளர்ச்சியும், கடலின் ஆழமும், கார்வான் உயரமும், அடடா... இவைகள் எப்படி நிறைந்து, செறிந்து கிடக்கின்றன என்பதைக் கண்டு களிப்பேருவகையுற்றேன். பாரதி, பாரதிதாசன், என்ற ஒளிச்சுடர்களின் வழித்தோன்றல் இக்கவிஞரேயன்றி வேறு யார்தான் இருக்க முடியும்? அன்றே இவர் ஓர் அக்கினிக் குஞ்சுதான் என்பதில் ஐயமே இல்லை! அன்று பூத்த இந்த அக்கினிக் குஞ்சு இன்றும் சுழன்று சுழன்று சூறாவ்ளி போன்று தான் கொண்ட கொள்கையில் அணுவும் பிறழாமல் பாவேந்தரின் அடியொற்றி நடை போட்டு வருவதை நான் சொல்ல வேண்டியதில்லை; இந்த நாடே அறியும்.

*நான் ஒரு .........*

*நான் ஒரு நாத்திகன்தான் -என்*
*நாடி நரம்பினில் ஓடும் குருதிதன்*
*மானக் களஞ்சியந்தான்!*
*நான் ஒரு நாத்திகன் தான்!*
*-நான் ஒரு....*

*மூடத் தனங்களை மூட்ட நினைப்பவன்*
*முடிச்சவிழ்ப்போர் எண்ணம் வெட்டத் துடிப்பவன்!*
*சாடத் தகுந்ததைச் சாடத் துணிந்தவன்*
*சாத்திரக் குப்பைமண் மூட எழுந்தவன்*
*-நான் ஒரு....*

*நீண்ட உலகினைத் தாண்டத் துடிப்பவன்*
*நெஞ்சில் அறிவொளி தூண்டத் துணிந்தவன்!*
*பூண்டுபுல் போல முளைக்கும் பழமையைப்*
*புதுமை உணர்வால் பொசுக்கி முடிப்பவன்!*
*-நான் ஒரு....*

*கண்முன் உழைப்பார் உழைப்பை மதிப்பவன்*
*காணாக் கடவுளர் கதையை மறுப்பவன்!*
*என்னைப் பிறர்க்காய்த் துறக்க இருப்பவன்*
*எத்தர் மதத்திமிர் பித்தம் வெறுப்பவன்!*
*-நான் ஒரு.....*

*'ஏன்' என்று கேட்கும் துணிவு எனக்குண்டு*
*'இப்படி' என்று விளக்கும் திறனுண்டு!*
*நான் செல்லும் பாதையில் என்றும் தெளிவுண்டு*
*நல்வார் நெறியல்லார் அன்பின் உறவுண்டு!*
*- நான் ஒரு....*



*-நாத்திகம் - 196υ*

அவருடைய இளமைக்கால கவிதைகளில் ஒன்று 'நான் ஒரு நாத்திகன்'. அது 1960-ல் கவிஞரின் 20-வது வயதில் வெளியாகியுள்ளது. அதில் நாத்திகம் என்றால் கடவுள் கொள்கையை எதிர்ப்பவன் என்பது மட்டும் பொருளல்ல; சமுதாயத்திற்கு தீங்கு விளைவிக்கும் இதர கொடுமைகளும் அந்தப் பொருளில் அடங்கும் என்று புதியதோர் விளக்கத்தைக் காட்டுமுகத்தான் இக்கவிதையை யாத்துள்ளார். மூடத்தனங்களையும், முடிச்சவிழ்க்கும் கயமைத்தனத்தையும், கண் மூடித்தனமாக கடைப்பிடிக்கப்பட்டு வந்த கடவுள் நம்பிக்கையையும், பழமைப் பஞ்சாங்கத்தையும், ஏய்த்துப் பிழைக்கும் எத்தர்களின் திமிரையும் சாடியுள்ளார். ஆனால், இக்கவிஞர் கடவுள் நம்பிக்கையை நியாயமான வகையில் கொண்டுள்ள நல்லாரை மதிக்கத் தவறியதில்லை. கடவுளுக்குப் பயந்து குற்றம் புரியாமல் அவர்கள் இருப்பதால் நாட்டில் குற்றவாளிகளின் எண்ணிக்கையாவது குறையுமல்லவா என்பதே அவருடைய வாதம். எவருடைய மனதையும் புண்படுத்தக் கூடாது என்பதே நம் கவிஞரின் நோக்கமாகும். இக்கவிதை குறிப்பிட்ட எவரையும் சாடும் நோக்கில் எழுதப்பட்டதல்ல என்பது இதை கண்ணுற்றபோது தெரிகிறது.

*கோயில்களா? குழப்பங்களா?*



*பகுத்தறிவுப் பிறந்த நாட்டில் பண்பாடு வளர்ந்த நாட்டில்*
*பகுத்துப் பகுத்து நெறிவளர்த்த பாவலர் வாழ்ந்த நாட்டில்....*
*சாமிக் கோயில்களா? சமயக் குழப்பங்களா?*

*.இலக்கிய இலக்க ணங்கள் இனிது பூத்த என்நாட்டில்*
*கலக்கமி லாது நீதி கனிந்த தமிழ்த் தென்னாட்டில்....*
*சாமிக் கோயில்களா? சமயக் குழப்பங்களா?*

*வள்ளுவன் குறள்மு ழங்கும் வன்மைசேர் வளமை நாட்டில்*
*வெல்லும் திறன்படைத்த வீரர் விளையும் நாட்டில்....*
*சாமிக் கோயில்களா? சமயக் குழப்பங்களா?*

*கொல்லாமை குடியி ருந்த கொள்கை சேர் புனித நாட்டில்*
*இல்லாமை இல்லா திருந்த எழில்மிகு இனிய நாட்டில்....*
*சாமிக் கோயில்களா? சமயக் குழப்பங்களா?*

*எல்லோரும் ஓரி னம்நாம் எல்லோரும் ஓர்குல மென்று*
*நல்லவர்கள் வாழ்ந்த நாட்டில் நலிவிலாது நடந்த நாட்டில்....*
*சாமிக் கோயில்களா? சமயக் குழப்பங்களா*

*பொய்மையே இல்லை! இல்லை! புரட்டினி இல்லை! இல்லை!*
*மெய்மையே எல்லாம் என்று மீசை முறுக்கும் திருநாட்டில்....*
*சாமிக் கோயில்களா? சமயக் குழப்பங்களா?*

('நாத்திகம்' - 1961)

*1959-ல்* "நாத்திகம்" என்ற அதே இதழில் "கோயில்களா? குழப்பங்களா?" என்றதோர் கவிதையை நம் சிந்தனைக்கு வைக்கின்றார். க்விதை என்ன வளம் இருந்தாலும் குழப்பம் இருந்தால் என்ன பயன்? நம் தமிழ்த் திருநாடு எத்தனை சிறப்புக்கள் மிக்கது. " என்ன வளம் இல்லை இந்தத் தமிழ்நாட்டில்" பாடியது மிகையல்லவே!

"நாடென்ப நாடாவளந்தரு நாடு" இதற்கேற்ப வளமும் சிறப்புமிக்க வகையில் வளம் மிக்க நாடு நமது. இறையொழுக்கத்தால் ஈடு இணையற்ற சிறப்பு மிக்கது. நம் கோயில்கள், கட்டிடம் மற்றும் சிற்பக் கலைகளால் உலகப் புகழ் வாய்ந்தவை. உலக மக்களின் கவனங்களை ஈர்க்கும்.-அரிய அறிவுத்திறன்களை அவற்றில் நம் கலைஞர்கள் வடித்துள்ளார்கள். -ஒவ்வொரு கோயிலின் வானுயர்ந்த கண்கவரும் கோபுரமும் நம் தமிழ்த்திரு நாட்டின் உயர்வையும், எழுச்சியையும், சிறப்பையும் காட்டுவனவாகும். இவ்வளவு இருந்தும் மூடத்தனங்களும், கயமைத்தனங் களும், அதன் பின்னணியில் இருந்தால் என்ன சிறப்பு? அதைக் கண்டு தான் நம் கவிஞர் தம் உள்ளம் பொறாமல் இக்கவிதையை எழுதியுள்ளார். குழந்தை அழகாக இருக்கிறது என்பதற்காக அது செய்யும் தவறுகளை அனுமதிப்போமா? அது போல்தான் இவர் கோயில்களின் பின்னணியில் செயல்படும் தவறுகளைச் சாடுகிறார்.

*ஒரு நாள் கூத்து!*

*மூச்சற்று நாளும் உழைத்தே உலகினர்*
*முழுநலன் காப்பார் முகத்தினிலே-இன்ப*
*மூச்சுப் பிறந்தது! முழுமை பிறந்தது!*
*முத்துச் சிரிப்பும் மலர்ந்தது!-நித்தம்*
*பேச்சற்று துயரில் பிணைந்திருந் தார்இளம்*
*பிஞ்சினை யொத்த அகத்தினிலே-அன்புப்*
*பேச்சுப் பிறந்தது! பெருமை பிறந்தது!*
*பேதமை எண்ணம் பறந்தது!*

*வறுமையில் தோய்ந்து வாடிக் கிடந்தே*
*வகைவழி தேடியோர் வாய்களிலே - "நீங்கள்*
*வருக, வாழ்க" என்ற வாழ்த்தும் பிறந்தது;*
*வந்தவர் உள்ளம் குளிர்ந்தது!-கெட்ட*
*சிறுமைக்கே அஞ்சாது சித்தம் கலங்காது*
*செல்லும் உழவர் நினைவினிலே-உயர்*
*உரிமை பிறந்தது! உண்மை புரிந்தது!*
*உலகின் வழியோ தெரிந்தது!*

*காற்றினைப் போல் காற்றாடியைப் போல்மாய்ந்து*
*காய்ந்தே உழைப்பார் கரங்களிலே-சுவை*
*ஏற்றிவளர்த்த கரும்பும் இருந்தது!*
*இனிய பழவகை நிறைந்தது-வயல்*
*நாற்றினைக் காத்து நமக்குப் பலன்தர*
*நாளும் மடிந்தார் நடையினிலே-புது*
*ஏற்றம் இணைந்தது இளமை கனிந்தது!*
*இன்றவர் மனமோ தெளிந்தது!*

*பொங்கும் குமுறலில் புன்கை மறந்து*
*புதைந்து கிடந்தார் இதழ்களிலே "தமிழ்ப்*
*பொங்கலோ பொங்கல்" என்னும் புதுச்சொல்*
*பூத்துத் தவழ்ந்தே இழைந்தது!-என்றும்*
*மங்கிக் கிழிந்த அழுக்குடை பூண்ட*
*மறவர் குலத்தினர் மேனியிலே -இன்று*
*தங்கிய ஆடையோ புத்தம் புதியது!*
*துளும்பினர் ஓர்நாள் கூத்தினிலே!*



('மணிக்கொடி' இதழ் - 1963 பொங்கல் இதழ்)

"ஒரு நாள் கூத்து" என்ற கவிதையில்:

விழாக்கள் என்றாலே ஒருநாள் கூத்துத்தான். மனித வாழ்வின் மொத்த உழைப்பும் எதற்காக என்று சிந்தித்துப் பார்த்தால் அனைத்தும் மனிதனின் மகிழ்ச்சிக்காகவே என்று புரியும். கவிஞராயினும், தொழிலாளியாயினும் உழைப்பின் முடிவு அவனது மகிழ்ச்சிக்குத்தான். பொங்கல் திருநாள் தமிழர் வாழ்வில் சிறப்பு மிக்க நாள். அந்த நாளின் மகிழ்ச்சிக்காக உழைப்பவன் பட்ட சிரமத்தைத்தான் இக்கவிதையில் கவிஞர் படம் பிடித்துக் காட்டுகிறார்.



*எனக்கேது இன்ப நாள்?*

*நானோர் தொழிலாளி!*
*நாட்டின் நலன் காத்து நாளும் உழைக்கின்றேன்*
*நானோர் தொழிலாளி!*

*வண்டி இழுத்து நிதம் வாழ்க்கை நடத்துகின்றேன்!*
*வயிற்றுக்குக் கூழுண்டு; ஆனாலும் என் வாழ்வில்*
*நொண்டிக் கதையாக நூறாயிரந் தொல்லை!*
*நூற்கப் படுகின்ற நுரைப்பஞ்சு நானென்பேன்!*

*இன்றோ பலர் வீட்டில் இன்பத் திருக்கூத்து!*
*எங்கும் வெடிக்கூச்சல்; எதிரொலியோ புளிஏப்பம்!*
*அன்றன்று பாடுபடும் அடியேன் சிறுவீட்டில்*
*என்றும்போல் துயர்க்கூத்து; ஏளனத்தின் எக்களிப்பு!*

*கூட்டிக் கழித்தாலோ கூளமே மிஞ்சுமென்*
*குடிசை இருளுக்குள் குமைந்துள்ள என்மனைவி!*
*சேட்டுக் கடையிலவள் சேலை அடகிருக்கு!*
*சீர்பெருமை மிக்கஅவள் தாலியும் அங்கேதான்!*

*சிங்காரச் செல்வமகன் சீனவெடி கேட்கின்றான்!*
*சித்திரப்பூ மத்தாப்பு புதுச்சட்டை கேட்கின்றான்!*
*எங்கேநான் போவேன்? ஏதந்த தெம்பெனக்கு!*
*எளியேன் எனதுநிலை இளவலுக்கா புரிந்துவிடும்?*

*வகைவகையாய்ப் பண்ணியங்கள் வாங்கித் தரச்சொல்லி*
*வாய்சப்பி அழுகின்றான் எனது குலவிளக்கு!*
*நகைக்கின்றேன்; நகைக்கின்றேன்; நாணிக் கிடக்கின்றேன்!*
*நலிந்த அவன்முகத்தை நானுற்றுப் பார்க்கின்றேன்!*

*வேட்டியில்லை சட்டையில்லை வெளியில் செல என்றனுக்கு*
*வெறும்கிழிசல்; தைத்ததுவும் நைந்த இழிகோலம்!*
*கேட்டீரா நாட்டினரே! கேடென்ன நான் செய்தேன்?*
*கெட்டழிந்தே உழைப்பதற்குக் கேவலம்தான் பெறும் பரிசா?*

*- ("குண்டூசி" தீபாவளி இதழ் - 1963)*

தொழிலாளியின் துயரினை 1963-ல் 'குண்டூசி" என்னும் இதழில் "எனக்கேது இன்ப நாள்' என்ற தலைப்பில் தொழிலாளி படும் வேதனையைக் கண்டு நம் கவிஞர் வெதும்புகிறார். தீபாவளி திருநாளன்று தன் செல்ல மகன் மற்றெல்லாக் குழந்தைகள் போலும் புத்தாடையும்

வெடியும் கேட்டான். அதை வாங்கிக் கொடுக்கு வக்கில்லா நிலையில் ஒரு ஏழைத் தொழிலாளி தவிக்கின்றான். அவன் ஆசை மனையாளின் சேலையும் தாலியும் சேட்டுக் கடையில் இருக்கின்றன. இப்படியுள்ள சூழ்நிலையில் அவனுக்கு இந்த மகிழ்ச்சிகளை மத்தாப்பு நாள் எப்படி தரும்? அந்த நாளில் முதலாளியின் புளி ஏப்பத்தனத்தையும் படம் பிடித்துக் காட்டுகின்றார். வாழ்வின் இரு முரண்பட்ட கூற்றைக் கவிஞர் கூறுகின்றார். அந்தக் கூற்றில் உண்மையின் தத்துவம் புரிகின்றது. உழைத்தும் குழந்தைகளின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வழியில்லாத வறுமை நிலையையும், உழைக்காமல் செல்வச் செழிப்பில் மிதக்கும் மேன்மை நிலையையும் கடுமையாகச் சுட்டிக்காட்டுகிறார். இளமை கொஞ்சும் எழில் கவிதை வடிக்கின்ற வயதில் முதிர்ந்த கவிஞனின் முதிர்ச்சியும், சமூக நோக்கும், சிந்திப்பும், பக்குவப்பட்ட மனநிலையினையும் காட்டி தொழிலாளி நலம் பெற்றால் தானே நாடும் நலம் பெறும் என்ற நல்லெண்ணத்தைக் கவியாக வடிக்கின்றார்.

"புரியாத புதிர்" - நமக்கு நாட்டில் எத்தனையோ புரியாத புதிர்கள் இருக்கத்தான் செய்கின்றன. சில சங்கதிகள் புரிந்தும் புரிவதில்லை. புரியாதது புரிந்துவிட்டால் அதற்கெற்ப நிலைமை மாறும். புரியாத புதிர்களைப் புரிந்து கொள்வதில் சிலர் மிகுந்த அக்கறையும் நாட்டமும் கொள்வர். சிலர் புரியவில்லை, புரிந்து என்ன செய்யப்போகிறோம் என்று விரக்தி நிலையில் இருப்பர். இவர்கள் இருந்தும் என்ன பயன்? புரியாத அவற்றைப் புரிந்து கொள்வதில் எடுத்த முயற்சிகள் எண்ணிலடங்கா. வான்வெளியைப் புரிந்து கொள்ள கோபர்நிகஸ் என்ன முயற்சி எடுத்துக் கொண்டார். விண்மீன்களைக் கண்டுபிடிக்க டைகோ பிராகி பாடுபட்டார். நிலையை புரிந்து கொள்ள ஆராய்ச்சி நடக்கவில்லை. எதையும் புரிந்துகொள்ள எடுக்கும் முயற்சியில் தான் மனிதப் பிறவியே இருக்கிறது. நம் கவிஞர் அப்படி என்ன புரியாத புதிரைப் புரிந்து கொண்டுவிட்டார் என்ற வினா எழலாம். 1962-ல் 'தனியரசு' என்ற இதழில் 'புரியாத புதிர்' என்ற தலைப்பில் கவிதையைப் பாடியுள்ளார். எத்தனை பெரிய கவிஞர்கள் வாழ்ந்தாலும் வாழ்த்தத் தகுந்த கவிஞர்களில் சிலரே இருப்பர் என்று அறிந்து கொண்டு அவர்களில் நம் தேசியக் கவிஞர் பாரதியைக் கூறுகின்றார். வாழ்த்த வேண்டிய கவிஞர்களில் பாரதியைக் கொண்டு வந்த நுண்மான் நுழைபுலம் தெரிகிறது.

*உள்ளம்*

*எடுப்பு*

*கோடாலி தோளில் தூக்கிச்*
*இரும்புச் சிரிப்பை உதட்டில் தேக்கிப்*
*பீடுநடை போட்டும் அதோ போறாரு!*
*பின்னிருட்டில் தானே நிதம் வாறாரு!*

*முடிப்பு*

*சுட்டெரிக்கும் வெய்யிலில் வீதி*
*சுற்றிச்சுற்றி வந்தவர் அலைந்து*
*கட்டிய ணைத்தே முத்தமிடும் கையாலே -*
*கட்டை பிளந்து வாழ்வு நடத்த முன்னாலே*
*-கோடாலி தோளில் தூக்கிச் ....*



கட்டிலொரு வேட்டி கட்டி
வழிமேல் நடை காட்டி
கட்டழகு மாலையிட்ட கண்ணாளர்
சுற்றும் துணிக் கோலத்தோடு முன்னாலே
- கோடாலி தோளில் தூக்கி ....

வெட்டுப்பு வியர்வை சிந்த
வேலையும் களைப்பும் குந்த
வீட்டு விட்டே எனக்காய் உழைப்பாரோ?
வேதனையில் என்னை வெறுப்பாரோ?
-கோடாலி தோளில் தூக்கி ....

பொட்டுப் போட்ட புடவை யோடு
புதுரவிக்கை வேண்டுமென்றேன்
எட்டுநாளாகக் காசு சேர்க்கிறார்
என்னையே தன்னைவிடக் காக்கிறார்!
-கோடாலி தோளில் தூக்கி ....



-புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் 'குயில்' (15-4-1962)

காதல் உணர்விற்கு ஏழ்மை, உயர்வு என்றில்லை. மனைவியை காதலிக்கும் கணவன், கணவனைக் காதலிக்கும் மனைவி. இவ்விருவரின் மனநிலை அற்புதமானது. ஒரு ஏழை விறகு வெட்டும் தொழிலாளி. அவனுக்குச் சரியான நல்ல வேட்டியில்லை. கந்தலான வேட்டியைக் கட்டிக்கொண்டு விறகு வெட்டச் செல்கிறான். அவ்வளவு ஏழ்மையிலும் அவன் வேலை பார்க்கும் பாங்கை அவன் மீது அளவற்ற அன்பு கொண்ட அவன் மனைவி கண்டு மகிழ்வுறுகிறாள். அவள் மனநிலைக்கு முன் எல்லா அழகும் பொருந்திய இளவரசன் வந்தால் கூட அது, அவளின் கணவனின் நடைக்கும் அழகிற்கும் முன் ஈடாகாது என்று தெரிகிறது. அப்படிப் போகின்ற அவனுடைய நோக்கு எதற்காக என்றால் தன் மனைவி புதுப்புடவை புது ரவிக்கை கேட்ட கோரிக்கையை நிறைவேற்றுவதற்காக. தனக்கு நல்ல வேட்டி இல்லையே என்ற கவலையோ, நினைவோ அவனுக்கு இல்லை. ஆனால் மனைவியின் ஆசையை நிறைவேற்ற வேண்டும். அதற்காக அவன் எட்டு நாளாகப் பாடுபடுகிறான்.

என்ன அற்புதமான கவிதை. உள்ளங்களின் ஈர்ப்பு அதில் இணைந்து பிணைந்து கிடக்கிறது. இக்கவிதை 15-4-1962-ல் பாவேந்தர் பாரதி தாசனின் 'குயில்' இதழில் 'உள்ளம்' என்ற தலைப்பில் வந்துள்ளது. தரமறிந்து தான் நம் கவிக் கோமான் பாரதிதாசனார் நம் கவிஞர் பொன்னடியானைத் தன்னகத்தே இணைத்துக் கொண்டாரோ என்னவோ?

என்ற இக்கவிதை ஒரு காலகட்டத்தின் வரலாறு. 1-5-1962 -ல் அதே 'குயில்' இதழில் வெளிவந்த கவிதைதான் "ஓடி விடு" இக்கவிதை மொழிப்பற்றால் தமிழகமே ஆர்த்தெழுந்தபோது எழுதப்பட்டது. அன்றைய சூழ்நிலையின் நடப்பு இது. மொழியின்பால் ஒவ்வொரு தமிழ் மகனும் கொண்டிருந்த வேட்கையை இக்கவிதை காட்டுகின்றது.

*ஓடிவிடு!*

*சந்துவழி முந்திவரும் தமிழ்ப்பகையே!-உன்னைச்
சாய்த்துஉயிர் மாய்த்துவிடக் கிளம்பிவிட்டோம்!
செந்தமிழ்க் கவிஞர்களின் போர்க்குகையோ-இனி
சீறிஎழும் ஓடிவிடு! ஓடிவிடு!-*



*வந்தவழி அதோ அங்கு தெரியுதுபார்!-உன்
வாலறுக்கப் படைக்கலன்கள் குவியுதுபார்!
சிந்தைநொந்தே உளம்பற்றி எரியுதையோ-தப்பிச்
சீக்கிரத்தில் ஓடிவிடு! ஓடிவிடு!*

*எந்தவழி போவதென்று தெரியவில்லையா?-இல்லை
எங்கள்படைத் திறமுனைக்குப் புரியவில்லையா?
மந்தையென வாநினைத்தாய் மடமையேநீ-எங்கள்
மறவர்குலம் கொதித்தெழுந்தார் ஓடிவிடு!*

*குந்திகதை பேச வந்த குரங்கே!-கந்தற்
கொள்கையொடு கொக்கரிக்க வந்தாயாமே?
அந்தியிலா அரசாள நினைத்தாய்? -என்னோர்
அடித்தெலும்பை நொறுக்குதற்குள் ஓடிவிடு!*

*வந்தவரை வரவேற்று வாழவைத்தார்-எதிர்த்து
வரும்பகையை விரட்டுதற்கு மறந்தாவிட்டோம்?
சொந்தபுத்தி உனக்கில்லை என்றேயான்-இதைச்
சொல்கின்றேன், ஓடிவிடு! ஓடிவிடு!!*

- புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் 'குயில்' இதழ் (1-5-62)

இக்கவிதை பிறந்த நேரம் புரட்சிக் கவிஞர் தமிழ்க் கவிஞர்களை எல்லாம் ஒன்று திரட்டித் தமிழ்க் கவிஞர் மன்றம் தோற்றுவித்த நேரம். தமிழ்க் கவிஞர்களின் சார்பாக மொழித் திணிப்புக்கு எதிராக நமது கவிஞர் பொன்னடியார் போர் முழக்கமாக எழுதும் கவிதையாக இது இருந்துள்ளது.

*அடிமைப்பட்டாய்!*



*பெருமைக்கே அடிமைப் பட்டாய்-வீண்
பெருமைக்கே அடிமைப் பட்டாய்!
சிறுமைக்கே வாழ்க்கைப் பட்டாய்-துன்பம்
சிதைத்திட வதைத்திட ஐயோ கெட்டாய்!*
*-பெருமைக்கே*

*உலகம் மதித்திட வேண்டுமென்றே-நீ
உன்னையே எண்ணாமல் ஓடுகின்றாய்!
நிலைமைக்கு மீறியே நினைவிழந்தாய்-இன்று
நிலைதடு மாறி ஏன் குமுறுகின்றாய்!*
*-பெருமைக்கே*

*ஆணவக் கோட்டைக்கு காவல் நின்றாய்-அங்கே
ஆடாத ஆட்டங்கள் ஆடுகின்றாய்!
கோணல் புத்தியால் குழம்புகின்றாய்-பகைக்
கொடுமைக்கே பலியாகித் தேம்புகின்றாய்!*
*-பெருமைக்கே*



*நாளைக்கு நடப்பதை நினைக்கவில்லை-உன்னில்*
*நல்லவர் பலரையும் மதிக்கவில்லை*
*கேலிக்குரிய ஏ.....விந்தை மனிதா-உன்றன்*
*சிந்தைச் செயலுக்கே முடிவில்லையா?*

*-பெருமைக்கே*

*அடங்கி வாழ்ந்திடத் தெரியவில்லை-பிறரை*
*அடக்கி உயர்ந்திடத் துடிக்கின்றாய்*
*இடங்கொடுத்தால் போதும் ஏறுகின்றாய்-நேர்மை*
*இதயமே இல்லாமலே மாறுகின்றாய்!*

*-பெருமைக்கே*

('முல்லை' - ஆகஸ்ட், 1962)

1962-ல் "முல்லை" என்ற இதழில் அறிவு முதிர்ச்சியும் தத்துவமும் கொண்ட "அடிமைப்பட்டாய்" என்ற கவிதையைப் படைத்துள்ளார்.

மனிதர்கள் ஆளப் பிறந்தவர்களா? அடிமைப்பட்டவர்களா? ஆளப் பிறந்தவன் அடிமைப்படுகிறான். அடிமைப் பட்டவன் மடிந்து போகிறான். அடிமைப்படுவதில்தான் எத்தனை வகை? பணத்திற்கு அடிமை, மதுவிற்கு அடிமை, பெண்ணுக்கடிமை, புகழுக்கடிமை, அதிகாரத்திற்கு அடிமை, இன்னும் எத்தனை எத்தனை அடிமைகள். தன்னை உலகம் மதிக்க வேண்டும் என்பதற்காகத் தன்னைப் பற்றி எண்ணாமல் ஓடுவதையும், நிலை தடுமாறுவதையும் ஆணவத்திற்குட்பட்டு ஆடும் ஆட்டத்தையும் நாளை என்ன நடக்கும் என்ற சிந்திக்காமல் நல்லவர்களை மதிக்காமல் மொத்தத்தில் எதிலும் தனக்கு பெருமை வேண்டும் என மனிதன் நடந்து கொள்வதையும் தத்துவ நோக்கில் எடுத்துக் காட்டியுள்ளார்.

நாவரசு என்றோர் நற்கவிஞர் பாவேந்தரின் மூத்த மாணவர். 14 ஆண்டுகள் அவருக்கு உதவியாக இருந்து பெருமை பெற்றவர். அவரை ஆசிரியராகவும் டி. ஏ. கணேசன் என்பவரைப் பதிப்பாளராகவும் கொண்ட 'கலை விருந்து' என்ற இதழ் வந்து கொண்டிருந்தது. அதன் பொங்கல் சிறப்பிதழுக்கு பாவேந்தரிடம் மாணவராக இருந்த நம் கவிஞரிடம் ஒரு கவிதை கேட்டுள்ளார்நாவரசு. நம் கவிஞர் தன் ஆசான் எழுதும் அதே இதழில் தானும் எழுதுவது சரியல்ல என்ற நோக்கில் இசையவில்லை. எனினும் பாவேந்தரின்உயர் பண்புகளைக் கூறி வாழ்த்துக் கவிதையைப் பெற்று வெளியிட்டுள்ளார்.

நம் கவிஞர் பாவேந்தர் என்ன சொல்வாரோ என அச்சம் கொண்டுள்ளார். அக்கவிதையைப் பாவேந்தர் படித்து விட்டு மனம் திறந்து பாராட்டியுள்ளார். கவிஞரின் அச்சமோ போயே போய் அங்கு மகிழ்ச்சியே நிலவியது.

'கொஞ்சுவதற்கோ நாம்' என்று தலைப்பிட்ட பிறப்புரிமை இதழில் வெளிவந்த கவிதை. அற்புதமான கவிதை. காதலும் கடமையும் நிரவி கிடக்கும் கவிதை.

இச் கவிதையில் தீராத மொழிப் பற்றும் காதற் சுவையும் கலந்துற வாடுவதைக் காணலாம். பக்குவப்பட்ட காதல் மனதையும், பண்பு

நிறைந்தவர் கடமையையும் பிரித்தறிய இயலாது என்பதை இதில் காணலாம். அதில் காதலன் தகுதியும் காதலி தகுதியும் எப்படி இருக்க வேண்டும் என்பதுடன் மொழி, நாடு, மக்கள் உணர்வும் கொண்டுள்ள காதலர்களாக இருக்கவேண்டும் என்ற கவிஞரின் அவா தெரிகிறது.

தீரன் சின்னசாமி திக்குளிக்கின்றான். அவன் பாடுவது போல இந்த வரலாற்று நெடுங்கவிதை அமைந்துள்ளது. உணர்ச்சிகளைக் கொட்டித் தீர்ப்பதில் இவருக்கு இணை இவரே தான். பொன்னடியான் என்ற புது மனிதனின் உள்ளக் கொதிப்பை அதில் காண முடிகிறது. இவையெல்லாம் அவரின் வயதுக்கு மீறிய புலமையை, உணர்வை, அறிவை, எழுச்சியை, பண்பைக் காட்டுகின்றன. இக்கவிஞரே பாவேந்தர் பாசறையில் அரிமாக்குட்டி என்பதில் ஐயமில்லை

*உறவாடுவோம்*

*அறிவோடு உறவாடுவோம்*
*அழகோடு விளையாடுவோம்!*
*நெறியோடு நடைபோடுவோம்*
*நீதிக்குப் புகழ் பாடுவோம்!*
*அறி வோடு உறவாடுவோம்.....*

*வாழ்க்கைச் சக்காயல் இருப்பதற்கே*
*வையம் நெடுங்காலம் வாழ்வதற்கே*
*சூழ்ச்சியும் வஞ்சமும் கொடுமைகளும்*
*சூழாமல் இன்பம் பிறப்பதற்கே*
*-அறிவோடு உறவாடுவோம்....*
*உருவில் உருவாகும் மனிதஇன*
*உள்ளத்தின் கோளாறு மறைவதற்கே*
*பிரிவின் கருவிலே வளர்கின்ற நம்*
*பெருமைகள் எந்நாளும் நிலைப்பதற்கே*
*-அறிவோடு விளையாடுவோம்....*
*பிறந்த நம் நாடு பொலிவதற்கே*
*பேசும் தாய் மொழி வளர்வதற்கே*
*சிறந்த கலைகள் மலர்வதற்கே*
*சிந்தித்தே உழைப்பால் உயர்வதற்கே*
*-அறிவோடு விளையாடுவோம்....*

*-'திரைஉலகம்' - 1963*



திரையுலகம் என்ற இதழில் 'உறவாடுவோம்' என்ற தலைப்பில் கவிஞரின் அருமையான கவிதையை வெளியுடப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் 'Man is a Social Animal என்பர். எந்த மனிதனும் தனித்து வாழ இயலாது. மனித இனமே உறவின் பாற்பட்டதே. அதுதான் மனித நேயத்தின் மாண்பு. பூட்டோவைத் தனிமைச் சிறையில் பூட்டி வைத்ததால் அவரது உணர்வும், உடலும் குன்றி விட்டது என்பது உலகறிந்த செய்தி. உறவில்லை என்றால் மனிதன் இல்லை. இவ்வளவு பொருளமைப்புடன் அமைந்துள்ள இக்கவிதை இவர் கருவில் திருவுடையார் என்பதைக் காட்டுகின்றது.

*எல்லோரும் நல்லவரே*

*மலர்*

*எல்லோரும் நல்லவர் தானய்யா-இங்கு*
*இருக்கின்ற மக்கள் இனத்தவர்*
*எல்லோரும் நல்லவர் தானய்யா*

*மணம்*

*வாழ்கின்ற சூழ்நிலை மாற்றுதய்யா*
*வறுமைக் கொடுமைகள் ஏமாற்றுதைய்யா!*
*தாழ்வு நிலையை எண்ணிக் குமுறியவன்*
*தாங்காமல் தான்குற்றம் புரிந்தானய்யா!*
*-எல்லோரும்*

*திருடனாய் ஒருவன் பிறப்பதில்லை*
*தீயோனாய் வாழவே நினைப்பதில்லை!*
*புரிந்த வழியில்தான் போகின்றான்*
*போகயில் நிலைதடு மாறுகின்றான்!*
*- எல்லோரும்*

*பண்பாடு நன்மானச் சாத்திரத்தைப்*
*பசித்துத் துடிக்கும் குடல் பார்ப்பதில்லை!*
*என்னசெய் வானிந்த ஏழைமனிதன்*
*எத்தனாய், பித்தனாய்க் காட்சி தந்தான்!*
*- எல்லோரும்....*

*பாசம்பரிவு அன்பில் வளர்ந்தவன்தன்*
*பழியைச் சுமந்துவிளை யாடுகின்றான்!*
*மாசு மறுவற்ற அவன் குணத்தை*
*மதிக்கத் தவறுதே இந்நிலமே*
*-எல்லோரும்....*

*திரைஉலகம்-1962*



அதே இதழில் மற்றோர் கவிதை "எல்லோரும் நல்லவரே" என்ற தலைப்பில் வந்துள்ளது. அவரவர்கள் கண் பார்வைக் கேற்பத் தான் உலகம் தெரியும். நல்லதை நினைக்கும் நம் கவிஞரின் முன்னே எல்லோரும் நல்லவராகவே தெரிகின்றனர்.

" எந்தக் குழந்தையும் நல்ல குழந்தை தான்
மண்ணில் பிறக்கையிலே.

அவர் நல்லவர் ஆவதும், தீயவர் ஆவதும்
அன்னை வளர்ப்பதிலே!

என்ற இன்றைய திரைப்பாடலுக்கு நம் கவிஞர் அக்கவிதையே முன்னோடியாக தோன்றுகின்றது. மானிடவியலை முழுதும் உணர்ந்த முதிர்ச்சி பெற்ற கவிஞருக்குத்தான் இது போன்று எழுதமுடியும். எத்தனை இனம், எத்தனை மொழி, எத்தனை நாடு இருப்பினும் மனித வாழ்வியலில் வேற்றுமையில் ஒற்றுமையே மனிதத் தத்துவம். இல்லை என்றால் காஷ்மீரில் பிரச்சினை என்றால் அமெரிக்க அதிபர் ஏன் குரல் கொடுக்கிறார்? சோமாலியாவில் பஞ்சம் என்றால் ஏன் உலகம்

அழுகிறது? இனம், மொழி, நாடு கடந்து வாழ்வதுதான் மனித வாழ்வு. வாழ்வது எதற்கு? மகிழ்வதற்கு! மகிழ்ச்சி எதனால் வருகிறது? நன்மையால் அன்றோ! எல்லோரும் நல்லவரானால் மகிழ்ச்சிக்குத் தடையேது? எனவே தான் நம் கவிஞர் எல்லோரையும் நல்லவராகவே காண்கின்றார். மனித தத்துவம் உணர்ந்த அற்புதமான மனிதநேயமிக்கக கவிஞர் நம் கவிஞர்.

*எதற்கடா மறுப்பு?*

*திருடிக் கொண்டதைத் திருப்பிக் கொடுக்க*
*எதற்கடா இன்னும் மறுப்பு?-உன்*
*திருட்டுத் தனத்தைக் கேட்பவர் மேல்*
*ஏனடா இந்த வெறுப்பு?*
*உருட்டி விழித்தே அதட்டுகின்றாய்*
*திரும்படா உனதெதிர்ப்பு -ஏழை*
*உலகம் விழித்தே எழுந்ததடா*
*இனிநீ அறுந்த செருப்பு*

*இருட்டு வழியில் திருட்டு முறையில்*
*பொருளைச் சேர்த்துக் குவித்தாய்-துளி*
*இதயமில்லா மிருகம் போல*
*எளியோர் இனத்தை துவைத்தாய்!*
*குருட்டுப் பாதை கோணல் பாதை*
*காட்டிக் காட்டி ஏய்த்தாய்!-எங்கள்*
*குடியைக் கெடுத்தே உயிரைக் குடித்தே*
*பெருத்த எலிபோல் கொழுத்தாய்!*

*காலம் உனது கையில் இல்லை*
*கனிந்தது பெரும் புரட்சி-குளிர்ந்த*
*கண்கள் சிவந்து கைகள் உயர்ந்தே*
*எழுந்த துனக்கு வீழ்ச்சி!*
*ஓலமிட்டோம் நாங்கள்; இனிமேல்*
*மலர்ச்சி மலர்ச்சி மலர்ச்சி!-ஆனால்*
*உனக்குத் தானே மீட்சி இல்லை*
*வரட்சி வரட்சி வரட்சி!*

*படுத்திருந்தே அடுத்துக் கெடுத்தே*
*பாவம் செய்தே வளர்ந்தாய்!-நாளும்*
*பாடுபட்டே கேடு கெட்டே*
*உழைத்துக் கொடுத்தே தாழ்ந்தோம்!*
*உடுத்த ஆடை உண்ண உணவு*
*இவைகள் தானே கேட்டோம்!-சே...*
*உறுமுகின்றாய் உன்னை இனிமேல்*
*அழிக்காமல் விடமாட்டோம்!*

*ரத்தச் சேற்றில் மூழ்கி மூழ்கி*
*சுகத்தைக் கண்டவன் நீதான்-மனித*
*இரக்கம் இழந்தே உறக்கம் மறந்தே*
*ஏய்க்கச் சொன்னதுன் நாய்தான்!*
*வித்தைக் காட்டும் உன்னினம் ஒரு*
*வெறி பிடித்த நாய்தான்-நாளை*
*விடியும் பொழுதில் வாழ்த்துப் பாடும்*
*பாட்டாளிகளின் வாய்தான்!*

('தாமரை' - அக்டோபர், 1964)



1964-ல் 'தாமரை' யில் "எதற்கடா மறுப்பு?" என்ற கவிதை வந்துள்ளது.

இக்கவிதையை பார்த்தால் உலகின் சுயமைத் தன்ங்களயெல்லாம் சாடுகிற பாங்கைக் காணலாம். ஏற்கெனவே எல்லேரையும் நல்லவர் என்று பாடியதால் எவரும் தவறு செய்வதை அவரால் பொறுக்கமுடியவில்லை. அதனால்தான் இக்கவிதையில் பொங்குகிறார், புழுங்குகின்றார், புடைத்தெழுகின்றார். அவரது 20 வயதில் எத்தனை தோற்றமெடுக்கின்றார், பாடுகின்றார்:

"எச்சரிக்கை செய்கிறோம்" என்ற கவிதை 'மாலை முரசு' இதழில் 7-10-67-ல் வந்துள்ளது. இன்றைய காலகட்டத்தில் தமிழர்களுக்கு சிவசேனையால் ஏற்பட்ட இன்னல்களை, கொடுமைகளைக் கண்டு எரிமலையாக அன்றே வெடிக்கின்றார். தாள முடியாத சோகம் கோபமாக மாறியதே இக்கவிதை.

படைத்தவர் உள்ளம் படும் பாட்டை உணர்வீர்கள்; படிப்பவர் உள்ளமும் அதை வழிமொழிவதன்றி வேறு வழி செல்ல இயலாது.

இது போன்ற இன்னும் எத்தனையோ நூல் வடிவில் வராத அற்புதமான இளமைக் கவிதைகள் உள்ளன. இவருடைய கவிதைகள் தாமரை, சமதர்ம சமுதாயம், பிறப்புரிமை, தமிழ் நாடு, தினமணி, சினிமாகதிர், தமிழ்சினிமா, மணிக்கொடி, தனியரசு, தென்றல், திரை, முல்லை, தினத்தந்தி, ராணி, ஆனந்தவிகடன், மாலைமுரசு, தினமணிக் கதிர், குமுதம் போன்ற பல்வேறு இதழ்களில் இவரது கவிதைகளும், கட்டுரைகளும் வெளிவந்துள்ளன.

தமிழ் தமிழர் என்றும், தமிழ் சமுதாயம் என்றும், உலக சமுதாயம் என்றும். உயரிய நோக்கில் இவர் பார்வை செல்வதால் உலகமனைத்தும் போற்றும் அற்புத கவிஞராக இவர் உலா வருகின்றார். இவரது கவிதைகள் புதுமைக் கொஞ்சும் சித்திரங்கள். காதல், எளிமை, இனிமை, வீரம், விவேகம், தத்துவம், சமுதாயம், என்ற அனைத்தும் நிரம்பிக் கிடக்கும் அருமையான பூந்தோட்டம். இக்கவிஞரோ வீறுகொண்ட நெஞ்சுடையவர், எளிய தோற்றமுடையவர், இனிமையான குணமுடையார், மென்மையான மொழியுடையார். தன்னலமில்லாத பண்புடையார், கொண்ட கொள்கை பிறழாதவர். பாவேந்தர் என்ற பாட்டுலகப் பரம்பரையில் பதித்து வைத்த வைரமோ இக்கவிஞர்? சொல், செயல், மூச்சு அனைத்திலும் பாவேந்தரையே குறியாகக் கொண்டுள்ளார் இக்கவிஞர்.

பாரதியையும் பாவேந்தரையும் எப்படிப் பிரித்துப் பார்க்க இயலாதோ அதே போல் பாவேந்தரையும் நம் கவிஞரையும் பிரித்துப் பார்க்க இயலாது. இது நான் கூறுவதல்ல. நல்லோர் அனைவரும் அறிந்தது. இவர் பாவேந்தர் புகழ் பாடும் பாட்டுப் பறவை. பாருலகோர் போற்றும் பண்பின் சிகரம். நாட்டு நலம் நாடும் நற்றமிழர். நானிலம் சுகம் காண உழைக்கும் வீரர்.

கவிஞர் பொன்னடியார் புகழ் வாழ்க!

●

# கவிமேதை வாலியும் கவிஞர் பொன்னடியாரும்!

கவிஞர் பொன்னடியான் அவர்கள் கவிதை மீதும், தன்னலங் கருதாக் கவிதை இலக்கியப் பணிகள் மீதும் மிகுந்த பற்று வைத்துப் பாராட்டத் தவறாதவர் கவிஞர் வாலி அவர்கள். அவர் கவிஞர் பொன்னடியான் அவர்களின் 'முல்லைச்சரம்' பத்திரிகையைப் பல ஆண்டுகளாகப் வரி விடாமல் படித்து வாரி வாரி பாராட்டுக்களைப் பொழிபவர். கவிஞர் எழுதும் தலையங்கம், பொன்னடி பதில்கள், கட்டுரைகள் அனைத்தையும் படித்து அக்கு வேறு ஆணி வேறாகத் திறனாய்வு செய்யவும் தவற மாட்டார் கவிமேதை வாலி.



கவிஞர் பொன்னடியான் அவர்களின் கவிதை முதல் தொகுதி வெளி வந்திருந்த நேரம். (1976) அந்நூலை முழுமையாகப் படித்து ரசித்து கவிஞர் பெருமான் வாலி அவர்கள் கவிஞர் பொன்னடியாரைப் பாராட்டி ஒரு பாராட்டுக் கடிதம், பாராட்டுக் கவிதையுடன் எழுதினார். இதோ அந்த அரிய கடிதம்:

வாலி 22.9.77

சென்னை.

கவிஞர் பொன்னடியார்க்கு, வணக்கம்.

நலம். நாடுவதும் அதுவே.

தங்கள் கவிதை நூலைப் படித்தேன். குடம் தேனைக் குடித்தேன். அந்த போதையில் கீழ்க்கண்டவாறு என் உணர்வினை வடித்தேன்.

பொன்னடியார்; பொருளடியார்
புகழடியார் என்றெல்லாம்
பன்னடியார் படிமிசையாம்
பார்த்தறிவோம்; பாட்டாளர்
தன்னடியான் தானென்று
தைரியமாய்த் தெரிவிக்கும்
பொன்னடியான் ஒருவன்தான்
பொதுவுடமைக் கவி என்றேன்!

- வாலி.

இப்படிக் கவிஞரை, அவரின் படைப்புகளை மனந்திறந்து அவ்வப் போது பாராட்டி வரும் கவிஞர் வாலி அவர்கள் மற்றொரு முறை கவிஞர் பொன்னடியாரை வாழ்த்தி அருமையான ஒரு கவிதை எழுதி அனுப்பி னார். திரைப்படத் துறையில் மூன்று தலைமுறைப் புகழுக்கு உரிய அவர் கவிஞர் பொன்னடியான் அவர்கள் மீது வைத்திருக்கும் பேரன்புக்கு இக் கவிதையே நற்சான்று. இதோ அந்தக் கவிதை: நீங்களும் படித்துச் சுவையுங்கள்.

இப்படிக் கவிஞர் பொன்னடியான் அவர்கள் மீதும் அவர் கவிதை இலக்கியத் தொண்டுகள் மீதும் அளவிலாத அன்பும் பற்றும் வைத்திருக்கும் கவிமேதை வாலி அவர்கள். அவர் பாராட்ட வேண்டியவர்களைப் பாராட்ட வேண்டிய நேரத்தில், பாராட்டும் விதத்தில், பக்குவமாகப் பாராட்டத் தெரிந்த பண்பட்ட பாட்டு மேதை என்பது பெருமைப்படத்தக்க ஒன்றாகும்.

# முன்னடி எடுத்து வைத்த பொன்னடி!

வாள் போலும் கூர்த்தமதி;
    வெள்ளைவெளே ரென்றிருக்கும்
தாள் போலும் தூய நெஞ்சம்;
    தமிழ்கற்றார் தமையெல்லாம்
கேள்போலும் ஏற்கும் பாங்கு;
    கீர்த்திமிகு செழுந்தமிழ்
வேள்போலும் நான்மதிக்கும்
    வித்தகனாம் பொன்னடியாம்!

இழுக்கைச் சிந்தை யாலும்
    இயற்றிட எண்ணி டாதான்
அழுக்கை என்ன வென்றே
    அறிந்திடா வேட்டி கொண்டான்;
முழுக்கைச் சட்டை மாட்டி
    மூக்குமேல் ஆடி மாட்டி
வழுக்கை இல்லையென்றே
    விளக்கநேர் வகிடு கொண்டான்!

நெய்யுங் கவிதை யாடை
    நித்தமும் போர்த்திக் கொண்டு
வையந் தலைவ ணங்க
    வாழுமெம் தமிழன் னைக்கு
ஐயைந் தாண்டு காலம்
    அம்மாவோ! முல்லை யாலே
செயல்நற் சாந்தொடுத்துச்
    சேர்க்கிறான் திருவடிக்கே!

தொண்டைதான் கிழியுமாறு
    தெருவெலாம் மேடை போட்டுப்
பண்டைநாள் தமிழைப் பற்றிப்
    பேசுவோர் ஆயிரம்பேர்;
சண்டைதான் மிச்சமாகும்;
    தமக்குளே மோதி மோதி
மண்டைதான் சாய்ந்து போனார்;
    மற்றுநாம் கண்டதென்ன?



பொன்னடி ஒருவன் மட்டும்
பூந்தமிழ்த் தொண்டு செய்ய
முன்னடி எடுத்து வைத்தான்
முயற்சியில் தளர்வி லாதான்;
பின்னிடி எதற்கு மஞ்சான்;
மெய்த்தவம் ஆற்று கின்றான்!
பொன்னடி நாளும் வாழப்
பரமனை இறைஞ்சி னேனே!

கவியரசர்

**வாலி**



---

## இவர் ஒரு வழிகாட்டி



கவிதை, இலக்கியப் பத்திரிகைத் துறையில் நீண்ட காலமாகப் பணியாற்றி வருபவர் கவிஞர் பொன்னடியான். தமிழ் சினிமாத் துறையில் ஏராளமான பாடல்களை எழுதி இருப்பவர்.

இவர் சினிமாப் ப்ாடல் இயற்றும் பணியில் முழுமுச்சாக இறங்காவிடினும் வலிய வந்த வாய்ப்புகளை நன்றாகப் பயன் படுத்திக் கொண்டவர். புகழ்மிக்க பல பாடல்களை இயற்றிய பெருமையும் இவ;ருக்குண்டு. இவர் இயற்றிய பல பாடல்களும் ஜனரஞ்சமாக ரசிக்கப் பட்டவை. அண்மையப் படமான சேது போன்றவற்றில் பொன்னடியானின் பூாடல்கள் நன்கு ரசிக்கப்படுபவை. பாவேந்தர் நெருங்கிய மாணவரும் முல்லைச் சரம் நீண்ட நாளைய ஆசிரியருமான கவிஞர் பொன்னடியான் கடற்கரைக் கவியரங்கம் போன்ற இலக்கியப் பணிகளில் 35 ஆண்டுகளுக்கு மேலாக ஈடுபட்டு வருபவர். உள்நாட்டுக் கவிஞர்கள் பலருக்கு இவர் ஓர் வழிகாட்டி.

சிங்கப்பூர் ஏ.பி. ராமனின் 'தமிழ் சினிமா. 2000' என்ற நூலில்




*"அடுத்தவன் கருத்தினைக்
கேட்டுத் தெரிந்தே
அதற்கேற்றார்ப்போல்
தலையாட்டும் தம்பி
கெடுத்து விடாதே
உன்னையும் நாட்டையும்
கேவலம் பிழைப்பிற்காய்
விலைபோய் விடாதே!"*

என்ற கவிதை முழக்கம் செய்வதவர் பொன்னடியார். அவர் பகைவனாய் இருந்தாலும் அச்சமில்லாமல் மனத்தில் உள்ள கருத்துக்களை ஒளிவு மறைவின்றி படபடவெனப் பொரிந்து தள்ளி விடும் உண்மையை மறைக்காத குணம் கொண்டவர்.

*"உண்மையின் மீது
நம்பிக்கை வைத்திடு
அதுவே என் மதம்
நண்பனே"*

என்று பாடும் அவர் உண்மைக்குப் புறம்பாக அதர்ம வழிகளிலே ஒருபோதும் செல்ல விரும்பாதவர். பிறர் செல்வதையும் தடுப்பவர்.

*"எவனையும் நம்பாதே
என்னையும் சேர்த்தே
எழுதுகின்றேன் நான்
எவனையும் நம்பாதே"*

என்று மிகவும் உஷாரானவர் போல் கவிதை பாடும் கவிஞர் எல்லாரையும் கண்டவர் எவரையும் சட்டென நம்பி விடும் குணம் உடையவர் என்பது அவருடன் பழகுவோர், நட்பு கொண்டோர் அறிந்த உண்மை.

அவர் அச்சமுடைய ஆண் மக்களை கோழைகளைக் காணவும், அவர்களுடன் கலந்துரையாடவும் விரும்பாதவர்.

குடிகாரர், பலவகை போதைகளுக்கு அடிமையானோர், பலவகையான பித்தர்களைக் கண்டால் அஞ்சி ஓட மாட்டார். அவர்களுடன் பழகி அவர்களை நல்வழிப்படுத்த கடைசிவரை முயற்சி செய்வார். முடியாதபோது அத்தகையோர் நட்பை அறுத்துக் கொள்வார். அதன்பின் அவர்கள் மறைவுச் செய்தி கேட்டால் கூட துளியும் கலங்க மாட்டார். தீயவர், ஒழுக்கக் கேடானவர்கள், சமுதாயத்திற்கு ஒரு துளியும் பயன் படாதவர் திருந்தாதவர் மறைவுகளை ஒரு போதும் கணக்கில் எடுத்துக் கொள்ள மாட்டார். ஒப்புக்காக உலகியல் கருதி கூட அத்தகை யோர் துக்கங்களில் பங்கு கொள்ளவே மாட்டார்.

கவிஞர் வேகமாக நடக்கும் பழக்கமுடையவர். அவர் துணைவியார், நண்பர்கள் அவர்

வேகத்திற்கு விரைந்து வர வேண்டும் என்பது அவர் விருப்பம். அதை நிறைவேற்ற முடியாதவர்கள் நாசுக்காக ஒதுங்கிக் கொள்வார்கள்.

அவர் எப்பொழுது கவிதை எழுதுகிறார், பாட்டு எழுதுகிறார், கட்டுரை எழுதுகிறார், முல்லைச் சரத்திற்குத் தலையங்கம் படைப்புகள் எழுதுகிறார் என்பது அவரது குடும்பத்ினரே அறியாத ரகசியம்!

கவிஞர் மிகவும் விரும்புவது மக்கள் நெரிசல் அற்ற இயற்கைச் சூழல் மிக்க அமைதியான இடங்கள்.

பகைவராக - வஞ்சகராக இருந்தாலும், இல்லம் தேடி வருவோரை இன்முகத்தோடு வரவேற்க வேண்டும். உள்ளன்போடு உபசரித்து அனுப்ப வேண்டும் என்பது கவிஞரின் மாறாத கொள்கை.

சாதி, மதம், அரசியல் பெயரால் மனிதர்களை, குறிப்பாக சிந்தனையாளர்களை, கலைஞர்களை, படைப்பாளர்களைப் பிரித்துப் பார்க்கும் பேதைமை கவிஞருக்குக் கட்டோடு பிடிக்காத ஒன்று.

உடம்பில் நகை போட்டுக் கொள்வது, மிகைப்பட ஒப்பனை செய்து கொள்வது அவருக்கு அறவே பிடிக்காத ஒன்று. எதுவும், எப்போதும் இயல்பாக - எளிமையாக இருக்க வேண்டும் என்பது கவிஞரின் கருத்து.

மிகுதியான ஒப்பனைக்கு அடிமையான மனிதர்களின் சந்திப்புக் கவிஞருக்குக் கோபத்தையும் சில நேரங்களில் உண்டாக்கி விடும். மிகைப்படுத்தப்பட்ட அரிதாரம் பூசிய பேச்சுகள், எழுத்துக்கள் உண்மைக்குப் புறம்பானவை என்பது கவிஞரின் கருத்து.

இளைஞர்கள் எத்தனை மொழிகள் வேண்டுமானாலும் கற்கலாம். அதே நேரத்தில் தாய் மொழியை, தாய் மொழி இலக்கியத்தின் சுவையை ஒரு துளியும் அறியாதவர்களாய் இருந்தால் அவர்கள் அடித்தளங்கள் அற்ற கோபுரங்களுக்கு ஒப்பானவர்கள் என்பார் கவிஞர்.

தண்டிக்க வேண்டியவனைக் கூட அவன் இல்லத்திற்கே சென்று அங்கே உதைக்கயே வேண்டும். அதுதான் ஆண்மைக்கும் ஆண்மகனுக்கும் அழகு என்று கூறுவார் கவிஞர்.

கொசுக்கள், ஈக்கள் இல்லாத தூய நீர் சூழ்ந்த உலகம் வேண்டும் என்பது கவிஞரின் ஏக்கங்களில் குறிப்பிடத்தக்கது.

உணவில் பல்வகை உணவு கூடத் தேவையில்லை. மோரும் கீரையும் இருந்தால் கூட போதும் அதுவே தேவாமிர்தம். ஆனால், அது சுவையாக இருக்க வேண்டும் என்பது கவிஞரின் உணவுக் கொள்கை. சுவை இல்லாத உணவுத் தயாரிப்பாளர்கள், படைப்பாளர்கள், மனித சமூகத்தின் பகைவர் கல்லையும், மண்ணையும் கூட சுவையான உணவாக்கும் கலை வல்லவனே உண்மையான "பிரம்மா". அதாவது படைப்புக் கடவுள்" என்று கூறி சிரிப்பது கவிஞர் வழக்கம்.

உலகில் அவர் மிகவும் விரும்புவது புத்தகங்கள். அடுத்தது விருந்தோம்பல், நல்ல நண்பர்கள், மலையும், மலை சார்ந்த காடுகளும், அருவிகளும். ●

# இவர் வழி தனி வழி

## கலைமாமணி கருப்பையா

ஒரு கவிஞர் முப்பத்தைந்து ஆண்டுகளாக ஓர் இதழைச் சொந்தமாக நடத்தி வருகிறார் என்பது ஒரு சாதனை.

அவர், கொள்கைகளிலிருந்து ஒருபோதும் பிறழாமல் வாழ்ந்து வருகிறார் என்பது உண்மையிலேயே வியக்க வைக்கும் சிறப்பு மிக்க மூன்றாவது சாதனை.

இவை மூன்றுக்கும் உரியவர் கவிஞர் பெருமான் பொன்னடியார் அவர்கள் அவர் தமிழாய்ந்த தமிழர். ஆனால் அவர் தமிழை ஒருபோதும் வியாபாரம் செய்தது இல்லை.

அவரது இயல்புகளே என்னை அவர்பால் ஈர்க்கின்றன. நேர்மையும், நியாய உணர்வும் அவரது உடமைகள். அநீதியைக் கண்டால் அவர் பொங்கி எழுவார். தவறுகளுடன் அவர் ஒருபோதும் சமரசம் செய்து கொள்ள மாட்டார்.

இந்த இயல்புகள் பாராட்டுக்கு உரியவை. ஆனால் இவை சோறு போடாது. சொகுசான வாழ்க்கையைத் தராது. சொந்தக்காரர்கள் "தீதிலரோ" என்று கேட்கும் சூழ்நிலையை உருவாக்கிடாது.

கவிஞர் பெருமான் பொன்னடியார் அவர்கள் இந்தக் கசப்பான உண்மைகளை நன்றாக அறிவார். எனினும் கொள்கைகள் இல்லாத கோடீசுவரன் என்று கூறப்படுவதை விட, கொள்கைப்பற்றுடன் வாழும் கோமான் என்று புகழப்படுவதையே அவர் உளமார விரும்புகிறார்.

"என் வழி, தனி வழி; என் நடை தனி நடை; என் கொள்கை, எவன் கொள்கை வழியிலும் ஓடாது" என்று முப்பது ஆண்டுகளுக்கு முன்பே அவர் ஒரு பாடலில் முழக்கமிட்டிருக்கிறார்.

கவிஞர் பெருமான் பொன்னடியார் அவர்களின் குரல் தனிக்குரல்; அவரது மொழி தனி மொழி; அவரது சொற்கள் தனிச் சொற்கள்; அவரது வழி எவரது வழியிலும் போகாது என்றும் அவர் அந்தப் பாடலில் பிரகடனம் செய்திருக்கிறார்.

அந்தப் பாடல் அவரது வாழ்க்கையின் இலக்கணம். அவரது தனி வழி எது?

சாதி வெறி அறியாதது அவரது வழி. மத வேற்றுமைகளுக்கு இடம் தராதது அவரது வழி; எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் இந்திய மக்கள் என்று உலகப் பெருங்கவிஞன் பாரதி பாடினானே, அதுவே கவிஞர் பெருமான் பொன்னடியார் அவர்களது தனி வழியின் திருவாசகம்.

கவிஞர் பெருமான் பொன்னடியார்அவர்கள் அச்சம் அறியாதவர். அவர் அநீதியைத் துணிவுடன் எதிர்ப்பதையும், நியாயத்திற்காக அவர் இழப்புகளையும் பொருட்படுத்தாமல் போராடுவதையும் நான் பலமுறை கண்டு வியந்திருக்கிறேன்.



அவர் நல்லவர். ஆகவே பொருளியல் உலகில் அவருக்கு நியாயமாகவே கிடைக்க வேண்டிய நிலைகூடக் கிடைக்கவில்லை. அவர் தமது சொத்துக் களை ஒவ்வொன்றாக விற்றுத் தனி வாழ்க்கையையும், பொது வாழ்க்கையையும் நடத்தி வருகிறார். முணுமுணுப்பில்லாமல் அவரது பணிகள் அனைத்துக்கும் உறுதுணையாக உள்ள அவரது மனைவியார் இந்த வகையில் உள்ளபடியே பாராட்டுக்கு உரியவர்.

நான் அவரை மிக நன்றாக அறிவேன்; ஆனால் நான் அவருக்குத் தொலைவில் இருப்பவன். எனினும் என்னை அவர் அடையாளம் கண்டு கொண்டார். அவரது "முல்லைச்சரம்" பல்சுவை மாத இதழாக மாற்றம் பெற்றதைக் குறிக்க ஒரு சீரிய விழா சென்னையில் இசைஞானி திருமிகு இளையராஜா அவர்கள் தலைமையில் நடந்தது. அந்த விழாவில் "முல்லைச்சரம்" முதலாவது இலக்கிய விருது எனக்கு வழங்கப்பெற்றபோது நான் மிகவும் நெகிழ்ந்து போனேன்.

எழுத்துலகில் பேரறிவாளர் என்று அந்த விருது வாசகங்களில் கவிஞர் பெருமான் பொன்னடியார் அவர்கள் என்னை விவரித்திருந்தார்.

"உண்டாலம்ம இவ்வுலகம்" என்று தொடங்குகின்ற புறநானூற்றுப் பாடல் இவரைப் போன்றவர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கருதித்தான் பாடப் பெற்றது என்று உணருகிறேன்.

"போலிச் சமுதாயக் கோட்டையில், முழுப் பொய்மை என்னும் கழுப் பேட்டையில் நெடுவேலி அமைத்துக் குடியிருக்கும் வேடம் புனைந்த மனிதருக்கு" எதிராகப் போராடி வருபவர் கவிஞர் ஏறு பொன்னடியார் அவர்கள்.

அவரது இந்தப் போராட்டம் வெற்றி பெற வேண்டும் என்று விழைகிறேன்.




நமது கவிஞர் பொன்னடியார், மறைந்த கவிஞர் புதுவை பாரதிதாசன் அவர்களின் கவிதை வாரிசு மட்டுமல்ல, மறைந்த அமரர் பெரும்புலவர் சவராயலு நாயக்கர் அவர்களின் வாரிசும் கூட என்று குறிப்பிடுவதில் நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

"முல்லைச்சரம்" என்ற மாதாந்திர வெளியீட்டின் மூலம் அவர் தமது சீரிய இலக்கியப் பணியாற்றி, தற்போது அவரின் 40-ஆம் ஆண்டு தொண்டின் மணிவிழா காண்கிறார். தமிழ் நாட்டுச் செய்திகள் மட்டுமல்லாமல், அகில இந்திய நடப்புகளையும், அகில உலக நிகழ்ச்சிகளையும் ஆய்ந்து, அச்சமின்றி விமர்சனம் செய்வது மனநிறைவு அளிக்கிறது. சில செய்திகளை முன்கூட்டியே பல டி.வி. நிறுவனங்கள் வாயிலாக வருமுன்னரே முல்லைச்சரத்தில் வெளியிடுவது மிகவும் பாராட்டுக்குரியது.

ஏற்கெனவே குறிப்பிட்டது போல நமது கவிஞர் பொன்முடியார் கவிஞர் பாரதிதாசனின் இலக்கிய வாரிசாகக் கடந்த 40 ஆண்டுகளாகத் தொடர்ந்து துணிவு மிக்க மனத்திடனுடன், பொருளாதார இதர நெருக்கடிகளை, இடர்ப்பாடுகளை மேற்கொண்டு இலக்கிய சேவையில் ஈடுபட்டுள்ளது பெரும் சாதனையாகும்.

சில ஆண்டுகளுக்கு முன்பு, முல்லைச்சரத்தின் வெள்ளிவிழாவின் போது

பல சான்றோர்கள், கவிஞர்கள், அறிஞர்கள், பத்திரிகை ஆசிரியர்கள் தங்கள் பாராட்டை வழங்கினார்கள். அவ்வமயம் மறைந்த தொழிலதிபரும், பத்திரிகை ஆசிரியருமான திரு. ஜி . உமாபதி அவர்கள் கூறியது என் நினைவுக்கு வருகிறது. அதாவது, தாம் பல வருடங்கள் அனுபவம் பெற்றிருந்தாலும், ஐந்தாறு வருடங்களுக்கு மேலாக தாம் நடத்தி வந்த பத்திரிகையை தொடர்ந்து நடத்த முடியவில்லை என்றார். எனவே நமது கவிஞர் பொன்முடியார் விடா முயற்சியுடனும், ஆர்வத்துடனும், தைரியத்துடனும் எவ்வாறு ஒரு கப்பலின் தலைவன் **Captain** நடுக்கடலில் புயலையும் சந்தித்து, அதை எதிர்கொண்டு தனது பிரயாணிகளையும் சேதமின்றி, சாதுர்யமாக கரை சேர்க்கிறானோ, அவ்வண்ணமே தொடரும் அவரது சீரிய 40 ஆண்டு இலக்கியப்பணி "வாழ்க, வளர்க" என்று இதயக் கனிவோடு வாழ்த்தி, எனது அருமைத்தாயார், "தனிப்பெரும் கலைஞர்" சந்திரா அம்மா அவர்களின் ஆசியையும் சேர்த்து "முல்லைச்சரம்" வெளியீடு பல்லாண்டு தொடர்ந்து சாதனை புரியவும், அவருக்கு உடல் நலமும், ஆரோக்கியமும், நீண்ட ஆயுளும் அருளும்படி எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

"வாழ்க கவிஞர் பொன்முடியார்
வளர்க முல்லைச்சரம்"



# முதன் முதலாக...



முதன்முதலாக கவிஞர் பொன்னடியார் கவிதை வெளி வந்த பத்திரிகை 'தமிழ்நாடு' (நாளிதழ் - 1960) கவிதை: வையம் வாழ்த்தும் வள்ளுவர்.

முதன் முதல் சென்னையில் கவிஞர் பங்குபெற்ற கூட்டம்:

கவிஞர் பொன்னடியார் முதன் முதலாக சென்னையில் கலந்து கொண்டு பேசிய கூட்டம் இசை யரசி எம்.எஸ். சுப்புலட்சுமி அவர் களை கர்நாடகத்தில் அவமதித்த கன்னடர்க்கு எச்சரிக்கை விடுக்க ஏற்பாடு செய்யப்பட்ட கூட்டம். புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் விருப்பப்படி அவர் உதவியாள ரான கவிஞர் பொன்னடியார் ஏற்பாடு செய்த கூட்டம் அது. அக் கூட்டம் சென்னை தியாகராயநகர் வாணி மகாலில் நடைபெற்றது. தலைமை: புரட்சிக் கவிஞர் பாரதி தாசன். வரவேற்புரை: கவிஞர் பொன்னடியான். கன்னடர் இனி வருங்காலங்களில் இப்படி நடந்து கொள்ளக் கூடாது என்ற வேண்டு கோள் அடங்கிய தீர்மானத்தைப் படித்தவரும் பொன்னடியே.

இக் கூட்டத்தில் நாம் தமிழர் இயக்க சென்னை மாவட்டத் தலைவராக அன்று விளங்கிய ஜெயச்சந்திரன், முன்னாள் அமைச்சர் திருச்சி செளந்தர ராஜன், திருமலை நடராசன் (சித்தமருத்துவர்) போன்றோர் பங்குப் பெற்றுப் பேசினர் என்பது குறிப்பிடத்தக்கது.

முதன் முதல் பாட்டு எழுதி வெளிவந்த படம்?

'நெஞ்சில் ஒரு முள்'

இசை: ஜி.கே. வெங்கடேஷ். (இசைஞானி இளையராஜா குரு) இயக்கம்: மதிஒளி சண்முகம் (பத்திரிகை ஆசிரியர், எழுத்தாளர்) இதில் முதன்முதலாக கதாநாயகி யாக நடித்தவர் நடிகை பூர்ணிமா (பாக்யராஜ்).

*பாடல்:*
*தேரோடும் வீதி எங்கும்*
*பூமாலை ஊர்வலங்கள்*
*வாலிப நெஞ்சம் எல்லாம்*
*வாருங்களே - புது*
*வண்ணத்தின் கோலங்கள்*
*பாருங்களே!''*

முதன் முதலாக இளைய ராஜா இசையில் பாடல் எழுதிய படம்?

'சொல்லத் துடிக்குது மனசு'

இயக்குநர்: பி. லெனின்

கதாநாயகன்: கார்த்திக்

பாடல்:

"குயிலுக்கொரு நிறமிருக்கு - அதன்
குரலுக்கொரு நிறமிருக்கா?
கொண்டாடும் இந்தப்
பொன்னான மண்ணில்
வந்தாடும் நிறம் எத்தனை
எத்தனை?
ஒன்னான இந்த மனித
இனத்தில்
உண்டான குணம் எத்தனை
எத்தனை?

கவிஞர் பொன்னடியார் முதன் முதல் பாட்டு எழுதிய படம்?

ரசிகன் - இயக்குநர்: 'பராசக்தி புகழ் கிருஷ்ணன்-பஞ்சு. இசை: வி.குமார். அந்நாளைய புகழ் மிக்க நடிகை லதா - ஜேவி போன்றோர் நடித்தனர்.

முதன்முதலாக உதவி ஆசிரிய ராக கவிஞர் பணியாற்றிய பத்திரிகை: 'தென்றல் திரை' ஆசிரியர்: மூத்த பத்திரிகை யாளர்: நவ்னன். வெளியீட்டாளர்: அமரர் கே. ஆர். பாலன்.



முதன்முதலாக வெளிவந்த கவிஞர் பொன்னடியார் கவிதை நூல் 'பனிமலர்' வெளிவந்த ஆண்டு: 1964.

முதன்முதலாக கவிஞர் பொன்னடியார் தொடங்கிய திறந்த வெளிக் கவியரங்கம்: கடற் கரைக் கவியரங்கம். நாள்: 12-6-1971. முதல் கவியரங்கத் தலைவர்: கலைமாமணி கு. மா. பாலசுப்பிரமணியம் (எம்.எல்.சி.)

முதன்முதலாக கவிஞர் பொன்னடியார் தொடங்கிய பத்திரிகை 'முல்லைச்சரம்'. ஆண்டு 1966. இடம்: 100, வேளாளர் தெரு, வேளாளர் சங்கம், புரசைவாக்கம் சென்னை - 7.

— எம்.டி.ஹரிகோபால்






புதியதொரு மீன்பிறந்தால் போதிக்க வருவருண்டோ!
மதிய உண வாய்க்கொள்ள மாமீன் வருவதுண்டு.
மதியினை வளர்த்துக்கொள்ள மற்றமீன் துணைபுரிவதில்லை
விதியினைத் தானேயிறுதி செய்மீனும் புலவனிடத்து.

சங்ககாலம் தொடங்கி எங்கள் காலம் வரையிருந்த
தங்கநிகர் தமிழ்க்கவிஞர் தன்மையெலாம் மாற்ற
கருவாகிப் பாவேந்தர் பாசறை தன்னிலே
உருவாகிப் பெருங்கவிஞர் வந்தார் மண்ணில்.

புதியவர்கள் வரத்தை தடுக்கும் தாணியாகாத்
நதிகடந்து கரை சேர்க்கும் தோணியானார்
அட! கரை சேர்க்கும் தோணியாக ஆனதாலோ
கடற்கரையில் களமமைத்தார் கவிதை சொல்ல.

பாரதியார் போன்ற பாமுனிகளுடன் சகவாசம்
பாவேந்தர் போற்றிப் பாராட்டிய விசுவாசம்
பாட்டுக்கு உழைப்பதில் தேடவில்லை சுகவாசம்
பாவலரே உமக்கென்றும் தமிழே சுவாசம்.

அரும்புகளும் விரும்புகிற அழகு தமிழில்
கரும்பெனவே சுவைமிகு கவிதை செய்து
பாமரனும் புரிந்து போற்றும் பாநயத்தில்
பாமரபு சிறப்புறவே பாடல் ஈந்தார்.

பெற்றமிழ் அவருக்கு மிகவும் இயல்பானது
பெற்றி வைத்த கவியெலாம் இனிமையானது.
அருந்தமிழோ அவருக்குக் கை வசமானது
தரும்வரிகள் தமிழ் மணக்க வாசமானது.

வரகவியின் வார்த்தைகள் வெடிச் சரமானது
புரட்சி என்றுபெரும் பொருள்தன் சாரமானது
நாவேந்தர் நவின்றமொழி வருமானம் தேடியல்ல
பாவேந்தர் பாணியிலே வரும் மானம் காத்திடவே!

அன்னாரின் பெயரை நானுமக்குச சொல்லவில்லை
இன்னமுமா உங்களுக்கு அவரைத் தெரியவில்லை
மின்னலென கண்கவர்ந்து இடியென கருத்தைக்கூறும்.
பொன்னடியான் எனப்புகழும் பெரு மகனார் அவரே!

நிதியம் மிகப் பெருக்கும் பெரும்தனக்காரரும்
மதியழித்துக் கெட்டாலும் செய்யத் துணியாப்
புதியவொரு முல்லைச்சரம் புத்தகம் செய்தார்
அதியமானின் நெல்லிக்கனி அவருக் கீவீர்!

காட்டிடையே உலா வந்தான் பாரிமன்னன்
மீட்டான் தன்தேர் ஈந்து முல்லைச்சரமே
மன்னன் தன்தேர் ஈந்தான் பெரிதே அல்ல
பொன்னன் தன்வாழ்வே ஈந்தான் சரத்தைப்பேண

பெரும்புலவர் வரிசையிலே உமது பெயரும்
வரும்நாள் வெகுதொலைவில் இனியில்லை இல்லை
நற்கவியே உமதுநாற்பதாண்டு பணியை வாழ்த்தி
நன்றிபல வணங்குகிறோம் தலையை தாழ்த்தி.



# இதயம் தொட்ட இரண்டு மடல்கள்

கவிஞர் பொன்னடியார்

பிறரின் நல்ல செயல்களை, படைப்புகளை மனந்திறந்து பாராட்டுவதற்குப் பெரிய மனம் வேண்டும். அப்படிப் பாராட்டுகின்ற மனங்களில்தான் உண்மை அன்பு குடி கொண்டிருக்கிறது. உலகில் பல துறை வெற்றியாகளர்களுக்கும் பாதுகாப்பு அரண்களாகவும், அவர்களின் வளர்ச்சிக்கு உரமாகவும், தாய்ப்பாலாகவும் விளங்குபவை அத்தகைய தன்னலங் கருதாப் பாராட்டுரைகளே.

இன்று பல துறைகளில் இளைஞர்கள் முன் எப்போதும் இல்லாத அளவுக்கு வளர்ந்து வருகின்றனர். குறிப்பாக கவிதைத் துறையில், எழுத்துத் துறையில் புதிய பார்வையோடும், வீச்சோடும் வளர்ந்து வருகின்றனர். அவர்கள் மேலும் தங்கள் திறமைகளை வளர்த்துக் கொள்ளப் பிறரின் படைப்புகளையும் படித்து இன்புறும் பாங்கினை வளர்த்துக் கொள்ள வேண்டும்; அதற்கு அடுத்த கட்டமாக அப் படைப்பாளர்களைப் பாராட்டுகின்ற மனப் பக்குவத்தைப் பெற வேண்டும்; அதற்கு அடுத்த மூன்றாவது கட்டமாக அப்படைப்பாளர் வளர்ச்சிக்குத் தங்களால் முடிந்த அளவில் எல்லாம் துணை நிற்க வேண்டும் என்ற பண்பினை வளர்த்துக் கொள்ள வேண்டும். இந்த மூன்று சிறப்புக் குணங்களையும் கொண்ட படைப்பாளர் தானும் வளர்வதோடு தன் தாய் நாட்டின் வளர்ச்சிக்கும் உதவுகிறார் என்பதே என் கருத்து. ஒரு தனி மனிதனின் திறமை என்பது அவன் தாய் நாட்டிற்குப் பயன்படும் பொதுச் சொத்து என்பதே என் எண்ணம்.



பல ஏடுகளில் பல எழுத்தாளர், கவிஞர் எழுதி வருகின்றனர். அவர்கள் படைப்பு வெளிவரும் ஏட்டில் மற்றொருவர் சிறந்த படைப்பைப் படித்துச் சுவைத்தாரா? என்ற கேள்விக்கு "இன்னும் படிக்கவில்லை" என்ற பதில் பெரும்பாலும் நமக்குக் கிடைப்பதுண்டு. இதற்குக் காரணம் நேரமின்மை அல்ல - மனமின்மை! இந்த

மனமின்மையில் தான் "நான்" என்ற அகந்தையே வளர்கிறது.

இந்த அகந்தைத் நம் இதயத்தில் வளர எழுத்தாளர், கவிஞர் ஒரு போதும் இடம் கொடுத்தல் கூடாது. தங்கள் தகுதிகளை - பெருமைகளை வேண்டும் என்றே குறைத்து மதிப்பிடும் வஞ்சகர்-போலிகள் எதிரில் மட்டுமே படைப்பாளர்கள் இறுமாப்புடன் நடந்து கொள்ள வேண்டும். மற்ற நேரங்களில் தற்பெருமை சாரா, அமைதி வடிவமாகப் படைப்பாளர் நடந்து கொள்ள சேண்டும். இந்த நோக்கங்களை வலியுறுத்தவே அண்மையில் என் இதயம் தொட்ட இரண்டு மடல்களை இங்கே வெளியிடுகின்றேன்.

என் நீண்ட கால கவிதை இலக்கியப் பணிகளைப் படைப்பு களைப் பாராட்டி எத்தனையோ பெருமக்களின் பாராட்டுகளைப் பெற் றுள்ளேன்; பெற்று வருகின்றேன். பெரும்பாலும் அப்பாராட்டுகளை என் ஏட்டிலும் வெளியிடுவதில்லை. என் இதயத்தில் மட்டுமே வைத்துப் பூட்டி வைத்துக் கொள்வதுண்டு - என் உழைப்பு இழப்புக்கு நம்பிக்கை யூட்டும் என்ற கணக்கில்.

எனக்கு வந்த மடல்களில் ஒரு மடலை எழுதியவர் தமிழகத்தின் போற்றதலுக்குரிய பெருங்கவிஞர் கலைமாமணி கு. மா. பாலசுப்ர மணியம் அவர்கள். தம் ஒப்பற்ற கவிதைகளாலும், இனிய திரைப் பாடல்களாலும் பல ஆண்டுகளாக நம் இதயத்தில் இனித்துக் கொண்டி ருப்பவர்; இளைஞர்களைத் தட்டிக் கொடுத்து வளர்ப்பதில் முன்னணி யில் நிற்பவர்.

பாவேந்தர் கண்ட தமிழ்க்கவிஞர் மன்றத்தின் மூன்றாவது தலைவ ராகப் பொறுப்பேற்று, தமிழ் உலகே வியக்கத்தக்க தமிழ்க் கவிஞர் முதல் மாநாட்டை நடத்தி வரலாறு படைத்தவர். சார்புகளுக்கு உட்படாத் தமிழ்க்கவிஞர் மன்றத்தை நடத்திச் செல்ல இன்றும் துணை நிற்பவர். மேலவை உறுப்பினராகப் பொறுப்பேற்றுத் தமிழ்க்கவிஞர் - எழுத்தாளர் மேன்மைக்காக அடக்கமாகப் பாடுபட்டவர். தவறு கண்ட போது தட்டிக் கேட்பதும் சிறப்பு கண்டபோது பாராட்டுவதும் இயல்பாகக் கொண்ட கொள்கை மறவர். இன்றும் எனக்கு வழிகாட்டியாக, என் மூத்த சகோதரராக விளங்குபவர்.

மற்றொரு மடலை எழுதியவர் நூற்றாண்டு விழாக் காணும் விடு தலைக் கவிஞர் நாமக்கல் கவிஞரின் திருமகனார்- பண்பாளர்- படைப்பாளர் திரு இரா. அமிர்தலிங்கம்.

"வெற்று விளம்பரம் வீண் புகழ்ச்சிக்கெலாம் சற்றும் இடம் கொடுக்காதே" என்ற கொள்கையுடைய நான் இவை போன்ற பிற பாராட்டுக்களுக்கும் இவை போன்று இன்றும் கிடைத்து வரும் பிற பாராட்டுக்களும் எனக்குக் கிடைத்தவையாகவே எண்ணியதில்லை கவிதைத் துறையின் வழிகாட்டிகளுக்குக் கிடைத்தவையாகவே எண்ணுகிறேன்.

பல்வேறு பலங்களுடன் நடை பெறும் சுய விளம்பரச் சந்தையில், இடர்ப்பாடுகளும், இழப்புகளும் உறுதி என்பதை நம்பி, அன்பு சொரிவோர், ஆதரவளிப்போர் சிலரே என்ற கணக்கை நம்பிச் செல்லும்

நான் என் இளைய தோழர்கள் சில நல்ல பண்புகளையும் கற்றுக் கொள்ள வேண்டும் என்று விரும்பிகின்றேன். சிறந்த படைப்பாளனாக ஒருவன் விளங்குவதோடு, சிறந்த பண்பாளனாகவும் விளங்க வேண்டும் என்பது என் கொள்கை. பிறர் படைப்புகளையும் படிக்க வேண்டும்; சுவைக்க வேண்டும்; பிறரிடம் சிறப்புக் கண்டவிடத்து மனந்திறந்து பாராட்ட வேண்டும். அப்படிப் பாராட்டுகின்ற நெஞ்சம் தான் பாரதி- பாரதி தாசன்-கவி மணி-நாமக்கல்லார் வழி நடக்கும் நெஞ்சமாக இருக்க முடியும். வஞ்சம் சூதுகள் அற்ற போட்டி, பொறாமைகள் அற்ற இத்தகைய மேன்மைக் குணங்களால் நாம் சார்ந்த சமூகம் மட்டுமல்ல, மனித சமூகமே பயன்படும்; பண்படும் என்பதை நினைவில் பதிப்போம்.

இதோ அந்த மடல்கள்:

*மடல்-1*

*சென்னை -14*

*1-12-88*

*அன்புக் கவிஞர் பொன்னடியான் வாழ்க! நலம். "முல்லைச்சரம்" மன்னர் மன்னன் சிறப்பிதழ் கண்டு மகிழ்ந்தேன்.. பன்னெடுநாளாய்த் தங்கள் கவிதைகளால் நான் பரவசம் அடைந்ததுண்டு. பாராட்டியது உண்டு. ஆயினும், இந்தச் சிறப்பிதழில் நான் கண்ட "நாமக்கல்லார் பாநயம்" தங்கள் கவிதை மாட்சிக்கே சிகரம் என்று போற்றுகின்றேன். அந்தக் கவியரங்கில் நீங்கள் மட்டுமே நிமிர்ந்திருப்பீர்கள் என்றும் நம்புகிறேன். தங்கள் திறனும் புகழும் மேன்மேலும் வளர்ந்தோங்க வாழ்த்துகிறேன்.*

*அன்புள்ள*

*கு.மா.பா.*

*மடல்-2*

*சென்னை*

*1-12-88*

*அன்பிற்குரிய கவிஞர் பொன்னடியான் அவர்களுக்கு வணக்கம் நலம். நாடலும் அதுவே. தாங்கள் அன்புடன் அனுப்பி வரும் 'முல்லைச்சரம்" படித்து மகிழ்ந்து வருகிறேன்.*

*பாரதி பரம்பரையின் மூன்று கவிஞர்களான என் தந்தை அவரது தேசியக் கொள்கைக்கு வாரிசாகவும், பாரதிதாசன் அவரது கற்பனை வளத்துக்கு வாரிசாகவும், கவி மணியோ, "ஓடி விளையாடு பாப்பா" என்று பாடிய பாரதியின் குழந்தைப் பாடல்களுக்கு வாரிசாக இருந்தார் எனக் கொள்ளலாம். ஆனால், என் தந்தையின் நூற்றாண்மு விழா நிறைவு விழாவில் பாடிய தங்கள் கவிதையை நான் படித்துப் பார்த்தபோது நீங்கள்*

மேற்கூறிய நான்கு கவிஞருக்கும் வாரிசாக விளங்குகிறீர்கள் என மனதில் தோன்றியது. ஏற்கெனவே தங்கள் கவிதைகள் பலவற்றைப் படித்து ரசித்திருக்கின்றேன்.

நல்ல பாடல்களையும் நாட்டிற்குத் தேவையான நல்ல கருத்துள்ள கட்டுரைகளையும் வெளியிடும் 'முல்லைச்சரம்' ஆசிரியரான தங்களைப் பாராட்டுகிறேன்.

அன்புள்ள

இரா. அமிர்தலிங்கம்

(நாமக்கல் கவிஞர் திருமகன்)

ஆள் பார்த்து, அம்பு பார்தது, சாதி பார்த்து, மதம் பார்த்து, அரசியல் சாயம் பார்த்துப் பாராட்டாமல் உண்மைத் திறமை பார்த்துப் பாராட்டும் பண்புகளை வளர்த்துக் கொள்வோம்; சமூகத்தின் வளர்ச்சிக்குத் தோள் கொடுப்போம். இதையே நம் பொங்கல் நாள் சிந்தனையாக இதயத்தில் ஏற்போம்.

நன்றி: *'முல்லைச்சரம்' 1-1-89 பொங்கல் சிறப்பிதழ்.*




## உயிரூட்டுவோம்!

இனவெறி மதவெறி
இல்லாத சமூகத்தை
இனியேனும் படைத்திடுவோம்!
எல்லாரும் உறவினர்
எனும் எண்ணம் தலை தூக்கும்
திரு நாட்டை வடித்திடுவோம்!

வஞ்சகம் வாலாட்டும்
வறுமைகள் காலாட்டும்
வாழ்வினில் தீமூட்டுவோம்!
வற்றாத அன்பு நெறி
வளையாத பண்பு நெறி
வளர்த்திட உயிரூட்டுவோம்!

# வெள்ளி விழாவில் துள்ளி எழுந்தவை



## முத்தமிழ்க் காவலர் தலைமையில் எழுச்சிக் கவிஞர் இலக்கியப் பணி (வெள்ளி விழா)

ஒரு கவிஞனுக்கு, கவிஞர்களே விழா எடுப்பது புதுமை! வரவேற்கத்தக்கது!

—முத்தமிழ்க் காவலர்

'பாரதிதாசன் பரிசு' முதன் முதலாகப் பொன்னடியானுக்குத்தான் கொடுத்திருக்க வேண்டும்!

—நாரண துரைக்கண்ணனார்

பாரதிக்கு, பாரதிதாசன்! பாரதிதாசனுக்கு பொன்னடியான்!

—பன்மொழிப்பலவர்

பொன்னடியான் தன் கவிதைத் திறத்தால் நிற்கிறார்!

—அமைச்சர் டாக்டர் நாவலர்

இருபெரும் திருவிழக்கள் எழுச்சியோடும் பூரிப்போடும் கொண்டாடப் பெற்றன. 24-2-85 ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்குச் சென்னை மயிலை பாரதிய வித்யா பவனத்தில் அரங்கம் நிறைந்து வழிய விழா தொடங்கியது.

இது, ஓர் தனி மனிதருக்கு எடுக்கப்பட்ட விழாவல்ல; தமிழ் இயக்கத்துக்குத், தமிழ் உணர்வாளர்களின் கைவாளாக விளங்கும் முல்லைச் சரத்துக்கு எடுக்கப்பட்ட விழாவாகும்.

ஒரு பெரும் மாநாடு போல் அரங்கம் தோற்றமளித்தது' விழ மேடையை மராட்டிய மாநிலத் தமிழ்க் கவிஞர் மன்றத்தினர் எழில் கொஞ்ச அலங்கரித்திருந்தனர். கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

அரங்கத்திற்கு வெளியே, கவிஞரும் தமிழ்க் கவிஞர் மன்ற நிகழ்ச்சிகளும் தொடர்புடைய புகைப்படக் கண்காட்சியைச், சீரும் சிறப்புமாகத் தொகுத்து வைத்தனர். அவ்விழாவில் பேசிய சில அறிஞர்களின் கருத்துளிகள் மட்டும் இங்கே சுருக்கித் தரப்பட்டுள்ளது.

## முத்தமிழ்க் காவலர்:

விழாக்குழுத் தலைவர், இலக்கியச் சித்தர் வலம்புரிஜான் அவர்கள் ரூ. 50,000 த்தையும் பட்டுச் சால்வையையும் முத்தமிழ்க் காவலரிடம் கொடுக்க, அதை அவர் கவிஞர் பொன்னடியானிடம் முல்லைச்சரம், வளர்ச்சிக்குக் கொடுத்துப் பட்டுச் சால்வையைப் போர்த்திய போது, அரங்கம் நிறைந்த மக்கட் கூட்டம் வாழ்த்தொலியும் கையொலியும் எழுப்பி மகிழ்ச்சியைத் தெரிவித்தது!

முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் பேசும்போது, அறிஞர்களை, அவர்கள் வாழ்ந்த காலத்தில் போற்றத்தவறியதால்தான் தமிழகம் தாழ்ந்து போனது! அந்தக் குறையைப் போக்கும் வகையில்தான், இன்று கவிஞர் பொன்னடியானுக்கு மற்ற கவிஞர்கள் கூடி விழா எடுக்கிறார்கள். இது பாராட்டத்தக்க செயல்!

எல்லோரும் பேசுவார்கள் அவர்களால் செயல்பட முடியாது. கோடை இடிஇடித்துக் குளம் நிரம்பாது! மழை பெய்துதான் குளம் நிரம்ப வேண்டும். ஆகவேதான் செயற்கரிய செய்கிறவர்களைப் 'பெரியர்' என்றார் திருவள்ளுவர்.

ஒரு பத்திரிகையைத் தொடர்ந்து 19 ஆண்டுகள் நடத்துவது என்பது செயற்கரிய செயல்தானே! பதினான்கு ஆண்டுகளாகக் கடற்கரையில் கவியரங்கம் நடத்தி வருவது செயற்கரிய செயல்தானே! இளைஞர்களை ஊக்கப் படுத்தி அவர்களை அரவணைத்துச் செல்வதென்பதும் அரிய செயல்தானே! இத்தகைய அரிய செயல்களைச் செய்துவரும் பொன்னடியான் பெரியவர்தான்!

இருபத்தைந்து ஆண்டுகளாக அவரது பணிகளைப் பார்த்து வருகிறேன். 'முல்லைச்சரம்' நல்ல மரபுக் கவிதைகளைத் தாங்கி வருகிறது. எளிய தமிழில் 'தூய தமிழில்' இனிய சொற்களோடு அமைந்துள்ளது. தொடர்ந்து ஒரு தனிமனிதரால் நடத்தப்பட்டுவருவது பாராட்டத்

தக்கது. இன்று, நாட்டில் ஆற்றல் வாய்ந்தவைகளாக இருப்பவை சினிமாவும் பத்திரிகைகளும் தான்!

சினிமாவை, மனைவி மக்களோடு போய்ப் பார்க்கும் படியாக இல்லை! பத்திரிகைகளும் அப்படியேதான் இருக்கின்றன.

பத்திரிகைகள் ஆபாசமாக இருந்தால், நீங்கள் செய்ய வேண்டுவது ஒன்றுதான் அதாவது ஒரு பதினைந்து பைசா அஞ்சலட்டையில் உங்கள் எதிர்ப்பை ஆயிரக்கணக்கில் அந்தப் பத்திரிகை அலுவலகத்துக்குத் தெரியப் படுத்த வேண்டும். அவனும் மனிதன்தானே. எதிர்ப்பைக் கண்டு கண்டிப்பாகத் திருத்திக் கொள்வான்.

'புதுக்கவிதை' என்று சொற்களை உடைத்துப் போட்டு அடுக்குகிறார்கள். அது மக்கள் மனத்தில் நிற்காது! மரபுக் கவிதையில் சந்தங்களோடு எழுதும் போதுதான் அது படிப்பவனின் மனத்தில் தங்கும்.

இன்னுஞ்சிலர், பேசுவதுபோல் எழுத வேண்டும் என்கிறார்கள் 'யார் பேசுவதுபோல்?" என்று ஒரு கேள்வியைக் கேளுங்கள்.

மறைமலையடிகள் பேசுவது போலவா? திரு. வி. க. பேசுவது போலவா? நடைபாதை மக்கள் பேசுவதுபோலவா? யார் பேசுவது போல் எழுதினால் நிலைக்கும்?

'இலக்கணம்' என்பது மொழிக்குமட்டுமல்ல, எல்லாவற்றிற்குமே இலக்கணம் உண்டு. எதையும் அதன் அதன் இலக்கணப்படி எழுதினால்தான் நிலைத்து நிற்கும!

மூவேந்தர் காலத்தில் மொழிக்கும் கலைகளுக்கும் ஆதரவு கொடுத்தார்கள். அவை செழித்து வளர்ந்தன. குறுநில மன்னர்கள் காலத்திலும் அந்த ஆதரவு இருந்தது. அதன் பிறகு ஆதரவு இன்மையால் மொழியும் கலைகளும் நலிந்து போயின.

அறுபது ஆண்டுகளாகத் தமிழுக்கு ஒரு பல்கலைக் கழகம் வேண்டும் என்று குரல் கொடுத்து வந்தோம். பொன்மனச் செம்மல் காலத்தில் அது நிறுவப் பெற்றது. இன்று, அந்தப் பல்கலைக்கழகத்தில் ஒரு அகராதி தயாரிக்கிறார்கள். அது தமிழ் அகராதி அல்ல; கலப்பட அகராதி! அந்த முயற்சியை அவர்கள் கைவிட்டுத் தமிழ் அகராதி மட்டும் தயாரிக்க வேண்டும்.

'நல்ல நாடு எது' என்பதற்கு ஒரு அறிஞன் சொல்கிறான்-" எங்கே சிறுபான்மையினர் பாதுகாப்புடன் இருக்கிறார்களோ, அது தான் நல்ல நாடு!" என்று.

இன்று நடைபெறும் இந்த விழா மூன்று நாள்கள் நடைபெறவேண்டிய விழா! அவ்வளவு சிறந்த விழா இந்த விழா!

கவிஞர் பொன்னடியானின் கவிதைகள் எளிமையானவை கருத்துள்ளவை!

அவரும் அவரது துணைவியாரும் பிள்ளைகளும் உடல் நலத்தோடு பல்லாண்டு வாழ்ந்து தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் தொண்டாற்ற வாழ்த்துகிறேன்!



## மாண்புமிகு டாக்டர் நாவலர்:

"பாரதிதாசனிடம் 'நீ பகுத்தறிவுவாதியாயிற்றே. பாரதிக்கு எப்படி தாசனாகலாம்' என்று கேட்டபோது அவர் சொன்னார்: நான் பாரதிக்கு மட்டும்தான் தாசனேதவிர உலகத்தில் எவனுக்கும் நான் தாசனல்லன்' என்றார்.

அந்தப் புரட்சிக்கவிஞரின் பொன்னடிக்கு மட்டும்தான் இவர் - பொன்னடியான்' - தாசனாவார். வேறு எவருக்கும் அல்ல!

கவிகள் மட்டும் எழுதுகிற கவிஞர்கள் பலபேர் உண்டு. ஆனால் செயல்படுகிறவர்கள் ஒரு சிலரே! பொன்னடியான் கவிதைகள் மட்டும் எழுதுவதில்லை, செயல்படவும் செய்கிறார் நான்கூடப் பத்திரிகை நடத்திப் பார்த்தவன் தான். அதிலுள்ள சிரமங்கள் என்னென்ன என்று எனக்குத் தெரியும். ஒரு பத்திரிகையைப் 19 ஆண்டுகள் நடத்துவது மிகப் பெரிய செயல்தான். அந்தப் பத்திரிகையை மேலும் பொலிவோடு நடததுவதற்காகத்தான் ஐம்பதாயிரம் ரூபாய், குருவி தானிய மணிகளைப் பொறுக்கிச் சேர்ப்பது போல் நீங்கள் சேர்த்துக் கொடுத்திருக்கிறீர்கள்.

'தமிழின் சிறப்பை ஆயிரம் மொழிகளில் காண அலாவுற்றேன், என்று பாவேந்தர் பாடியதற்கொப்ப, அவரது சீடரின் கவிதைகள்

முதன்முதலாக நான்கு மொழிகளில் வெளி வந்திருக்கின்றன.

பாரதிதாசனுக்கு அமைந்த பரம்பரையைப் போல் வேறு எந்தக் கவிஞருக்கும் அமையவில்லை!

பாரதியார் அடித்தளம் போட்டார்! பாரதிதாசன் கோபுரம் அமைத்தார்! பொன்னடியான் அதைக் காத்து வருகிறார்.

பழைய காலத்தில், அருமையான தனிப்பாடல் திரட்டு ஒன்றை உருவாக்கினர், நம் முன்னோர். அதன் மூலம் பல கவிஞர்களை நாம் அறிய முடிகிறது! அதே போல், பொன்னடியானும் தமிழ்க் கவிஞர் மன்றத்தினரும் தற்காலத்தில் வந்துள்ள கவிதைகளில் சில நல்ல கவிதைகளைத் திரட்டிச் சிறந்ததோர் நூலாக்கித்தர வேண்டும். அதுதான் எதிர்காலத்தில் நிற்கும்.

கவிஞன் என்பவன், இறைக்க இறைக்கச் சுரக்கும் ஊற்றுபோல், ஊற்றுக் கவிஞனாக இருக்க வேண்டும்.

பொன்னடியான் அருமையான மரபுக் கவிதைகளைப் பல்வேறு சந்தங்களில் இயற்றியுள்ளார். தன் கவிதைத் திறத்தால் அவர் நிற்கிறார். அவரது தொண்டு வளர்க! அவர் வாழ்க!" என்று கூறி, அவருக்குள்முச்சிக் கவிஞர் என்ற பட்டத்தையும் வழங்கினார்.

## பன்மொழிப் புலவர்:

பொன்னடியான் கவிதைகளின் இந்தி மொழிபெயர்ப்பை பன் மொழிப் புலவர் வெளியிட்டு பேசுகையில், பொன்னடிக்குக் குரு, பாரதிதாசன்! பாரதிதாசனுக்குக் குருபாரதி! இந்த இரு பெருங் கவிஞர்களுக்கும் அமைந்த குரு சீட பரம்பரைபோல வேறு எந்தக் கவிஞருக்கும் அமையவில்லை! பொன்னடியானின் தொண்டு மிக அடக்கமானது, அமைதியானது, நீடித்தது.

## பேரெழுத்தாளர் நாரண துரைக்கண்ணனார்:

"பாவேந்தர் தமிழ்க் கவிஞர் மன்றத்தைத் தொடங்கிய காலத்திலேயே பொன்னடியை நான் அறிவேன். அன்றிலிருந்து தமிழ்க் கவிஞர் மன்றத்தையும், முல்லைச்சரத்தையும் தொடர்ந்து நடத்தி வருவது பாராட்டத்தக்கது!

பாவேந்தர் பாரதிதாசன் பரிசு 'முதன்முதலாகப் பொன்னடி யானுக்குத் தான் கொடுத்திருக்க வேண்டும்! ஏனென்றால் பாவேந்தரின் எண்ணங்களை அவர்தான் இன்றுவரை இயக்கம் நடத்தி - ஏடுநடத்தி செயல்படுத்தி வருகிறார்.

## கலைமாமணி. டி.வி. நாராயணசாமி:

பாவேந்தரோடு யார்யாரோ இருந்தார்கள், போனார்கள். ஆனால் பொன்னடிதான் பாவேந்தரோடு இருந்து அவரது அந்திம காலத்தில் அவருக்கு வேண்டியவைகளையெல்லாம் செய்து வந்தார். இதை நான் நேரில் கண்டவன்.

பொன்னடி நன்றியுள்ளவர், எளிமையானவர்; பண்புள்ளவர்; மரபுக் கவிஞர். அவரது தொண்டு நாட்டுக்குத் தொடர்ந்து கிடைக்க வேண்டும்.



## இலக்கியச் சித்தர் வலம்புரி ஜான்:

இந்த அரங்கத்தில் கூடியிருப்பது கும்பலல்ல; கூட்டம்!

எந்தவித நோக்கமுமில்லாமல் வேடிக்கை பார்க்கக் கூடுவது கும்பல்! குறிப்பிட்ட நோக்கத்தோடு, தெளிந்த சிந்தனையோடு கூடுவது 'கூட்டம்!'

இங்கே கூடியிருப்பவர்கள் 'விதைகள்'. விதைகள்தான் பயிராகிப் பலருக்கும் பயன்படும் தானியங்களாகின்றன!

பொன்னடியான்-தலைசிறந்த மனிதர்; இதயமுள்ளவர்!

மூளை' உள்ளவனை அவன் நாடுதான் பாராட்டும். சிறிது காலத்துக்குத்தான் அவனுக்குப் பெருமை இருக்கும்.

இதயமுள்ளவனை எந்த நாடும் ஏற்றுக் கொள்ளும். புத்தரும், ஏசுவும் இதயமுள்ளவர்கள்! அதனால்தான் அவர்களை எல்லா நாடுகளும் ஏற்றுக் கொள்கின்றன.

நெப்போலியன் 'மூளை' உள்ளவன்தான். அவனை எந்த நாடு ஏற்றுக் கொண்டது? அவன் நாடே அவனை மறந்துவிட்டதே! அவன் நாட்டுக்கு வெளியே அவன் பெயரில் ஒரு சாராயக்கடை கூட இல்லையே!

ஆகவே, நல்ல இதயம் படைத்த இந்த மனிதனை வாழ்த்த வரவில்லை;வணங்க வந்திருக்கிறோம், நாம்!

கடற்கரையில் கவியரங்கம் நடத்துவதற்குக் காரணம் என்னவென்று நான் யோசித்துப் பார்த்தபோது, "ஏ கடலே! நீதானே எம் முன்னோரின் இலக்கியச் செல்வங்களையெல்லாம் விழுங்கி ஏப்பம் விட்டாய்? இதோ, எம் கவிஞர் கூட்டம் உன் முன்னாலேயே புத்திலக்கியத்தைப் படைத்துக் காட்டுகிறோம் பார்!" என்று கூறும் வகையில் கடற்கரையிலே கடந்த பதினான்கு ஆண்டுகளாகக் கவியரங்கம் நடைபெற்று வருகிறது!

பதினாறு ஆண்டுகளுக்கு முன்பே இந்த எளியேனுடைய கவிதையை முல்லைச்சரத்தில் வெளியிட்டு ஊக்கப் படுத்தினார் கவிஞர் பொன்னடியான்!

இப்பொழுதெல்லாம் 'கவிதை' கற்பனையாக இல்லை; கை வாளாக விளங்குகிறது!

நினைத்தால் வருவதல்ல கவிதை! இதயம் கனத்தால் வருவதுதான் கவிதை!

## கவிஞர் முருகுசுந்தரம்!

கவிஞன் என்பவன் 'காலம்' தோற்றுவிக்கும் குழந்தை!

பொன்னடியானைப் பாவேந்தர் இல்லத்தில் தான் முதன் முதலாகச் சந்தித்தேன். பாவேந்தரிடம் வருவதற்கு முன்பே அவர் 'தமிழ் மறவர்' பொன்னம்பலனாரின் மாணவராக இருந்தவர்!

பொன்னம்பலனார் யார் தெரியுமா - அஞ்சா நெஞ்சம் படைத்த தமிழ் மறவர்! தந்தை பெரியாரின் கட்டளைப்படி எப்போதும் மடியில் கத்தியை வைத்திருப்பார்! தூய தமிழில்தான் பேசுவார்! அவரின் மாணவர்தான் பொன்னடியான். பள்ளியில் படிக்கும்போதே, மாணவர்களைத் திரட்டித் தலைமைதாங்கித் தமிழுக்குப் போராடி இழப்புகளை ஏற்றவர் பொன்னடி!

## டி. எஸ் ரவீந்திரதாஸ்:

'ஜனசக்தியில்' சமீபத்தில் பொன்னடியானைப் பற்றி ஒரு கட்டுரை வெளியிட்டோம். பொதுவாகத் தனிமனிதர்களைப் பற்றி எந்தக் கட்டுரையும் நாங்கள் வெளியிடுவதில்லை. விதிவிலக்காக. இவரைப் பற்றி வெளியிட்டோம். காரணம், அவர்கள் எழுதியபடி நடக்கின்றவர். அதனால்தான் தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றத்தின் சார்பாக அவரைப் பாராட்டுகிறேன்.

அவர் ஒரு தனிமனிதரல்லர்; ஒரு நிறுவனம்! நெருக்கடி காலக் கொடுமைகளை எதிர்த்துத் தன்னந்தனியராகப் போராடியவர்! முல்லைச் சரத்திற்கு ஏற்பட்ட நெருக்கடிகளிலிருந்தெல்லாம் வெற்றி பெற்றார். அடுத்த கட்ட நடவடிக்கையை இந்த ஸ்தாபனம் சமுதாய மாற்றத்திற்கான போராட்டத்தில் ஈடுபட வேண்டும்.

பாரதி, பெல்ஜியத்தைப் பற்றியும் ரஷ்யப் புரட்சியைப் பற்றியும் பாடியது போலப், பொன்னடியான் ஈரானில் நடைபெறும் கொடுமைகளைப் பற்றியும், படுகொலைகளைப் பற்றியும், பகுத்தறிவு, தேசிய, சர்வதேசியம் பற்றியும் உழைக்கும் மக்களுக்காகவும், கலாச்சார நெருக்கடிகளைப் பற்றியும் பாடுகிறார். ஆகவே, அவரைப் பாராட்டுகிறேன்.".

## கவிஞர் மன்னர்மன்னன்:

பொன்னடியானைப் பற்றிப் பேசும் இந்த நேரத்தில், எனக்குப் பழைய நினைவுகளெல்லாம் வருகின்றன.

இவரிடம் நிறைய சகிப்புத்தன்மை உண்டு. 19 ஆண்டுகளாக முல்லைச்சரத்தைக் கொண்டு வருவதே ஒரு பெரிய சாதனைதான்!

அதேபோல் தமிழ்க் கவிஞர் மன்றத்தையும் இவர் கட்டிக் காத்து வருகிறார்.

தமிழ் நாட்டு மக்களை நான் பாராட்டுகிறேன், சரியான நேரத்தில் பாவேந்தரின் சீடரைப் பாராட்டுவதற்காக!

இவர், பாவேந்தரின் சீடர்' என்ற ஒரே காரணத்திற்காகப் பல தாக்குதல்களுக்கு ஆளானவர். இனிய, தமிழ்த் தொண்டு செய்து பலகாலம் வாழ்க!

பேராசிரியர்கள் ராமு, குருவிக்கரம்பை சண்முகம், சரளா ராஜகோபாலன், அரசு மணிமேகலை, கலைமாமணி முத்துலிங்கம் முதலியோரும் கவிஞரின் தமிழ்த் தொண்டைப் பாராட்டிப் பேசினர்.

## கவிஞர் மு. மேத்தா:-

அண்ணன் பொன்னடியான், இளையவர்களின் இதயங்களை வென்றவர், அவரது கவிதை ஆங்கிலம், இந்தி, பெர்சியன் ஆகிய மூன்று மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு நூல்களாக வந்திருக்கின்றன. இது எந்தக் கவிஞனுக்கும் கிடைக்காத பேறு - அவருக்குக் கிடைத்திருக்கிறது.

இந்த நிகழ்ச்சி, ஒரு மாநாடுபோல் நடைபெறுகிறது. பார்க்கக் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது!

ஒரு கவிஞன் கவிஞனாக இருப்பது சிறப்பல்ல; அவன் நல்ல மனிதனாக இருப்பதுதான் சிறப்பு! அந்தச் சிறப்பை அண்ணன் பெற்றிருக்கிறார்!

கவிஞர் பொன்னடியான், அலங்கார மணி மகுடங்களையெல்லாம் கழற்றி வைத்துவிட்டு, இளைஞர்களோடு பழகுகிறார். அதனால்தான் அவருக்கு இளங்கவிஞர்களெல்லாம் சேர்ந்து இந்த விழாவை எடுக்கிறார்கள்.

பொன்னடியானிடம் வேஷங்கள் இல்லை; பொய் முகங்கள் இல்லை!"

விழா முடிவில், கவிஞர் ஏற்புரை கூறுகையில் "இது எனக்கு எடுத்த விழாவல்ல; கணியன் பூங்குன்றனார். காலமுதல் இன்று வரையுள்ள கவிஞர் பெருமக்களை யெல்லாம் பாராட்டுவதற்காக எடுக்கப்பட்ட விழாவாகவே நான் கருதுகிறேன்.

முத்தமிழ்க் காவலரும், பன்மொழிப் புலவர் அப்பாவும், பேரெழுத்தாளர் நாரணதுரைக் கண்ணனாரும், பெரியாரின் குடும்பத்தைச் சேர்ந்த அண்ணியார் சுலோசனா சம்பத்தும் பெருங்கவிஞர் மருதகாசியாரும், நடிக மணியாரும், அண்ணன் மன்னர் மன்னரும், அமைச்சர் பெருமக்களும், பிறரும் என்னைப் பாராட்டியதென்பது நான் பெற்ற பேறாகக் கருதுகிறேன்.

கடன்பட்டவனைப் போல் கூனிக்குறுகிப் போயிருக்கிறேன். இந்த

நன்றிக் கடனை என் வாழ்நாளில் என்னால் திரும்பிச் செலுத்த முடியாது. எனது தலைமுறைதான் செலுத்த வேண்டும்.

பாவேந்தரின் பாட்டுக்கேற்பச் செயல்படும் தொண்டர்கள் நாங்கள்

சாதி சதய, வேறுபாடற்ற அமைப்பான தமிழ்க் கவிஞர் மன்றத்தைப் பாவேந்தர் உருவாக்கினார். அவர் கண்ட கனவுகளை நிறைவேற்ற நானும் எனது இளைய தோழர்களும் ஓடிக்கொண்டே உழைத்துக் கொண்டே இருக்கிறோம்!

நாவலரின் கோரிக்கையான இலக்கியக் கவிஞர்களின் தனிப்பாடல் திரட்டைத் தமிழ்க் கவிஞர் மன்றம் அடுத்த ஆண்டே கொண்டுவர முயற்சி செய்யும்!

ஆயுதப் புரட்சியை விடக் கருத்துப் புரட்சியே சிறந்தது! அதைச் செய்யவே நாங்கள் பாடுபட்டு வருகிறோம்.

இந்த விழாவின் வெற்றிக்கு உழைத்த ஒவ்வொருவரையும் பெயர் குறிப்பிட்டுக் கவிஞர் நன்றி தெரிவித்தார்.

பகுத்தறிவாளர் குழுக்களோடு மயிலை ஆஞ்சநேயர் கோவில் குருக்களும் தன் குழுவுடன் வருகை தந்து தமிழ்ப்பா ஓதியது குறிப்பிடத்தக்கது.

கவிஞருக்கும் அவரது துணைவியார் திருமதி இந்திரா பொன்னடியானுக்கும் கணக்கற்ற மாலைகளையும், துண்டுகளையும், பட்டாடைகளையும், பொன்னாடைகளையும் பல்வேறு இலக்கிய அமைப்புகளும், பெருமக்களும், அணிவித்து வாழ்த்தினர்.

மலைபோலக் குவிந்திருந்த இந்த மாலைகளுக்கும் துண்டுகளுக்கும் செலவழித்த பணத்தை, அன்பர்கள்- ஆர்வலர்கள் முல்லைச் சரத்திற்குச், சந்தாவாகக் கொடுத்திருந்தால், ஆயிரம் சந்தாக்களுக்குமேல் சேர்ந்திருக்கும். பத்திரிகைக்கு நல்ல உரமாகவும் பயன் பட்டிருக்கும்.

இனியாவது அன்பர்கள், இதைக் கவனத்தில் கொள்வார்களாக!

நன்றி: முல்லைச்சரம் - 1-3-85

ஒரு தமிழ் இலக்கிய வரலாற்று நூலில்:

பொன்னடியான் : 1940

இவரது ஊர் கோவை கண்ணம்பாளையம். இவர் பாவேந்தரிடம் 60 லிருந்து இறுதி மூச்சு வரை உதவியாளராக, நிர்வாகியாக அமைந்து ஊதியம் பெற்ற பேற்றினர். 66 முதல் 'முல்லைச்சரம்' எனும் கவிதை இலக்கிய ஏட்டினை நடத்தி வருபவர். தமிழ்க் கவிஞர் மன்றத்தில் காப்பாளராக - பொதுச் செயலாளராக இயங்கி, கடற்கரைக் கவியரங்கத்தைத் திங்கள் தோறும் நடத்துகிறார்.

படைப்பு: பனிமலர், ஓர் இதயத்தின் ஏக்கம், ஒரு கைதியின் பாடல்கள் (இசைப் பாடல் தொகுப்பு)

ஜி. நச்சினார்க் கினியன்,

தமிழ் விரிவுரையாளர் (அண்ணாமலைப் பல்கலைக் கழகம்).






ஆல் போல் தழைத்து, அருகுபோல் வேரோடி' என்று வாழ்த்துவது யாருக்குப் பொருந்துமோ, பொருந்தாதோ, தெரியாது ஆனால் இதற்கு ஒரு நிதரிசனமாக வாழ்பவர் கவிப் பேராசான் தமிழ்த் திரு. பொன்னடியான் அவர்கள். இது மிகையல்ல; அனைவரும் அறிந்த உண்மை.

## கௌதம நீலாம்பரன்

'தனிமரம் தோப்பாகுமா?' என்ற பழமொழியை எப்படியாவது முறியடிக்க முடியுமா என்ற முயற்சிக்கு ஓர் உதாரணம் தான் ஆலமரம்.

பாட்டுப் பறவைகளின் சரணாலயமான கவிஞர் பொன்னடியான் அவர்களின் 40 ஆண்டுக் கால இலக்கியப் பணியினைக் கொண்டாடும் இத்தருணத்தில், அவரை ஆசானாக இதயம் ஏந்திக் கொண்டாடும் அன்பர் குழாத்தில் நானும் ஒருவன் என்பதைப் பெருமையுடன் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

சற்றேறக் குறைய முப்பத்திரண்டு ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழக்கம் எனக்கு, அவருடன். கவிஞர் 'முல்லைச்சரம்' இதழைத் தொடங்கி ஒன்றிரண்டு ஆண்டுகள் முதலே நான் அவருடன் பழகி வருகிறேன்.

அப்போது கவிஞர், புரசைவாக்கத்திலுள்ள வெள்ளாளத் தெருவில், ஒரு விடுதியில் தங்கியிருந்தார். திருமணம் ஆகியிருக்கவில்லை. ஆனால், காதல் துவங்கியிருந்தது. அந்தக் காதலின் வெளிப்பாடாக 'ஓர் இதயத்தின் ஏக்கம்' கவிதை நூலும் வெளிவந்திருந்தது.

சினிமாக் கனவுகளோடு சென்னை வந்து சுற்றிக் கொண்டிருந்த நான், அமெச்சூர் நாடகங்கள் நடத்தும் ஒரு குழுவினரோடு பழக்கம் கொண்டிருந்தேன். ஒன்றிரண்டு நாடகங்களிலும் நடித்தேன். நண்பர்கள் யாருக்கும் நிலையான வேலைகள் எதுவும் கிடையாது. கிடைத்த வேலையைச் செய்து, கிடைத்த உணவை உண்டு, கிடைத்த இடங்களில் படுத்துறங்கிய நாட்கள் அவை. ஆனாலும் கனவுகள் நிறைய. கையில் காசு இருக்கிறதோ இல்லையோ, அந்த நண்பர்கள் கையில் கனத்த நோட்டுக் இருக்கும். ஒன்று கதைகள் அல்லது நாடக வசனங்கள் நிச்சயம் அதில் இருக்கும். சிலர் கவிதைகள் எழுதி வைத்திருப்பர். அப்படி ஒரு நண்பர் மூலம் தான் கவிஞர் பொன்னடியான் அவர்களைப் பற்றியும், அவருடைய 'முல்லைச்சரம்' இதழ் பற்றியும் அறிய நேர்ந்தது.

உடனே நானும் நண்பர் ஜோதிவளவனும் ஒன்றிரண்டு கவிதைகளை எழுதி எடுத்துக் கொண்டு, பாரிமுனையிலிருந்து புரசைவாக்கத்திற்கு நடந்தே சென்று கவிஞரை அந்த விடுதியில் சந்தித்தோம். முன்பின் அறிந்திராத எங்களை மிகுந்த அன்புடன் வரவேற்று உபசரித்தார். நெடுநேரம் உரையாடி எங்கள் உளம் குளிர்வித்தார். என் கவிதையும் நண்பர் ஜோதிவளவன் கவிதையும் முல்லைச்சரத்தில் அச்சேறியது.

அன்று தொடங்கிய பழக்கம் இன்றளவும் நீடித்து நிலைத்திருக்கிறது என்றால் அதற்குக் காரணம், கவிஞரின் கனிவும் கண்ணியமும் சிறக்கும் நட்புள்ளம்தான்.

ஆரம்பத்தில் நாங்கள் அடிக்கடி சென்று கவிஞரைச் சந்திப்போம். கவிதைகள் கொடுத்தால், பக்கத்தில், உட்காரவைத்து, அந்தக் கவிதை எப்படியிருந்தால் நன்றாக இருக்கும் என்று திருத்திக் காட்டுவார். பிறகு அவர் ஆரம்பித்த கடற்கரைக் கவியரங்கத்திற்கும் நாங்கள் தொடர்ந்து சென்று வந்தோம். கடற்கரைக் கவியரங்கில் கலந்து கொண்டது ஒரு இனிமையான அனுபவம். துடிப்புமிக்க பாட்டுக் குயில்கள் அந்த மணல் வெளியில் வந்து முற்றுகையிடும்.



ஒவ்வொரு மாதக் கவியரங்கிற்கும் யாராவது ஒரு பிரபல படைப்பாளி வந்து தலைமை ஏற்பார். மாலை வேளையில் துவங்கிய கவியரங்கம் இருட்டிய பிறகும் நீடிப்பதுண்டு. வந்து குழுமிய ஒவ்வொரு இளைஞனும் கவிதை படிக்காமல் அந்த அரங்கம் கலையாது. அப்படி இருள் வந்த வேளைகளில் கவிஞர் தந்த டார்ச் லைட்டை வைத்து நான் ஒவ்வொருவர் அருகிலும் நின்று ஒளி வெள்ளம் பாய்ச்சியதும் உண்டு. அது சாதாரண ஒளியல்ல; பாவேந்தர் பரம்பரைக்காக கவிஞர் பொன்னடியான் ஏற்றி வைத்த தமிழ் ஒளி.

பாவேந்தரை நான் பார்த்ததில்லை. ஆனால், தென்னார்க்காடு மாவட்டம் பெண்ணாடத்தில் நான் பயின்ற உயர் நிலைப் பள்ளிக்கு ஒரு முறை பாரதிதாசன் வந்திருந்தாராம். அவர் தலைமையில் பள்ளி மாணவர்கள் ஒரு சிற்றூருக்கு சாலை அமைக்கும் பணியை மேற்கொண்டார்களாம். அடுத்த ஆண்டோ அல்லது அதற்கு அடுத்த ஆண்டோ நான் போய் அப்பள்ளியில் சேர்ந்திருக்கிறேன். பாரதிதாசன் தங்கள் பள்ளிக்கு வந்து சென்றதை வாய் ஓயாமல், பெருமை பேசிய மாணவர்கள் நடுவே நானும் இருந்தது ஒரு மறக்க முடியாத அனுபவம். இதோ இங்கே வந்தார். இந்த மேடையில் தான் அந்த விழா நடந்தது. அவர் என்னை அழைத்து அன்புடன் விசாரித்தார்' என்று பல மாணவர்கள் கதை கதையாய் விதந்து ஓதிக் கொண்டிருந்தனர்.

'அட, அப்போது நாம் இல்லாமல் போனோமே' என்று என் மனம் ஏங்கி நலுங்கும். அப்போதெல்லாம் நான் குடுமி வைத்திருப்பேன். பள்ளியில் சேர்ந்த சில நாளில் அதை வெட்டி விடலாம் என்று தீர்மானித்து என்னை என் அண்ணன் ஒரு முடி திருத்தும் தொழிலாளியிடம் அழைத்துச் சென்றார். காசி என்ற அந்த அன்பர், தம்பி, 'நீ அந்தப் பள்ளியில் தானே படிக்கிறாய்.... உங் பள்ளிக்கு பாவேந்தர் வந்தப்ப அவருக்கு நான்தான்பா முடி திருத்தினேன்....' என்று பெருமை பொங்கச் சொன்னார்.

பாவேந்தர் அந்த ஊரில் சில நாட்கள் தங்கியிருந்தாராம். தினமும் காசிதான் போய் முகச்சவரம் செய்வாராம். இதை எந்த அளவு அவர் பெருமிதத்துடன் சொன்னாரோ, அதே பெருமிதம் எனக்கும் ஏற்பட்டது, 'பாவேந்தருக்கு முடி திருத்தியவர் நமக்கும் அப்பணியைச் செய்திருக்கிறார்...! என்று. பாவேந்தர் பாதம் பட்ட பள்ளியில் படித்தோம், பாவேந்தர் பார்த்துப் பேசிய மாணவர்களுடன் நாமும் சேர்ந்து பேசி மகிழ்ந்தோம், பாவேந்தர் அமர்ந்து சொற்பொழிவாற்றிய 'சிவசிதம் பரம் மன்றம்' எனும் எங்கள் பள்ளி விழா அரங்கில், இலக்கியமன்றம் செயலாளன் என்ற தகுதியோடு நானும் ஏறிப் பேசியிருக்கிறேன் என்பதெல்லாம் உண்மையான பெருமையாக இருக்குமோ இல்லையோ எனக்குத் தெரியாது. ஆனால், பாவேந்தரோடு நெருங்கிப் பழகிய அவரோடு வாழ்ந்த அவர் மாணவர் கவிஞர் பொன்னடியானைப் பிறகு சந்திக்கப் போகிறோம் என்பதற்கான சுப சூசகங்களாகவே அவை இருந்திருக்கும் என்று பிறகு நினைப்பதுண்டு.

பொன்னடியான் நடத்திய கடற்கரைக் கவியரங்கிலே வாசிக்கப்பட்ட

றிளம் கவிஞர்களின் கவிதைகள் தொகுக்கப்பட்டு, 'அலைகள் ஆயிரம்' என்ற தலைப்பில் முதல் தொகுதி வந்த போது அதில் என் கவிதையும் ஒன்று.

'புதிய அலை' - நியூவேவ் என்பார்களே, அப்படி இளைஞர் உலகிலே ஓர் அற்புதமான தமிழ்க் கவிதைத் தாகத்தை ஏற்படுத்தி, அலை அலையாக வளரவைத்தவர் கவிஞர் பொன்னடியான். தான் வளரும் போதே ஒரு கூட்டத்தையும் வளர்த்த பெருமைக்குரியவர் அவர்.

கவிஞர் பொன்னடியானைச் சந்தித்தது போலவே நான் பிரபல எழுத்தாளர்களான திரு. அகிலன், ஜெயகாந்தன், ஜெகசிற்பியன், ஜாபர் சீதாராமன், நா. பார்த்தசாரதி ஆகியோரின் படைப்புகளைப் படித்துவிட்டு, அவர்களை நேரில் சென்று சந்தித்தேன். அகிலன் வானொலியில் என் கவிதைகள் சில ஒலிபரப்பாக உதவினார். 'தீபம்' நா. பார்த்தசாரதி தமது பத்திரிகைக் காரியாலயத்தில் என்னை வேலைக்குச் சேர்ந்து கொண்டார். அப்போதும் கூட நான் தியாகராய நகர் - மேற்கு சி. ஐ. டி. நகரில் இருந்த கவிஞரின் இல்லத்திற்கு அடிக்கடி சென்று வருவேன். அவருக்குத் திருமணமாகி, பெண் குழந்தையும் பிறந்திருந்தது. இரண்டு மூன்று வயதில் அந்தப் பெண் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டு, கடற்கரைக் கவியரங்கில் விளையாட்டுக் காட்டிக் கொண்டிருப்பேன். கவிஞர் எங்களிடம் ஒரு குடும்பப் பாசத்தோடுதான் பழகுவார். திருமதி இந்திரா பொன்னடியானிடமும் இதே குணம் தான் பிரதிபலிக்கும்.

பிறகு நான் கதைகள் எழுத ஆரம்பித்து, சுதேச மித்திரன், கலைமகள், கணையாழி, விகடன், குமுதம் என்று பல்வேறு இதழ்களிலும் என் கதைகள் வெளியாகி, சேது பந்தனம், நிலாமுற்றம், ராஜகங்கணம், மன்னன் மாடத்து நிலவு, சோழவேங்கை, பாண்டியன் உலா, மோகினிக் கோட்டை, கலிங்க மோகினி, மருதநாயகம் என்று பல வரலாற்று நாவல்களை எழுதியதால் ஓரளவு பிரபலமான சரித்திரக் கதாசிரியன் என்று பேர் எடுத்துவிட்டிருந்தாலும் கூட, முப்பதாண்டுகளுக்கு முன் 'முல்லைச்சரம்' இதழில் 'வானம்' என்ற முதல் கவிதை பிரசுரமான போது என் மனசில் முத்தாக முகிழ்த்தெழுந்த மகிழ்வுக்கு இணையாக வேறு எதையும் சொல்ல முடியாது என்பதே உண்மை.

கவிஞரின் தொண்டு தொடரட்டும். இன்னும் ஆயிரமாயிரம் எழுத்துச் சிற்பிகளின் இதயவாசலைத் திறந்து வைக்கும் திருப்பணியைச் செய்யட்டும்.



# நெருப்பாகும் நிழல்

இந்த ஒற்றைப் பனைமரம், ஒரு படையே பாசைறையிறங்க நிழல் கொடுத்துக் கொண்டிருக்கிறது.

நீங்கள் நம்ப முடியாத தகவலை நான் தருகிறேன்.

எங்கோ கட்டாந்தரையில் விழுந்த ஒரு பனை விதை பசுமை பிடித்து முளைத்ததே வியப்பாயிருக்கையில், அந்த விதை தாவிப் பறந்து வேறிடத்தில் விழுந்து வேர் பிடித்துத் தழைத்துப் போர்ப் பாசறைக்கு இடம் அளித்து வருகிறது என்றால் -

எனது நெற்றிச் சுருக்கங்கள் அகலமாகின்றன.

இதயச் சுவர்கள் ஓசை எழுப்பாமல் நெகிழ்கின்றன.

என் கைகள் உயர்கின்றன. வெறுங்கை; மலர்களைப் பொழிய முடியவில்லை. அதனால்,

என் இதயம் உரக்கக் கூவுகிறது.

பொன்னடி!

இப்பெயரைச் சொல்லி முடிப்பதற்குள், காவல் துறையின் ஏவலர் போல் பாவேந்தரின் முன் வந்து நிற்கும் அந்த இளையவர், இப்போது தனக்குப் பின்னால் கடல் ஒத்த உணர்வுடைய கவிதைக் காதலர்களின் படையையே வளர்த்து வைத்திருக்கிறார்.

என் உடல் எப்படிப் புல்லரிக்கிறது தெரியுமா?

இருபதாண்டின் முன்னர் இருந்த காட்சிகளை ஒப்பிட்டுப் பார்க்கிறேன்.

பாரதிதாசன் திரைப்பட நிறுவனத்தின் கணக்கை எழுத வேண்டும். குயில்' இதழின் நிர்வாகத்தைப் பார்க்க வேண்டும். வருவோர் போவோர்க்கு விடை கூறியாக வேண்டும். இதழுக்கு வரும் பாடல்களை முறைப்படுத்த வேண்டும். இத்தனைக்கும் மேலாகவும் முதன்மையாகவும், பாவேந்தர் எழுதிக் குவிப்பதை எல்லாம் பெயர்த்து எழுத வேண்டும். இன்னும் எத்தனையோ வேண்டும், வேண்டும்...

இத்தனைக்கும் பொறுப்பு ஒரே பொன்னடி!

இந்த வேலைகளைத் தாங்கும் ஒரே சுமைதாங்கி அவரே! பாவேந்தரின் மனப் போக்கை அறிந்து வைத்துக் கொண்டு, அதற்கேற்ப சற்றும் தாமதமின்றிச் சுறுசுறுப்பாய் இயங்க முடிந்தது அவருக்கு!

பணத் தட்டுப்பாடு வந்து விட்ட நாட்களில், பாவேந்தருடன் தங்கியிருந்து சமாளித்த பாங்கு மறக்கவொண்ணாதது.

பொன்னடியானின் இளமைப் பருவத்தில் அந்தச் சுமையான நாட்கள்

வந்திருக்கின்றன.

அந்தப் பட்டறிவு முத்திரைகள் பொன்னடி என்ற மென்மலர் கருகி விடாதபடி காத்து நிற்கின்றன.

பாவேந்தர் உளம் கொண்டவண்ணம் தமிழ்க் கவிஞர் மன்றத்தை உருவாக்கி நடத்தி வருவது - ஒரு கடும்பத்தியம்தான்!

•கண்மூடிப் பற்றாளர்களைக் கொண்ட கட்சி ஒன்றினை நடத்தி விடுவது எளிதானது இக்காலத்தில்!

கருத்துப் படைப்பாளரை ஒன்று சேர்த்து வழி நடத்திச் செல்வது - அப்பப்பா! - எப்போதுமே எளிதான காரியமன்று.

இந்த முயற்சியில் தான் படும் இன்னலை, என்னிடம் பொன்னடி சொல்லும்போதெல்லாம், என் நெஞ்சத்தின் மூலையிலே ஒரு குதிப்பு!

ஆம்! பாவேந்தரைப் போலவே அல்லல்பட - அதை ஒரு தொண்டாகப் போற்றிக் கொள்ள இன்னொருவர் இருக்கிறாரே என்ற மகிழ்ச்சிதான்!

பொருத்தமான ஒற்றைப் பனைமரம்!

எழுத்திலும் பேச்சிலும் பொன்னடியான் எரியும் பெரு நெருப்பு!

தமிழ்த் தொண்டில் தண்ணென்ற குளிர்தரும் தோப்பு!

இத்னையையும் சொல்லிவிட்ட நான் ஒன்றை மறந்து விட்டால், உண்மை ஒளிந்து கொண்டதாகி விடும்.

சொல்லி விடுகிறேன்.

பொன்னடியானின் கருத்தோட்டங்களுக்கு இசையச் செயல்படும் கவிஞர் மன்ற நண்பர்கள் நம் பாராட்டுக்குரியவர்கள்.

'முல்லைச்சரம்' மணம் பரப்ப உதவிக் கரம் நீட்டும் உள்ளங்களுக்கு நாம் பாராட்டு வழங்க வேண்டும்.

மற்றொன்று:

இலக்கியப் பணியில் திளைத்து விடப் பொன்னடிக்குத் துணையாகப் புணையாகப் பணி புரியும் அவரின் இல்லத்தரசியை நாம் வாழ்த்தியாக வேண்டும்.

அந்த உழைப்பாளி, இந்தப் பாட்டாளிக்கும் கூட்டாளியாக வாய்த்ததினால்தான், ஒற்றைப் பனைமரம் குளிர் நிழலாகிப் பாட்டு மறவர்க்குப் பாசறையாக விளங்க முடிகிறது.

பொன்னடி என்ற நல்ல மனம் - இளமை குன்றாது - வளமைச் செறிவோடு நீடுழி வாழ என் இதயம் பன்னீர் தெளித்து மகிழ்கிறது!

கவிஞர் மன்னர் மன்னன்

---

(1985-ஆம் ஆண்டு சென்னையில் நடந்த கவிஞர் பொன்னடியான் இலக்கியப் பணி வெள்ளி விழா மலருக்கு புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் திருமகன் கவிஞர் மன்னர் மன்னன் தன் கைப்பட எழுதிய கட்டுரை.)



# தாசனின் தாசன்

(திரைக் கவிஞர்கள் நூலில்)

## வாமனன்

"பாரதிதாசன் திரைப்பட நிறுவனத்தின் கணக்கை எழுத வேண்டும், குயில் இதழின் நிர்வாகத்தைப் பார்க்கவேண்டும், வருவோர் போவோர்க்கு விடை கூற வேண்டும், இத்தனைக்கும் மேலாகவும் முதன்மையாகவும் பாவேந்தர் எழுதிக் குவிப்பதை எல்லாம் பெயர்த்து எழுதவேண்டும்," என்று பொன்னடியால் பாரதிதாசனுக்கு ஆற்றிய சேவையை பாரதிதாசனின் மகன் மன்னர் மன்னன் குறிப்பிட்டிருக்கிறார்.

"திரு பொன்னடி என் கவிதை இதழாகிய 'குயில்' வார ஏட்டின் எழுத்தாளராகவும் என் உதவியாளராகவும் பன்னாள் நன்கு தொண்டாற்றியவர். அவர் மேலும் ஒரு நல்ல கவிஞர். இந்த அரும் பணிக்கு ஆதாரமாக அவரிடம் இலக்கண அறிவும், இலக்கிய அறிவும் அமைந்திருக்கின்றன. நல்ல குணம், செயல் உடையவர் என்பதோடு கடமை தவறாமை அமையப் பெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது" என்று பாரதிதாசன் பொன்னடியானுக்குச் சான்றிதழ் கொடுத்திருக்கிறார் "புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுடன் இறுதி நாள் வரை உடனிருந்து பணிபுரிந்த அவரது உண்மையான ஒரே மாணவர் கவிஞர் பொன்னடியான்," என்று முன்னாள் தமிழ் நாடு சட்டமன்றத் தலைவர் க. ராஜாராம் இவரைப் புகழ்ந்தார்.

பொன்னடியான் கோவை மாவட்டம் கண்ணம்பாளையத்தில் பிறந்தவர். ஆனால் அவரைக் கோடம்பாக்கம் பகுதியில் உள்ள அவரது இல்லத்தில் சந்தித்தபோது, 'நம்மை நாம் ஊர், மாவட்டம் என்று குறுக்கிக் கொள்வதைவிட, தேசம், உலகம் என்று விரிவுபடுத்திக் கொள்ள

வேண்டும்' என்ற கருத்தைத் தெரிவித்தார். முப்பத்தைந்து வருடங்களாக 'முல்லைச்சரம்' பத்திரிகையைத் தொடர்ந்து நடத்திவரும் விடாப் பிடியான வைராக்கியம் இவரிடம் இருக்கிறது. "நான் ஒரு தலைமை ஆசிரியரின் மகன். ஏதோ பெரியவங்க சேத்துவச்சதை இப்படிச் செலவு பண்ணிக்கிட்டிருக்கேன்." என்றார். 'முல்லைச்சரம்' பல எழுத்தாளர் களுக்கு ஏணிப்படியாக இருந்திருக்கிறது. அதன் பழைய பிரதிகளைப் பார்த்தால் தெரிகிறது.

திரையில் வெளிவந்த தன் முதல் பாடலைப் பற்றிப் பொன்னடியான் கூறினார். மதியொளி சண்முகம் இயக்கிய "நெஞ்சில் ஒரு முள்" (1981) இசை அமைப்பாளர் ஜி. கே. வெங்கடேஷ். பொன்னடியான் பாடலை எழுதவேண்டும் என்பதில் இயக்குநர் குறியாக இருந்தார். தாமதமாக வந்த வெங்கடேஷ், 'பாடலைக் கவிஞர் (கண்ணதாசன்) எழுதினால் நன்றாக இருக்கும்' என்று வெளிப்படையாகச் சொல்லிவிட்டார். எப்படியாவது நன்றாக எழுதித் தன் திறமையை நிரூபிக்க வேண்டும் என்று பொன்னடி யான் துடித்தார். ஆர்மோனியத்தைத் தட்டியபடி நீளமான தத்த காரங்களைப் பொழிந்தார் வெங்கடேஷ். பொன்னடியான் ஒரே பல்லவிதான் எழுதினார்..... அது இயக்குநருக்குப் பிடித்திருக்கும் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது. 'தேரோடும் வீதியெங்கும் பூமாலை ஊர்வலங்கள்' என்று தொடங்கும் இந்தப் பாடல் பதிவானது.

ஒரு நாள் மாலை இளையராஜாவுடன் கலந்துரையாடி இருந்தார் பொன்னடியான். "இவர் பாரதிதாசன் மாணவர். இலக்கிய இலக்கண மாகத்தான் பாட்டு எழுத முடியும் என்று கூறி என் போன்றோரைத தட்டிக் கழித்துவிடுவார்கள். ஆனால், மக்களுக்குப் புரியும் எளிய, இனிய இசைப்பாடல்கள் எல்லாம் என்னால் எழுதமுடியும் - எழுதியுள்ளேன்," என்றார் பொன்னடியான். தான் இயற்றிய இசைப் பாட்ல்களை இளையராஜாவிடம் கூறினார். அவர் சிரித்து ரசித்துப் பாராட்டினார். சில நாட்கள் கழித்து 'என் ராசாவின் மனசிலே' படத்திற்குப் பாடல் முடிவு செய்தபோது, படத்தின் இயக்குநரும் கதாநாயக நடிகருமான ராஜ்கிரனிடம் பொன்னடியானின் 'போடா போடா புண்ணாக்கு' என்ற பாடலைப் பற்றிக் கூறினார் இளையராஜா. 'அதை இந்தப் படத்தில் இடம் பெறச் செய்யலாம்' என்றார் இளையராஜா. சில மாற்றங்களுடன் பாடல் பதிவானது. ஒன்றிரண்டு வாத்தியங்களுடன் எளிமையாக உருவாக்கப்பட்ட அந்த பாடல் வரவேற்பைப் பெற்றது. இதே படத்தில், 'குயில் பாட்டு வந்ததென்ன இளமானே' என்பதும் கவனத்தை ஈர்த்தது

'குயிலுக்கொரு நிறமிருக்கு, அதன் குரலுக்கொரு நிறமிருக்கா' சொல்லத் துடிக்குது மனசு (1989), 'எங்கிட்ட மோதாதே' ராஜாதி ராஜா (1990), எட்டணா இருந்தா எட்டூருக்கு என் பாட்டுக் கேட்கும்.' 'உன்னை நினைச்சேன் பாட்டுப் படிச்சேன்' -(1992) 'என் தாயெனும் கோவிலைக் காக்க மறந்திட்ட பாவியடி கிளியே' (அரண்மனைக் கிளி-1993) போன்ற பல பாடல்கள் சுயமாகச் சிந்தித்து புதுமையாக எழுதக்கூடிய திறமை உள்ளவர் பொன்னடியான் என்பதைக் காட்டுகின்றன. சண்முகப் பிரியனின் இயக்கத்தில் காதல் காவியமாக வந்த 'ஒருவர் வாழும் ஆலயம்' படத்தில் அனைத்துப் பாடல்களையும் பொன்னடியான் எழுதியிருந்தார்

(1988). அருமையான பாடல்கள் அவை. தேமா, புளிமாவிற்குப் பாட்டெழுதிப் பழக்கப்பட்ட பொன்னடியானின் பேனாவிற்கு தனனா னானா விற்கு எழுதுவது பிள்ளை விளையாட்டுத்தான். பல ஆண்டுகளாக கடற்கரைக் கவியரங்கம் நடத்திக் கவிஞர்களைக் கூட்டும் பொன்னடியான், மெட்டுக்கும் வார்த்தைகளைக் கூட்டி வருகிறார்.

*படம் : சொல்லத் துடிக்குது மனசு*
*பாடலாசிரியர் : பொன்னடியான*
*குரல்: மலேசியா வாசுதேவன்*
*இசை : இளையராஜா*

*குயிலுக்கொரு நிறம் இருக்கு - அதன்*
*குரலுக்கொரு நிறம் இருக்கா*
*கொண்டாடும் இந்தப் பொன்னான மண்ணில்*
*வந்தாடும் நிறம் எத்தனை எத்தனை?*
*ஒண்ணான இந்த மனித இனத்தில்*
*உண்டான குணம் எத்தனை எத்தனை*



*குயிலுக்கொரு நிறம் இருக்கு - அதன்*
*குரலுக்கொரு நிறம் இருக்கா*

*அறியாத பருவத்திலே விளையாடும் நேரத்திலே*
*உன் குரலைக் கேட்டேன் - நான்*
*என்னென்னவோ நெனெச்சேன்.*
*புரியாத வயதினிலே வளர்ந்தாடும் இளமையில்*
*ஒரு மானிடத்தில் என் மனசைக் கொடுத்துப்பின்னே*
*தவிச்சேன் -*
*வயசோடு வந்ததெல்லாம் விளங்கலையே - அப்போது*
*விளங்காத கேள்விக்கெல்லாம் விடை வருதே இப்போது*
*கருப்பும் இல்லே வெளுப்பும் இல்லே*
*கண்ணுல தானே பேதம் இருக்கு.*

*குயிலுக்கொரு நிறம் இருக்கு - அதன்*
*குரலுக்கொரு நிறம் இருக்கா?*

*நதிபோல அலைபோல அது போகும் நிலைபோல*
*சுதந்திரமா திரிவோம் - அதை*
*நிரந்தரமா அடைவோம்*
*மலைபோல, மரம்போல அதில் பாடும் குயில்போல*
*பாட்டுக்களைப் பாடப்போனா,*
*படிப்போம் நாம் ரெக்கைக் கட்டிப் பறப்போம்*
*தடையேது இங்கே இங்கே, விளையாட மண்மேலே*
*விதியென்ன செய்யும் செய்யும் விதிவழியே போனாலே*
*கருப்பும் இல்லே, வெளுப்பும் இல்லே*
*கண்ணுல தானே பேதம் இருக்கு.*

*குயிலுக்கொரு நிறம் இருக்கு - அதன்*
*குரலுக்கொரு நிறம் இருக்கா*
*கொண்டாடும் இந்தப் பொன்னான மண்ணில்*
*வந்தாடும் நிறம் எத்தனை எத்தனை*
*ஒண்ணான இந்த மனித இனத்தில்*
*உண்டான குணம் எத்தனை எத்தனை*
*குயிலுக்கொரு நிறம் இருக்கு - அதன்*
*குரலுக்கொரு நிறம் இருக்கா*

(புகழ்பெற்ற எழுத்தாளர் வாமனன் எழுதிய 'திரைக் கவிஞர்கள் 2000 வரை' என்ற நூலின் 334-ஆம் பக்கத்தில்)





# பெருங்கவிஞர் மருதகாசியும் கவிஞர் பொன்னடியாரும்

கவிஞர் பொன்னடியான் அவர்கள் மீது அளவிலாத அன்பு வைத்தவர் புகழ்பெற்ற பெருங்கவிஞர் - திரைப்படப் பாடலாசிரியர் அ. மருதகாசி அவர்கள். கவிஞரின் பாடல்களை - கவிதைகளை பல ஆண்டுகளாக ரசித்துப் படித்துப் பாராட்டி வந்த அவர் அடிக்கடி கவிஞரின் இல்லத் திற்கு வருகை தந்தும் பாராட்டி மகிழ்வார். "நீங்கள் பெரியவர். நான்தான் உங்கள் இல்லத்திற்கு வர வேண்டும். நீங்கள் இப்படி சிரமப்படக் கூடாது" என்று கவிஞர் எத்தனை முறை கூறினாலும் கவிஞர் மருதகாசி அவர்கள் அதைக் காது கொடுத்துக் கேட்க மாட்டார்.

கவிஞர் நடத்தும் தமிழ்க் கவிஞர் மன்றக் கூட்டங்கள், திறனாய்வு நிகழ்ச்சிகள், கடற்கரைக் கவியரங்க நிகழ்ச்சிகளுக்கு முடிந்தபோதெல் லாம் அவர் வருகை தந்து சிறப்பிக்கத் தவற மாட்டார். வயதில் கவிஞர் பொன்னடியான் அவரைவிட மிகவும் இளையவராக இருந்தும் "அண்ணன் பொன்னடியான்" என்றே அழைப்பார். கடிதங்களிலும் அப்படியே குறிப்பிடுவார். இது பற்றி அவர் சென்னை பாரதிய வித்யா பவனில், முத்தமிழ்க் காவலர் தலைமையில் பன்மொழிப் புலவர்

முன்னிலையில் கவிஞருக்கு நடைபெற்ற 'இலக்கியப்பணி வெள்ளி விழா'வில், "நான் கவிஞர் பொன்னடியான் அவர்களை அண்ணன் என்றுதான் அழைப்பேன். ஆனால், அவர் அப்படி அழைக்க வேண்டாம். உங்கள் அன்புத் தம்பிகளில் ஒருவன் நான்" என்று தடுப்பார். ஆனால், நான் பல ஆண்டுகளாக அவரின் கவிதைகளின் ரசிகன். அறிவில், ஆற்றலில் உயர்ந்தவராக அவர் இருப்பதால் நான் அவரை அப்படி அழைக்கிறேன். இனியும் அழைப்பேன்" என்று முழங்கினார். அரங்கத்தினர் கரவொலி மூலம் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தனர்.

அந்தப் பெருங்கவிஞர், கவிஞர் பொன்னடியான் அவர்களுக்கு எழுதிய ஒரு மடல் இங்கே கொடுக்கப்படுகிறது.

கவிஞர் அ. மருதகாசி அவர்கள் கைப்பட எழுதிய அந்த மடல் இதோ:

அன்புமிக்க அண்ணன் கவிஞர் பொன்னடியான் அவர்களுக்கு,

வணக்கம்.

நலம். நாடுவதும் நலமே. தங்களை நேரில் சந்திக்கவிருந்தேன். ஆனால், எனது மருமகன் (சைதாப்பேட்டையில் உடல்நலம் குன்றி இருப்பவரைப் பார்க்கச் செல்லுவதால் வர இயலவில்லை. இந்த மடல் கொண்டு வரும் தம்பி சீனிவாசன் அவர்கள் சில கவிதைகள் இயற்றியுள்ளார். கவியரங்கிலும், முல்லைச்சரத்திலும் தங்களால் இடம்பெற வேண்டியவர். கவிதைகளைப் பார்த்து வளர்ச்சிக்கு உறுதுணை புரிய வேண்டுகிறேன். முடிந்தால் இன்று மாலை கவியரங்கத்திற்கு வந்து தங்களைச் சந்திக்கிறேன். பிற பின்,

அன்புடன்
மருதகாசி.

123, கோதாவரி தெரு,
சின்மயா நகர்,
ஸ்டேஜ், சென்னை - 93



கர்வம் என்பதையே அறியாத அடக்கத்தின் வடிவமான இப் புகழ் மிக்க கவிஞர் கவிஞர் பொன்னடியான் அவர்களின் இலக்கியப் பணி வெள்ளி விழா மலருக்கு எழுதிய மனத்தில் மணக்கும் அருமையான கவிதை இதோ:

*செந்தமிழன் வாழியவே!*

*சொல்லுக்குச் சொல்லழகும்*
*சுவையூறும் பொருளழகும்*
*துள்ளுதமிழ் நடையழகும்*
*உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்!'*

*'முல்லைச் சரம்' தொடுத்தான்*
*மூவாறு ஆண்டுகளாய்!*
*பிள்ளைக் கவிஞரெலாம்*
*பெருங்கவிஞராவதற்கே!*

*பொன்னடியான் பொங்குதமிழ்ப்*
*பண்ணடியான்; பாவேந்தர்*
*தன்னடியான்; கவிக்கோயில்*
*முன்னடியான் என்றே முழங்கு!*

*பொருளை இழந்தாலும்*
*புகழ் மகுடம் பலருக்கு*
*சிரசினில் ஏற்றி வைக்கும்*
*செந்தமிழன் வாழியவே!*

*- திரைப்படப் பாடலாசிரியர் அ. மருதகாசி.*




இப்படிப் பல வகையிலும் கவிஞர் பொன்னடியான் அவர்கள் மீது அன்பைச் சொரிந்து வந்த கவிஞர் அ. மருதகாசி அவர்கள் கவிஞரின் இலக்கியப் பணி வெள்ளி விழாவின்போது ஒரு சிறிய சோனி 'டேப் ரிக்கார்டரை'ப் பரிசாக அளித்து மகிழ்ந்தார். அதை இன்றும் பத்திர மாகப பாதுகாத்து வருகிறார் கவிஞர் பொன்னடியார்.

# என்னைக் கவர்ந்த கவிஞர்

## கவிஞர் மன்றவாணன்



*(29-4-1972ல் ஒலிபரப்பான வானொலிக் கட்டுரை)*

தமிழ் மொழி இலக்கணவலிவும், இலக்கியப் பொலிவும் கொண்டது. வரலாற்றுச் சிறப்புடன் வாழ்வியல் நுட்பமும் செறிந்து விளங்குவது. காலத்தால் முதுமையும் கருத்தால் புதுமையும் பெற்றுத் திகழ்வது. இத்துணைச் சிறப்புப் பொருந்திய தமிழ் மொழிக்கு மேலும் பெருமை செய்வான் வேண்டி பல்வேறு காலக் கட்டங்களில் தமிழருக்கு உணர்வும், அவர்தம் வாழ்வுக்கு உரமும் ஊட்டிய கவிஞர்கள் உலகில் வியக்குமாறு நததமிழ் நாட்டில் தோன்றியுள்ளனர்.

இருபதாம் நூற்றாண்டினைப் பொருத்தமட்டில் தமிழுக்குப் பொற்காலம் என்றே கொள்ளுதல் வேண்டும். புரட்சிக் கனலை மூட்டி, அரசியல் ஆதிக்கத்தை வீழ்த்தி, அருந்தமிழ் இன்பத்தை அனைவரும் துய்க்குமாறு செய்து மங்கிக் கிடந்த மொழியுணர்வை - நாட்டுப் பற்றை தெய்வப்பக்தியை மாண்புறச் செய்தவர் நம் தேசியக் கவிஞர் பாரதியார். பாரதியாருக்குப் பின் புரட்சிப் பாவேந்தர் பாரதிதாசன். பாரதிதாசனுக்குப் பின் அவர்தம் வழியினைப் பின் தொடர்ந்து வெற்றி நடமிடும் இன்றைய கவிஞர் திருக்கூட்டம்.

இன்று தமிழ்மொழி பல்வேறு துறைகளில் பெரும் முன்னேற்றம் கண்டிருக்கிறது. இது போதாதேனினும் அது கவிதைத் துறையில் அடைந்து வரும் முன்னேற்றம் போற்றற்குரியதே! ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், கவிதை இன்பத்தில் மூழ்கித் திளைத்துக் காவியங்கள் பல கண்ட மொழி தமிழேயாகும். தமிழ் இனிமையானது. தமிழர்களின் வாழ்வோ இசை மயமானது. இசைக்கு ஏற்றதொரு பொருளாய் எழில்மிகு கருவாய் விளங்குவது கவிதை. கவிதை பொது 'முறையான ஒன்றன்று. உலகத்து இன்பத் துன்பங்களில் பங்குகொண்ட

கவிஞர்கள், அதன் ஏற்றத்தாழ்வுகளை நடுவுநிலை கண் கொண்டு துய்த்தறிந்த பின்னர், உள்ளத்துள்ளதை உணர்ந்தவாறு கற்பனை நயம் தோன்றக் காவியச் சிறப்புடன், மொழியின்பம் குன்றாமல் இசையுடன் நின்று நற்பயன் விளையுமாறு படைப்பது, இத்தகைய கவிதை உயரிய படைப்பு என்பது மட்டுமல்ல உயிர்ப் படைப்புமாகும். இலக்கண வரம்பும், இலக்கிய மரபும் கொண்ட உணர்ச்சிக் கவிதைகள், அவற்றைப் படைத்தவனுக்குப் பின்னரும் நெடுங்காலம் நின்று வாழும் பெருமைபெறும். இவ்வாறு காலத்தால் அழியாத கவியாற்றல் பெற்ற நாளைய வழித்தொன்றல்களுக்கு விழிப்புணர்ச்சியை யூட்டித் தமிழை-தாயகத்தை வாழ வைக்கும் கவிஞர்களுள் திரு பொன்னடியான் அவர்கள் போற்றத் தகுந்த அரியதோர் இடத்தைப் பெற்றிருப்பது எண்ணியெண்ணி மகிழத் தக்கச் செய்தியாகும்.

கவிஞர் பொன்னடியான் அவர்கள் பாரதிதாசன் பரம்பரையின் தானைத் தலைவர். தமிழ்த் தேனைக் கவிதையில் வடித்துத் தரும் எழுச்சிமிகு கவிஞர். புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசனுடன் உடன் உறைந்து நெருங்கிப் பழகிய வாய்ப்பினைப் பெற்றவர் இவர். அவர் கவிதை வரிகளின் படியே கூறினால் - "

"சீர்திருத்த வழி நடப்பார்
செந்தமிழை உண்டு கிடப்பார்
பார்திருந்த நிதம் உழைப்பார்
பகுத்தறி வினால் தழைப்பார்
நீதிக்கோ அவர் துணைவர்
நேர்மைக்கோ அவர் தோழர்
சாதிமத சமயக் குழியில்
சாய்வோர்க்கோ அவர் பகைவர்."

கவிஞர் பொன்னடியான் அவர்களின் கவிதைகள் கால ஓட்டத்தையும் எதிர்த்துக் கருத்து ஓட்டத்தில் நிலைத்து நிற்கும் நீர்மையனவாகும். இன்னிசைப் பாடல்கள் இயற்றுவதில் தன்னிகரற்று விளங்குகின்ற இவர், செய்யுள் இலக்கணத்தில் செவ்விய முறையொன்றை ஆட்சி செய்து இளைஞர்களின் இதயத்தில் சிறப்பானதோர் இடத்தைப் பிடித்திருக்கிறார்.

உண்மைக் கவிஞனுக்கென்று ஒரு நடையுண்டு. அஃது அவனுக்குத் தானே அமையும். அவனது கருத்து அவனுக்கே சொந்தமானது போல அவனது நடையும் அவனுக்கே சொந்தமானது. "நடையொன்றினாலேயே கவிஞனது புலமையையும் மனப்பாங்கினையும் கணக்கிடலாம்" என்று மேனாட்டறிஞர் ஒருவர் கூறியுள்ளார். அவர்தம் கூற்றுக் கொப்பப் பொன்னடியான் அவர்களின் கவிமணிகள் திகழ்ந்தொளிர்கின்றன என்பதில் மிகையொன்றுமில்லை.

இனிக் கவிஞர் பொன்னடியான் அவர்களின் கவிதைகளுள் சிலவற்றைக் காண்போம். கவிஞர் அவர்கள் நமக்கு விடுகதை ஒன்றைப் போடுகின்றார்

நெஞ்சின் அலைகளிலே – நான்
நினைக்கும் பொருள்களிலே
கொஞ்சிக் கொஞ்சி வருவாள் – இன்பம்
குழைத்துக் குழைத் தருள்வாள்!

பாடும் பொருள் கொடுத்தே –எங்கே
பாடொரு பாட்டு என்பாள்!
பாடும் கவிதையிலே – மயக்கும்
பண்ணாய் இணைந்திருப்பாள்!

சிந்திடும் சொல்லினிலே–கவிதைச்
சீரின் அடியினிலே
வந்தே உருக்கொடுப்பாள்–என்னை
வாழ வைக்கத் துடிப்பாள்!
இவள் யார் தெரியுமா? அவள் என்றன்

மாமன் மகளுமில்லை–எனக்கு
மாலையிட் டாளுமில்லை
பின்னர் யார்தான் இவள்?
கோமகள் தமிழ் மகளே–இயலிசைக்
கூத்தின் தலைமகளே!

என்று விடையளிக்கின்றார்.

தமிழின் மீது கவிஞருக்கு எத்துணைக் காதல் இப்பாடலின் வாயிலாகக் கவிஞர் அவர்கள் அக்காதலைத் தெளிவாக உணர்த்தி விடுகின்றார்.

அடிமைப்பட்டுக் கிடந்த பாரத தேசந்தன்னைப் பாடிய பாரதியாரும், சமுதாயப் பொய் வழக்கங்களையும் மூடப் பழக்கங்களையும் எள்ளி நகையாடிய பாரதிதாசனும், மக்களின் நெஞ்சங்களில் நீங்காத இடம் பெற்றுவிட்டனர். இவர்களை அடியொற்றிவரும் பொன்னடியான் அவர்களின் கவிதைகளும், சமுதாயப் பண்பாட்டுச் சீரழிவுகள், அவற்றின் சீர்திருத்தங்கள் பற்றிய கருத்துகள் பரவி வர-விரவி வரத்தொடுக்கப்

படடுள்ளன. அதனூடே உயிரோட்டமுள்ள உவமை நயங்களும் துள்ளுநடை போட்டு வரும்.

பொதுவாக காதல் கவிதைகள் எழுதுவதைவிட, வறுமைப் பிணியில் சிக்கித் தாழ்வுற்றுச் சிதையும் மக்களின் மேன்மைக்குப் பாடுபடுவதில், வேணவா மிகக் கொண்ட இந்தப் 'பனிமலர்' கவிஞரின் சமுதாயப் பார்வை சிந்தையைத் தூண்டிச் சிந்திக்க வைக்கும் ஆற்றல் படைத்ததாகும்.

வழித்தடுமாறும் சமுதாயத்திற்கு விழியென இருந்து சூழ்ந்து வரும் பழிதனை நீக்குகின்ற எழுத்தாளன்.

"புழுதி நிறைந்த சமுதாயத்தின்
வளர்ச்சிக்கே உழைத்திருப்பேன்-நாளும்
பழுது சுமந்த கொடியவர்க்காய்
கருத்துகள் குவித்திருப்பேன். "

என்கிறான். இத்துணை விழுமிய எண்ணங்கொண்ட எழுத்தாளனின் வாழ்க்கையைச் சற்றுக் கூர்ந்து நோக்குவோமானால் மிகவும் இழிவான நிலையில் அவன் தாழ்ந்து கிடப்பது தெரியும். தன் அறிவின் நுட்பத்தால் இவ்வுலகைப் பெருஞ்சோலையாக மாற்றும் திறன் படைத்த எழுத்தாளனின் வாழ்வு, கொடும் பாலையிலும் கேவலமாய்ப் பாழ்பட்டுப் போவானேன்? சமுதயத்தின் சீரான வாழ்வுக்குச் செயல்படும் நல்லவனின் வாழ்வு மட்டும் நலிந்து நசிந்து போவானேன்.

"அடுத்தவேளை உணவிற்குப் பிடி
அரிசி பருப்பும் இல்லை-மாற்றி
உடுத்த எனக்கும் அவளுக்குமே
சேலை வேட்டி தொல்லை."

இத்தகைய ஏழ்மை நிலைமைக்கு உள்ளாகும் ஏழையர் இன்பம் பெறுவது என்றோ? இந்தத் துன்பத்திற்கெல்லாம் ஒரு முடிவு நெருங்கிவிட்டது இன்று. ஆம்!

"வருங்காலம் புரட்சி போக்கில்
வளர்வதோ நமது கையில்
திருக்கோலம் காட்சி தந்து
தெருவெலாம் அறிவு பொங்க
இருட்கோலம் மறைய வேண்டும்
எழுச்சிக்கோர் மலர்ச்சி வேண்டும்."

இம்மலர்ச்சி ஒன்றே மக்களுக்கு விழிப்புணர்ச்சி ஊட்டும். ஏழ்மையைப் போக்கும்.

இயல்பிலேயே நற்றமிழ்ப் பற்றும் நெஞ்சுரமும் கொண்ட பொன்னடியான் அவர்கள் ஏற்றத் தாழ்வுகளற்ற சமுதாயத்தைப்

படைக்கத் துடிக்கும் அவர், வரம்பு மீறிய மக்கட்தொகை இவர் தம் செயலாக்கத்திற்குத் தடையாயிருந்து பாழ்படுத்துவதை எண்ணி வருந்துகின்றார்.

"இப்போது மூன்றரை வினாடிக்கு ஒரு குழந்தை வீதம் பிறப்பதாகப் புள்ளி விவரங்கள் கூறுகின்றன. அதாவது ஒரு நிமிடத்தில் நாற்பது குழந்தைகள், நிகழ்ச்சியின் இறுதியில் நமது தேசிய கீதம் இசைக்கப் படுகிறதே. அந்த நேரத்தில்-"ஜனகணமண என்று சொல்வதற்குள் 120 குழந்தைகள் பிறந்துவிடுகின்றன. ஒரு மணிக்கு 2400 குழந்தைகள். ஒரு திரைப்படம் பார்த்துவிட்டு வெளியில் வரும்போது நம்மோடு அடுத்த வரிசையில் நிற்க 7200 புதிய குழந்தைகள் தயாராகி விடுகின்றனர். ஒரு ஞாயிற்றுக்கிழமை ஓய்வாக வீட்டில் இருந்துவிட்டு அடுத்த நாள் அலுவலகம் போகும்போது சுமார் 60,000 குழந்தைகள் கூடிவிடு கின்றனர். ஒரு மாதத்தில் 17 லட்சம் குழந்தைகள், அதாவது தமிழ் நாட்டில் உள்ள ஒரு மாவட்டமே புதிதாக உருவாகிவிடுகிறது.

மக்கட் தொகை இங்கு இவ்விதமாய்ப் பெருகிக்கோண்டே போகுமானால் நாட்டில் தனியொருவருவற்கு நிற்கவும் இடம் இல்லாமல் போகும். இதனை முன்பே உணர்ந்துதான் பாரதிதாசன் அவர்கள்,

காதலுக்கு வழிவைத்துக் கருப்பாதை சாத்தக்
கதவொன்று கண்டறிவோம் என்றார்.

பாவேந்தர் பாரதிதாசன் வழிவந்த பொன்னடியான் அவர்களோ, புதியதோர் வழியைக் கண்டுபிடித்துச் சொல்லுகின்றார். 'தன்னைத்தான் காத்துத் தன்னைச் சூழ்ந்தவரையும் காத்துப் பின்வரும் பரம்பரையினருக் கும் பொருள் சேர்த்து வைத்த தகுதி பெற்றவனே திருமணம் செய்து கொள்ளுதல் வேண்டும்.' என்று விதியொன்றைச் சிறப்புத் திட்ட மொன்றை நாட்டு மக்களுக்கு அவர் அறிமுகப்படுத்துகின்றார். வரம்பில்லாத மக்கட் தொகையைக் கட்டுப்படுத்த இத்தகைய நிலையில் மிகவும் அவசியம் கூட.

"திருமணம் மனித னுக்குத்
தேவைதான்; மிகவும் தேவை!
ஒருமனம் இணைந்த ஆண்பெண்
உறவின்றேல் உலகம் ஏது?
வருமானம் உள்ளா னுக்கும்
வறுமையே இல்லானுக்கும்
தான் திருமணம் தேவை"

என்று அழுத்தந்திருத்தமாகவே கவிஞர் பொன்னடியான் அவர்கள் கூறிவிடுகின்றார்.

திருமணமானவர்களுக்குக் குடும்பக் கட்டுப்பாட்டின் அவசியத்தை உணர்த்தப் பெருந்தொகையினைச் செலவிடுகின்ற அரசினர், குறிப்பிட்ட வயதிற்கு அப்பாலும் திருமணம் செய்துகொள்ளாத - விரும்பாத இரு

பாலர்களுக்கும் உதவிப் பணம் அளிக்க முன்வருவார்களேயானால் நாட்டின் மக்கட்தொகை ஒருவாறு கட்டுப்படுத்தப்படும் என்று உறுதியாக நம்பலாமன்றோ?

கவிஞன் என்பவனும் கலைஞனே. தனது பொன்னான கருத்தால், உலகத்தார்களின் உள்ளங்களையெல்லாம் கவர்ந்திழுக்கின்றான். உள்ளதை உள்ளவாறு சொல்லாமல், உள்ளதை உணர்ந்தவாறு சுவைபடச் சொல்பவனே உயர்ந்த கவிஞன். உயர்ந்த கவிஞனுக்கு அழிவில்லை. காலத்தையும் கருத்தையும் கடந்து நிற்கும் ஆற்றல் பெற்ற கவிஞன் இங்கு ஓர் அழகிய பெண்ணைக் காண்கின்றான்.

"மஞ்சள் பூசிக் குளித்தமுகம்
மங்கலம் சேர் மயக்குமுகம்
நெஞ்சுக் குள்ளே நிலைத்தமுகம்
நீலமணிக் கண் நீந்துமுகம்"
இது அவளது முகம்!'



"மாதுளையைப் பிளந்ததிலே குங்குமத்தின்
மைகுழைத்து வைத்ததுபோல்
விரிந்திருக்கும் சீதளத்தாள்"
இது அவளது இதழ்

"மல்லிகை மலரெடுத்து
மாங்கனியின் சாறெடுத்துக்
கொல்லிமலைத் தேனெடுத்துக்
குழைத்த உருவமோ - அவள்
குங்குமத்தில் சந்தனத்தில்
இழைத்த பருவமோ?"
இது அவளது உருவம்.

என்னே! அழகான கற்பனை! நயம்! காவிய வளம்!!

காவியத்திறமும், கவிதையின் அழகும் அந்தக் கன்னியின் அழகையும்விட மிகுந்து நிற்கிறதல்லவா! இத்தகைய எழிலும் ஏற்றமும் பெற்றொளிரும் மங்கையவள் இன்று,

"தேடிவிட்டாள் தேடிவிட்டாள்
திருமகனை என்மகள் - இளந்
திருமகனை மணமகளாய்த்
தேர்ந்தெடுத்தாள் என் மகள்!
கூடிவிட்டாள் கூடிவிட்டாள்
கோமகனில் என்மகள் - தனிக்
குடில்காணத் திறன்படைத்தாள்
குலவிளக்காம் என் மகள்!"

இங்குக் கலித்தொகையின் காவியச்சுவை கவிஞரது வாக்கிலே களிநடம் புரியக் காண்கிறோம். ஆனால் இதிலே ஒரு சிறப்பிருப்பதும் நமக்குப் புலனாகின்றது. காதலித்துக் களவு மணம் கொண்டவளைக் குலவிளக்கு என்று பெற்றவளே பாராட்டுமளவுக்கு இங்கு ஓர் நிகழ்ச்சி நடந்துள்ளது.

அஃது என்ன என்பீராயின்,

"படித்தவன்தான் பண்பறிந்து
பழகுவோன்என் மாப்பிள்ளை - உயர்
பைந்தமழின் சுவையறிந்தோன்
பகுத்தறிவோன் மாப்பிள்ளை!




துடித்திருக்கும் ஏழைமக்கள்

துயர்உணர்ந்தோன் மாப்பிள்ளை - இந்தத்

தூய குணம் போதாதா

வாழ்களன் பெண்பிள்ளை!"

என்று காரணம் காட்டும் தாயின் பண்புள்ளம் நமக்கு நன்கு விளங்குகின்றதன்றோ! வாழ்க காதலர் இருவர் மகிழ்ச்சி பொங்கவே!

பெண்ணின் பெருமையைப் போற்றாதார் யாருமிலர். இவ்வுலகில் தோன்றி இயங்கும் மனித இனத்தின் கருவே பெண்ணிடத்தில்தான் உருவாகிறது. பெண்ணின் மடியில் தவழும் மனித இனம் தனது வாழ்க்கையின் முதல் பாடத்தை அவளிடத்தில்தான் கற்றுக்கொள்ளுகின்றது. இந்த ஒப்பற்ற சக்தியைத் தான் பாரதியார் ஓம் சக்தியெனப் போற்றித் தொழுதார். பாரதிதாசன் அவர்கள்,

எங்கெங்கும் காணினும் சக்தியடா-தம்பி

ஏழுகடல் அவள் வண்ணமடா!

என்று முழக்கமிட்டார்.

கவிஞர் பொன்னடியார்ன் அவர்களோ,

"உலகம் என்னை வாழ்த்தும்படி
உருவாக்க ஒருத்தி வேண்டும்
கலகம் வந்து சூழாமல்
காத்திடவே ஒருத்தி வேண்டும்"

என்கிறார் மேலும்

"அரும்புகின்ற எண்ணத்தில் தெளிவு வேண்டும்
அழகு முகத்தில் நீங்காப் பொலிவு வேண்டும்
திரும்புகின்ற விழிகளிலே அறிவு வாசல்
திக்கின்ற ஒளி வேண்டும் உயர்வு வேண்டும்!
விரும்புகின்ற நற்செயல்கள் தடங்க லின்றி
விட்டஇடத் தில் இருந்து தொடங்க வேண்டும்
பெரும் பொறுப்பு மனிதர்களே! இவற்றிற் கெல்லாம்
பெண்ணொருத்தி கண்ணசைவின் உறவு வேண்டும்!

என்று தேளிவுறுத்துகின்றார்.

இன்பமும் துன்பமும் இரண்டறக் கலந்து கலந்து இயங்குவதே வாழ்வாகும். ஆனால் வாழ்வு எனும் மாயையில் சிக்கி மயக்கத்தில் ஆழ்கின்றவர்கள் தத்தம் நிலைக்கேற்ப இன்பத்தையும் துன்பத்தையும் பெறுகின்றனர். இந்த மயக்கங்கள் பற்பல வடிவங்கள் பெற்று நம் வாழ்வில் ஊடுறுவி நிற்கின்றன.

"ஆசை என்பதோ ஒருமயக்கம்
அன்பு என்பதோ ஒருமயக்கம்
பாசம் என்பதோ ஒரு. மயக்கம்
பாரில் இதுபோல் பலமயக்கம்!
பட்டம் பதவியில் மயக்கம்
பணத்தைச் சேர்ப்பதில் மயக்கம்!
ஒட்டா உறவில் மயக்கம்!
உறங்காக் காதலில் மயக்கம்!"

துன்பம் தொடர்வதும், இன்பம் துவள்வதும் இந்த மயக்கங்களினாலேதான் என்பதை உணர்ந்த கவிஞர் –

"மயக்கத்தில் இருந்து விடுபடு–மனத்
தயக்கத்தில் இருந்து விடுபடு"

என்று தேரிந்து தெளிந்து சொல்கின்றார். மேலும்,

"நரம்பில், எலும்பில் குருதிக் குழம்பில்
பிசைந்த உடம்பென் உடம்பு-சிறு
துரும்பிற்கும் உதவாமல் போகும்
துயர்தரும் சதைக் கிடங்கு!"

என்று யாக்கை நிலையாமையைப் பக்குவமாகக் கூறுகின்றார். ஆதலின்,

"உணர்வுக் கோப்பு உயிரின் சேர்ப்பு
இரண்டின் கலவை நான்தான் - தீய
உணர்வைக் கிளரும் அணுவின் கூட்டில்
உறங்கும் பேயன் நான்நான்."

எனும் நிலையை மனிதன் நன்கு அறிந்து கொள்வானேயானால் நாட்டின் தாழ்வெல்லாம் நீங்கிப் போகும் என்பது கவிஞர் பொன்னடியான் அவர்களின் துணிவான முடிவு.

ஆகவேதான்,

பிறந்த உயிரினம் பேருல கெங்கும்
பிணைந்து மகிழ்ந்துற வாடுவதும்
பறந்து திரிகின்ற வான்பறவை நித்தம்
பாடிக் களித்திணை தேடுவதும்
திறந்து கிடக்கின்ற தாய்த்திரு நாட்டில்
தீமைபு காதென்றும் காப்பதுவும்
விரிந்த மனத் தமிழா! உனதடிமை
விலங்கை ஒடித்து நொறுக்குவதும்
பிறப்புரிமை! பிறப்புரிமை! பிறப்புரிமை!"

—என்று விரிவுரையாற்றித் துயிலும் தமிழர்களைத் துணிவு கொள்ளச் செய்கின்றார்.

வாழ்க! கவிஞர் பொன்னடியான் அவர்கள்!

வளர்க! அவர்தம் கவிதை நெஞ்சம்!

கவிஞர் மன்றவாணன் கவிஞர் பொன்னடியான் முதல் கவிதை நூலான 'பனிமலர்' (1965) நூலின் சில கவிதைகளை மட்டும் இத்திறனாய்வுக் கட்டுரையில் ஆய்வுச் செய்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

●

# பாவேந்தர் வீட்டுப் பசலை..!

## கவிஞர் வழித்துணை ராமன்

**பா**வேந்தர் என்ற பட்டத்துக்குரிய ஒரே பாவலர் பாண்டிச்சேரி மண்ணில் பிறந்த பாரதிதாசன் என்பது நாடறிந்த உண்மை. அவர் பாரதியாரின் தலைமைச் சீடர். பாரதியாருக்கு அவரது வாழ்க்கையில் கவிதையாய், நிழலாய் இருந்த இந்தச் சீடர் மிகுந்த குரு பக்தி கொண்டவர். அவரது அதீதமான குரு பக்தி பண்டைக் கதைகளிலும், புராணங்களிலும் பேசப்படும் குருபக்தி போன்றது. ஒருநாள் நான் பாவேந்தரைச் சந்தித்த போது "தேசிய கவி பாரதியாருக்குத் தேசப் பற்று மிகுந்திருந்ததே ஒழிய, தமிழ் மொழி மேல் உள்ள பற்று அந்த அளவுக்கு இல்லை" என்று குறிப்பிட்டேன். அப்போது பாவேந்தர் அவர்கள், "என்ன நீங்களா இப்படிச் சொல்கிறீர்கள்? ஐயர் அவர் களுக்குரிய தமிழ்ப் பற்றுக்கு அவர் பாப்பாப்பாட்டு ஒன்றே பதில் சொல்லுமே" என்று சொல்லி விட்டு என்னிடம் ஒரு புதிர் போட்டார். தேசியக் கவி பாரதியாரைப் புரட்சிக் கவி ஐயர் என்றே கூறுவார்கள்.

அந்தப் பாப்பாப் பாட்டு பற்றி பிறகு சொல்கிறேன். உங்களை இப்போது நான் கேட்கிறேன். தயவு செய்து பதில் சொல்லுங்கள். இந்த வீட்டில் பச்சைப் பசலையாக பாரதி தாசனுக்குத் தாசனாக இருக்கும் இந்தப் பொன்னடி என்னோடு பழகுவதை நீங்கள் உற்றுக் கவனித் திருப்பீர்கள். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் அல்லவா? ஆகவே இந்தப் பசலைக் குணம் கொண்ட பொன்னடியிடம் மிகுந்து காணப்படுவது என்னிடம் கொண்ட குரு பக்தியா? இல்லை தமிழ் மீது அவர் கொண்ட தாய்ப்பாசத்திற்கும் மேலான தனிப்பெரும் பற்றா?" என்று வினவினார்.

சென்னையில் புரட்சிக் கவிஞர் குடியிருந்த வீட்டிற்கு (10, ராமன் தெரு, தி. நகர்) அடியேன் சென்று பலநாள் பாவேந்தரோடு அளவளாவும் பேறு பெற்றிருக்கிறேன். அது அடியேனுக்குக் கிடைத்த

அருமையான பொற்காலம்: நானும் என் மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய திரு. ரா்ம ரத்தினம் அவர்களும், மற்றும் திரு.பி.டி.ராஜன் அவர் களின் பேரன் திரு. சுப்பிரமணியன் அவர்களும் சேர்ந்து திரு. பகீரதன் நடத்திய கங்கை என்னும் திங்கள் ஏட்டை மாதமிருமுறை மலரும் ஏடாக மாற்றி அன்பு நூலகம் என்ற ஓர் நூல் வெளியீட்டு நிறுவனமும் நடத்திய காலம் அது.

அந்த அன்பு நூலகத்தில் முதல் நூலாக, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் எழுதிய திருக்குறள் உரையை (புரட்சி) வெளியிடத் திட்டமிட்டிருந்தோம். அவர்களும் அதற்கு இசைந்து அவ்வப்போது வந்து தம்மை அது பற்றி கலந்து கொள்ளுமாறு பணித்தார்கள். அதற்கிடையே அவர் முன்பே எழுதியிருந்த 'கண்ணகி புரட்சிக் காப்பி'யத்தையும், 'மணிமேகலை வெண்பா'வையும் முதலில் நூல் ஆக்கி வெளியிட வேண்டும் என்றார்கள். அவர்கள் விருப்பப் படியே அந்த நூலையும் வெளியிட்டோம். அது வெளி வருவதற்கு முன்பு அந்த நூலை எழுதுவதற்குப் பாவேந்தருக்கு உறுதுணையாக இருந்தவர் திரு. பொன்னடியான் அவர்கள். திரு. பொன்னடியானை பாவேந்தர் மிகவும் அழகாக பொன்னடி என்றே அழைப்பார்கள். அது சமயம் தம் மீதும் தமிழ் மீதும் பற்றுக் கொண்ட திரு. பொன்னடி பசலை-குழந்தை உள்ளம் கொண்டவர் என்று குறிப்பிடுவார்கள். அது மட்டுமல்ல, மன்னர் மன்னன் எனக்கு வலக்கண் என்றால், பொன்னடி எனக்கு இடக்கண் என்பார்கள். தாய்ப்பாசம், தந்தைப் பாசம், குரு பாசம் என்று பேசப்படும் அத்தனைப் பாசங்களையும் மீறி என் முதுமைக் காலத்தில் என் நிழலாக உறுதுணையாக வந்திருக்கும் என் பிள்ளை பசலை என்று கூறியும் பொன்னடியைப் போற்றுவார்கள்.

அவர்கள் காலால் இட்ட பணியைத் தன் சிரத்தால் கவிஞர் பொன்னடியான் செய்வதாக அடியேன் கேள்விப்பட்டது மட்டுமல்ல கண்ணாரப் பார்த்துமிருக்கிறேன். ஒரு நாள் புரட்சிக் கவிஞர் உடல் நலமற்று படுக்கையில் இருந்த நேரம் கவிஞரின் துணைவியார் அவர்கள் கஞ்சியும் மருந்தும் ஊட்டிக் கொண்டிருந்தார். அவர்கள் படுக்கை பக்கத்திலிருந்து திரு. பொன்னடியான் அவர்கள் சிட்சுருட்சை செய்து கொண்டிருந்தார்கள். கண்ணகி புரட்சிக் காப்பியம் முடிந்து அது படியெடுக்கப்பட்டு என் கையில் அச்சேற்றித் தர எனக்கு அழைப்பு விடுத்திருந்தார்கள் பாவேந்தர் அவர்கள். அதற்காக நான் பாவேந்தர் வீட்டிற்குச் சென்றிருந்த போது அந்தக் காட்சியைக் கண்டேன். பாவேந்தர் அவர்கள் அயர்ந்து கண்ணுறக்கத்தில் இருக்கிறார். நான் வீட்டிற்குள் புகுந்தேன். அப்போது என்னை மிகவும் பரிவோடு வீட்டிற்கு வெளியே அழைத்துக் கொண்டு வந்தார் பொன்னடியான். வெளியே வரும் போதே அவர்கள் விம்மி விம்மி அழுதபடி, அதைப் பாவேந்தரும் அவர் மனைவியாரும் பார்த்துவிடக் கூடாதே என்று அதை அடக்கியபடி அமைதியாக அழுது கண்களைக் குளமாக்கிக் கொண்ட காட்சி இப்பொழுதும் எனக்குப் பசுமையாக நினைவில் இருக்கிறது.

"என்ன பொன்னடி ஏன் அழுகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"ஐயாவிற்கு உடல்நிலை சரியில்லை. இந்தத் தள்ளாத வயதிலும் இரவு பகல் என்று பாராமல் எழுத்துப் பணியில் கடுமையாக உழைப்பதால் இந்த நிலை. அவர்கள் நீடுழி வாழ வேண்டும். நீங்கள எதிர்பார்க்கிற அந்த திருக்குறள் உரை வளம் எப்படியும் வெளிவர வேண்டும்" என்ற தன் ஆதங்கத்தை வெளிப்படுத்தி மேலும் விம்மினார்கள்.

நான் "அழாதீர்கள் ஐயா உடல் உரம் கொண்டவர்கள். முதுமையின் காரணமாக உடல்நலம் குன்றியுள்ளார்கள். சீக்கிரம் நலம் பெற்று விடுவார்கள்" என்று தேற்றிய பின்பு உள்ளே நுழைந்தோம். இதற்குள் புரட்சிக் கவிஞர் விழித்து எழுந்து படுக்கையில் உட்கார்ந்து விட்டார் கள். எங்கள் சூழ்நிலையை சூசகமாகத் தெரிந்து கொண்ட அவர் கண்ணகி புரட்சிக் காப்பியம் நூல் நகலை என்னிடம் தரச் சொல்லி விட்டு "இந்தப் பொன்னடியைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?" என்று என்னிடம் கேட்டார்கள். "உங்கள் உடல் நலம் குன்றியதால் பொன்னடி மிகவும் மனம் வெதும்பி விட்டார்கள் ஐயா" என்றேன்.

"ஆம் அது ஒரு பச்சிளம் பசலை, இந்த பாரதிதாசனின் வளர்ப்புப் பசலை, வளர்த்த பாசம் நெஞ்சத்தில் நீக்கமறக் கொண்ட தனிப்பிறவி" என்று சொல்லி வானளாவப் புகழ்ந்தார்கள்.

பாரதியாரைத் தவிர யாரையும் இப்படிப் புகழ்ந்ததேயில்லை. அதன் பின்பு மணிமேகலை வெண்பா நூல் முடியும் சமயம் என்னோடு பாவேந்தர் அளவளாவிக் கொண்டிருந்த நேரத்தில்தான் நான் அவரிடம் பாரதியாரைப் பற்றி கேட்ட கேள்விக்கு பொன்னடியிடம் மிகுந்திருப்பது குருபக்தியா தமிழ்ப்பற்றா? என்று வினவினார்கள். இரண்டு பற்றும் கொண்டவர் என்று மழுப்பினேன். அவர்கள் "இல்லை இல்லை நேரடியாக உங்கள் நெஞ்சில் பட்டதை நறுக்கென்று கூறுங்கள்" என்று கேட்டார்கள். "குருபக்தி" என்றேன் நான். "தமிழின் மீது அவர் கொண்ட தளராத காதல் பக்தி என் மீது குருபக்தியாக ஆகியிருக்கிறது. அதனால் தான் இப்படி பசலை உள்ளத்தோடு என்மீது தூசி பட்டாலும் தூண் இடித்ததாகக் கருதி அந்தப் பிள்ளை துவண்டு போகிறது. தமிழ் பக்தி இல்லாதவனுக்கு குருபக்தி வராது என்பது எனது ஆழமான அசைக்க முடியாத நம்பிக்கை" என்று சொன்னார்கள். "அதிருக்கட்டும் ஐயா, அதற்கும் நான் பாரதியைப் பற்றி அவரிடம் மிகுந்து காணப்பட்டது தமிழ்ப் பற்றா, தேசபக்தியா? என்று கேட்ட கேள்விக்கும் என்ன சம்பந்தம்?" என்று வினவினேன். "பாரதியார் பாடிய பாப்பாப் பாட்டு ஒன்றை மட்டும் சான்று காட்டுகிறேன் கேளுங்கள். ஐயர் பாப்பாப் பாட்டிலே இந்துஸ்தானத்தையும் தமிழ் நாட்டையும் தாம் விளிக்கின்ற பாப்பாவிற்கு அடையாளம் காட்டு கிறார். தாய்த்தமிழ் நாட்டிடமும் இந்துஸ்தானிடமும் பாப்பா எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று இனம் காட்டுகிறார் பாருங்கள். செல்வம் நிறைந்தது இந்துஸ்தானம் இதைத் தொழுதிடடி பாப்பா என்றார். பின்பு தமிழ் நாட்டைப் பாடுகிறார். தமிழ்த்திரு நாடு தன்னை பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா என்று கூறுகிறார். பெற்ற தாயைத் தமிழ்த் தாயைக் கும்பிடும்படி சொன்ன ஐயர், இந்து ஸ்த்தானத்தை தினமும் தொழுதிடடி என்று கூறினார்கள்".

"அது சரி, அதற்கும்......"

"சரி, சற்று— பொறுங்கள். தமிழ்ப்பற்று தமிழ் நாட்டுப் பற்று என்பதால்தான் தேசியப் பற்று மிகுதியாக ஐயர் அவர்களுக்கு வளர்ந்தது. மேலும் ஐயர் தாம் வெளியிட்ட தம் முதல் பாட்டு நூலில் முதல் பாட்டாக "எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி என்றென் றும் வாழியவே!" என்பதைத்தான் பதிப்பித்தார்கள். பின்புதான் வந்தே மாதரம் என்ற பாட்டை முதலில் பதிப்பித்து மற்றவர்கள் வெளி யிட்டனர். அதுபோல தமிழ்ப் பற்றின் மிகுதியால் குருபக்தி மிக்க பொன்னடி என்று" கூறித் தன் சீடரைப் பெருமைப்படுத்தினார்கள். பிறகு, "இதையெல்லாம் ஏன் சொல்லுகிறேன் என்றால், இந்தப் பிள்ளையை என் நூல்களை வெளியிட உரிமை பெற்ற அன்பு நூலகத் தோடும், உங்களோடும் இணைத்துக் கொள்ள வேண்டும் என்பதற் காகவே. அதற்கு நிறைவான ஊதியமும் கொடுக்க வேண்டும். அது உங்கள் இருவரின் விருப்பப்படியே இருக்கட்டும். இப்பேர் பெற்ற சிறப்புப் பெற்ற பிள்ளைக்கு உங்கள் இருவரின் (இராமரத்தினம் ஐயா) தமிழ் உள்ளமும் மாற்றம் கூறாது என்று நம்பி, பொன்னடியை ஒப்படைக்கிறேன்" என்றார்கள். "ஐயா, பொன்னடியை எங்கள் அலுவலகத்தில் உங்கள் சார்பாக பணிக்கு அமர்த்திக் கொள்வதில் நாங்கள் மிகவும் பெருமைப்படுகிறோம். உங்கள் அன்பு ஆணையை மறுக்கும் தகுதி எங்களுக்கு உண்டோ? ஆனால் அவர் என்றும் உங்கள் வீட்டுப் பிள்ளையாகவே இருப்பார்" என்று கூறி அவர் வேண்டு கோளை ஏற்றுக் கொண்டேன். இந்த உரையாடலை அவ்வமயம் அங்கு வந்த ஒரு சிலர் கேட்டிருக்கக்கூடும்.

இந்தப் பொன்னடி வெறும் குருபக்தி மட்டும் கொண்டவர் அல்ல. தமிழ் பக்தியும் கொண்டவர் என்பதை அவருடைய பிற்காலத்தமிழ்ப் பணிகள் நமக்குக் கண்கூடாகக் காட்டுகின்றன. இன்றைய தமிழ்க் கவிஞர் மன்றமும், கடற்கரைக் கவியரங்கமும் சிறப்பாக நடைபெறத் தன்னையே தந்துழைக்கும் தமிழ்ப் பெரும் தொண்டர் திரு. பொன்னடி, தலைசிறந்தவர் என்பதை நான் சொல்லி இந்த நாடு தெரிய வேண்டிய நிலையில் இல்லை.

வாழ்க பொன்னடியான் குருபக்தி!

வளர்க அவரது தமிழ் பக்தித் தொண்டு!!

(இ.ப.வெ.வி.மலர் - 1985)



# தார்ப்பாலையும் குறிஞ்சி மலர்களும்..!

## பேராசிரியர் - கவிஞர் வான்முகில்

**பேரன்புமிக்க கவிஞருக்கு,**

வணக்கம் பல. இங்கு நான், மனைவி, மக்கள், சிறுவாணி நீர் எல்லாம் நலம். அங்கு நீங்கள், சகோதரி, மலர், குமார் நலமறிய அவா. தெலுங்கு கங்கை-திராவிட கங்கை நீர் நலம் தானா? இரு வாரங்களுக்கு முன் அங்கே பெய்த மழையில் பெரும் பகுதி சாலையோரங்களில் அப்படியே தேங்கிக் கிடப்பதைக் கண்டேன். மழைநீரை மண் உறிஞ்சிக் கொண்டால்தானே மண்வாசனை வரும். நகரம் ஒரு பாலை; பிரிதலும், பிரிதல் நிமித்தமுமே. மாநகரோ தார்ப்பாலை. காய்கதிர்ச் செல்வன் என்பிலதனைக்காயும் வனத்தில் பாலைவனப் பசுஞ் சோலையாய் 'முல்லைச்சரம்' மணம் வீசத் தொடங்கிக் கால் நூற்றாண்டு ஆகிவிட்டதாமே-யார் நம்புவார்கள்?

**இன்றும் ஒலிக்கிறது**

நேற்றுதான் கேட்டதுபோல் இருக்கின்றது

"போராடிப் போராடி இளைத்து விட்டேன்

போராட என்னாலே முடியவில்லை

என்று நீங்கள் 25 ஆண்டுகளுக்கு முன் சென்னை ஒய்.எம்.சி.ஏ. பட்டிமன்றத்தில் கவிதை பாடியது என் செவிகளில் இன்றும் ஒலித்துக் கொண்டிருக்கின்றதே. இளைத்து விட்டாலும் களைத்து விடவில்லை. போராட முடியவில்லை என்று சொல்லிக் கொண்டே ஏட்டுப் போர், பாட்டுப் போர், தமிழ்க் கவிஞர் மன்றப் போர், என்று பல போராட்டங்களை இன்னும் நீங்கள் நடத்திக் கொண்டிருக்கின்றீர்கள். இவைகளோடு உள் - சுற்றில், வெளிச்சுற்றில் இருக்கவே இருக்கிறது, வாழ்க்கைப் போராட்டம் எல்லோர்க்கும்!

இரண்டு சுற்றுகளிலும் நீங்கள் நடத்தி வரும் போராட்டங்களில் நான் சில சமயமே படை வீரன். பல நேரங்களில் பார்வையாளன். குன்றேறி யானைப் போர் பார்க்க வேண்டி வந்து விட்டது. ஏழிரண்டாண்டுகள் வனவாசம்-குளிர் மலைக்காட்டில்; எண்ணாயிரம் அடி உயரத்தில். நீங்கள் அழைத்த போதெல்லாம் இறங்கி வரமுடியா விட்டாலும், நான் வந்த போதெல்லாம் என்னை வரவேற்றீர்கள்; வாழ்த்தினீர்கள். உடுக்கை இழந்தவன் கைபோல் இடுக்கண் களைந்தீர்கள்.

**அதற்கு மேல் போ...**

இந்தக் கால் நூற்றாண்டாக நான் கவனித்த வரையில், உங்களைத் தாண்டி எந்தக் கவிஞனும் சென்றதில்லை. செல்லமுடியாது. வீடும் தெருவும் அப்படி. சித்தி விநாயகர் கோயிலோ, நியூ போஸ்டல் காலனி தெருவோ, இப்போது இருக்கும் ராமையாதாஸ் தோட்டமோ எல்லாவற்றிலும் உங்கள் வீடு தானே எல்லை. அதற்கு மேல் போக வழி இல்லை.

அப்படி மேலே போக வழியில்லாத இன்னொரு இடத்தில்தான் உங்களைச் சந்தித்ததாக நினைவு. முதன் முதலாக என்னவோ வண்ணைக் கல்லறை மைதானத்தின் அருகில் கல்லறையைத் தாண்டி யார் மேலே போக முடியும்? அந்த் விடுதியில் 'மாடிப்படி மாது' போல நீங்கள் இருந்தீர்கள். 65-ஆம் ஆண்டாக இருக்கலாம்.

**'இதய தாகம் தீருமா? – நல்**

**இனிமை வாழ்வில் சேருமா? –**

என்ற பல்லவி கொண்ட இசைப்பா ஒன்றினைத் தயக்கத்துடன் உங்களிடம் நீட்டினேன். அதை ஆர்வத்துடன் வாங்கிப் பாராட்டினீர்கள். அத்துடன் நில்லாமல் இனிய குரலில் பாடவும் தொடங்கி விட்டீர்கள். அனு பல்லவியில்

**"உதய வானில் நிலவு – என்**

**இதய வானில் நினைவு".**

என்ற வரிகளை நீங்கள் குரலெடுத்துப் பாடிய போதுதான் என் கவிதையின் இனிமையை நானே உணர்ந்து கொண்டேன். உங்கள் குரல் இனிமையினால் என் கவிதை இசை ஓவியமாகிக் காற்றில் மிதந்ததே. அது கனவாய்ப் பழங்கதையாய்க் கரைந்து விடுமா என்ன?

**அந்தப் பாடல்**

நீங்கள் எனக்காகப் பாடிய இன்னொரு நிகழ்ச்சி நீங்கா நினைவாகி விட்டதே. நீங்கள் அந்நாளில் தங்கசாலை/மிண்ட் எனப்பட்ட வள்ளலார் நகர் அரசு அச்சகத்தில் பணியாற்றினீர்கள். ஓய்வெடுக்கவும், உடல்நலம் பெறவும் அந்நாளில் வயலும் ஏரியும் சூழ்ந்திருந்த வளமான எங்கள் கிராமமான வியாசர்பாடிக்கு வந்தீர்கள். சில நாள் தங்கினீர்கள். அதே தெருவில் இருந்த என் வீட்டிற்கும் வந்தீர்கள். சில நாள் தங்கினீர்கள். அதே தெருவில் இருந்த என் வீட்டிற்கும் வந்தீர்கள்.

ஒருமுறை 'கவிஞர் நெஞ்சில் காமராஜ்' - என்ற நூலைத் தொகுத்த கவிஞர் பாண்டியனுடன் வந்தீர்கள். இன்னொரு முறை உவமைக் கவிஞர் சுரதாவுடன் வந்த போது மொட்டைமாடியில், இளமையான மாலை நேரத்தை இனிமையாக்கிக் கொண்டிருந்தோம். அப்பொழுது நீங்கள் எழுதிய

**"முத்தமிட்டு அனுப்பி வைத்தாள் என்னை - அன்பு**

**முத்திரையைப் பதித்தே அன்னை"**

என்ற பாடலை மெல்லிய குரலில் பாடினீர்கள். நேரம் போனதே தெரியவில்லை. கால் விரல்களுக்கிடையில் பொடி டப்பியைச் செருகி வைத்துக் கொண்டு உவமைக் கவிஞர் தாளமிட்டு உங்கள் பாட்டை ரசித்தார். இன்றும் முகம் மறையும் அந்தி மாலைப் பொழுதும், கருநீலமாகிவரும் வானமும் என் நெஞ்சை நிறைக்கும் வேளைகளில் அந்தப் பாடல் என் அகச்செவியில் ஒலிக்கிறதே. அந்த இசை அமர கீதம்தானே!

தாய் தன் மகனை வழியனுப்பி வைத்ததை இவ்வளவு இனிமையாக எந்தக் கவிஞனும் எழுதி, இசையமைத்துப் பாடியதில்லை.

"தமிழர்க்கே ஓயாது தொண்டு செய் என்றாள். தலைமுறைத் தமிழ் மான்னம் உன் கையில் என்றாள்" என நீங்கள் தொடர்ந்து பாடிய உணர்ச்சி மயமான வரிகளை இங்கே எழுதும் போது என் கண்களை நீர் மறைக்கிறதே. உங்கள் அமர கீதத்திற்கு வெள்ளி விழா காணிக்கை அக் கண்ணீர் முத்துகளே!

கைதேர்ந்த திரைப்பட இயக்குநர் ஒருவர் உங்கள் பாடலைப் படமெடுத்தால் அன்னையின் அருகில் காமிராவை வைத்து நீங்கள் தூரத்தில் போவதைக் காட்டுவார். அதே கோணத்தில் நீங்கள் கவிபாடினீர்களே.

போகின்ற என் நடையால் பூரிப்புக் கொண்டாள் பொலிவு முகத்தில் கண்ணீர் தேக்கி நின்றாள். ஆனால்

**போய்வா என் கண்ணே போய் வா என்றாள்,**

**புகழுடனே திரும்பி வா இங்கே என்றாள்.**

என்று நீங்களே இசைவடிவாக்கிய அன்னையின் கட்டளையை மட்டும் இன்றுவரை நிறைவேற்றியதாகத் தெரியவில்லையே! நானோ கோவை கண்ணம்பாளையத்திற்கு அருகிலிருந்து இம்மடலை எழுதிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் 500 கிலோ மீட்டருக்கு அப்பாலிருந்து

**"உலகமென்னும் சிறையினிலே**

**உலவுகின்ற பைத்தியம் நாம்**

**விலங்கிடாத கைதிகள் நாம் - உண்மை**

**விளங்கிடாத கைதிகள் நாம்"**

எனப் பாடிக் கொண்டிருக்கிறீர்கள். தார்ப்பாலையின் விலங்கு களைத் தகர்த்துக் கொண்டு வரமுடியவில்லையோ? 'நான்' என்று

போடாமல் 'நாம்' என்று போட்டதேன் என்பது விளங்கவில்லை எனக் கேட்க நினைத்தால், அதற்கு விடையாகத் தான் "விளங்கிடாத கைதிகள் நாம்" என்று பாடிவிட்டீர்களே!

**எல்லோர்க்கும் கவிதை**

வானும், கடலும், தென்றலும் கட்டுப்பாடின்றி இருக்கும் போது, அவற்றுள் மூழ்கும் கவிஞர் கட்டுப்பாட்டை விரும்புவாரா என்ன? 25 ஆண்டுகளுக்கு முன் மேடைக் கவியரங்குகள் சிலவே. அவற்றில் நீங்கள் பங்கு கொண்டு சிறப்பாகக் கவி பாடியதைக் கேட்டு நான் மகிழ்ந் திருக்கிறேன். ஆனால் நீங்கள் மகிழவில்லை. புகழ்பெற்ற கவிஞர் களையே மேடைக்கு அழைக்கிறார்கள், மேடையேறினால் தானே புகழ் பெற முடியும் என்றெல்லாம் என்னைப் போன்ற இளங்கவிஞர் பலர் ஏங்கினர். கல்யாணமானால் பைத்தியம் தெளியும்; பைத்தியம் தெளிந் தால் தான் கல்யாணமாகும் என்பார்களே அதே போலிருந்தது எங்கள் நிலை. எங்கள் ஏக்கத்தை நீங்கள் நன்றாகப் புரிந்து கொண்டீர்கள். பிறர் தயவில், பிறர் முடிவு செய்து கொடுக்கும் தலைப்புக்கு, நான்கு சுவர் களுக்குள் நின்று கொண்டு கவி பாடுவதை நீங்களும் விரும்பவில்லை. கவிஞர்களுக்குச் சமவாய்ப்புத் தருவதுதானே சமதருமம்.

"எல்லோர்க்கும் கவிதை, எல்லோரும் கவிஞர் எல்லோரும் ஓர் நிறை" என்ற நோக்கத்தை நிறைவேற்றத்தானே நீங்கள் கடற்கரைக் கவியரங்கம், தொடங்கினீர்கள். முதல் கவியரங்கம் பாவேந்தர் சிலையின் பின்புறம் நடந்தது இன்றும் நினைவில் இருக்கிறது. கவிஞர் குமாபா. தொடங்கி வைத்த கவியரங்கம் அமுதைப் பொழியும் நிலவாகப் பல இடங்களில் ஒளி வீசுகிறதே. எண்ணாயிரம் அடி உயரத் தில் மலைச்சாரல் கவியரங்கம், ஆயிரம் கிலோ மீட்டருக்கு அப்பால் அரபுக்கடல் தாலாட்டும் பம்பாய்ப் பூங்காக் கவியரங்கம், எழில் கொஞ்சும் ஏல மலைக்கவியரங்கம், மாம்பழம் போல் இனிக்கும் சேலம் சோலைக் கவியரங்கம், பகுத்தறிவுப் பகலவன் போல் ஒளி வீசும் ஈரோட்டுப் பூங்காக் கவியரங்கம் இப்படிப் பல கவியரங்குகள் பிறந்து உங்களைத் திறந்த வெளிக் கவியரங்குகளின் தந்தையாக்கி விட்டனவே.

**கவிதை வயல்**

பாவேந்தரின் சென்னைக் குயில் அவருக்குப் பின் சிறகடித்துப் பறந்து விட்டது. அவரது பரம்பரைக் கவிஞர்கள் வழி என்ன என்று நீங்கள் சிந்திப்பதோடு மட்டும் நின்று விடவில்லை. செயலாற்றவும் தொடங்கிவிட்டீர்கள். வேளாளர் தெருவே கவிதை வயலாகிவிட்டதே. அங்கே பூத்துக் களுக்கெனச் சிரித்த முல்லைகளை அங்கு தானே நீங்கள் முல்லைச்சரமாகத் தொடங்கினீர்கள். 100 வேளாளர் தெரு வீடும், நூற்றக்கணக்கான கவிஞர்களுக்கும் கவிச்சத்திரதம் தானே! பெரியார் காட்டிய வழியில் நீங்கள் வாங்கி வைத்திருந்த கத்தியினை முல்லைச் சரத்தினை அஞ்சலில் அனுப்பத் தேவையான சுற்றுத்தாள்களை வெட்டப் பயன்படுத்திய முதல் ஆளும், கடைசி ஆளும் நானாகத்தான் இருக்க வேண்டும். பெரியாரின் நாத்திக வாதத்தில் உங்களுக்கு நம்பிக்கை இருந்த போதிலும், எல்லாத் தரப்புப் பெரியவர்களையும் மதிக்க வேண்டும் என்ற நம்பிக்கை உங்களுக்கு அன்றும் உண்டு;

இன்றும் இருக்கிறது. அதனால் தானே

**தனித்திரு!**

**விழித்திரு!**

**பசித்திரு!**

என்ற வள்ளலார் வழியை நீங்கள் இன்றும் கடைப்பிடித்து வருகிறீர்கள்.

**"இன்றும் தனியன் நான்!**

**என்றும் தனியன் நான்!**

**எப்போதும் தனியன் நான்!**

நீங்கள் கூறுவது தனித்தன்மையைக் குறிக்க என்றுதான் நினைக் கின்றேன். இல்லாவிட்டால் நாள் தோறும் ஏராளமான கவிஞர்கள், தாராளமாக உங்களைச் சந்தித்துப் பேசி மகிழ்ந்து செல்கிறார்களே அதனை எப்படி விளக்குவது?

எவனையும் நம்பாதே! என்னையும் சேர்த்தே எழுதுகின்றேன் - நான் என்று கவி நடையில் எழுதுவீர்கள். ஆனால் 'முல்லைச்சரம்' - முதல் ஏட்டிலேயே

"உங்கள் மேலான நம்பிக்கைக்கு உரியவனாக என்றும் இருக்க வேண்டும் என்ற ஒருவித பயம் என் நெஞ்சில் ஊறிக்கிடப்பதால் நீங்கள் என்னை நம்பலாம். என் மூச்சிருக்கும் வரை முல்லைச்சரம் மணத்தை நீங்கள் நுகரலாம்" - என்று உரைநடையில் எழுதினீர்கள். எதை நம்புவது? நம்பினார் கெடுவதில்லை! இது நான்கு மறைத் தீர்ப்பு.

**பாட்டரங்கும் பூதப்பாண்டியனும்**

கடற்கரைக் கவியரங்குகளில் நீங்கள் அப்பொழுதெல்லாம் நல்ல இசைப் பாடல்களைப் பாடுவீர்கள். உங்களைப் பின்பற்றிக் கோழிக் குளம் தாணுகோபால், மதுரை நாவரசன் என்று பலர் பாடத் தொடங்கி னார்கள். கவிதையைப் பாடுவது பழைய மரபு. இனிய மரபு. கவிதையைப் படிப்பது என்பது குரல் வளங்குறைந்தோர் கண்ட புது மரபு, பழைய மரபைப் போற்றும் முறையில் பாட்டரங்கம்' என்ற புதிய அரங்கினை ஏற்படுத்தினீர்களே. ஹார்மோனியம், தபேலா முதலான கருவிகளைப் பக்கவாத்தியமாக வைத்துக் கொண்டு பட்டி தொட்டி களிலெல்லாம் சென்று பாடினீர்களே! அரக்கோணம், திருவள்ளூர், கடம்பத்தூர் - என்றெல்லாம் உங்களையும் என்னையும் அழைத்துச் சென்ற பூதப்பாண்டியன் போன்ற கள்ளம் கபடில்லா நெஞ்சங்களை இப்பொழுது நினைத்தாலும் நெஞ்சம் 'குப்' பென்று அடைக்கிறதே. எப்படியெல்லாம் பூதப்பாண்டியன் கிராமம் தோறும் சென்று சுற்றுலாக் கவியரங்கம் நடத்தி மகிழ்ந்தார். பூதப்பாண்டியன் - பெரும் பாண்டியன் என்றெல்லாம் பெயர்கள் சூட்டப்பட்ட கதைகளைச் சொல்லி நீங்களும் மகிழ்வீர்களே!

விபூதி, குங்குமத்துடன் புன்னகை தவழும் முகத்துடன் வந்து வெண்பா விருந்துக்கு வந்து குவியும் பாடல்களைத் திருத்திக் கொடுத்த

தேவிதாசனை மறக்க முடியுமா? 'முல்லைச்சரம்' கவிதை இலக்கிய ஏடாக இருந்தாலும், நல்ல சிறுகதையொன்று போட வேண்டும் என்று நீங்கள் அடிக்கடி சொல்வீர்கள். நீங்கள் நினைத்தபடி கிராமிய மணமும் சமுதாய மணமும் கொண்ட சிறுகதைகளை எழுதிய சோம. மகாதேவன் வரலாறாக அல்லவோ மாறிவிட்டார். "கவிஞர் பூதப் பாண்டியன் மறை வுக்குப் பிறகு நம் கவிதை இயக்கத்துக்கு ஏற்பட்ட பேரிழப்பு கவிஞர் சுழல் துப்பாக்கியின் மறைவாகும்" என்று தலையங் கத்திலேயே நீங்கள் ஒருமுறை எழுதி வருந்தினீர்களே. கடற்கரைக் கவியரங்கப் பெரியவர் என்று நீங்கள் போற்றிய அம் முதியவர் சோவியத் நாடு சென்று திரும்பியபோது, அங்கெல்லாம் நம் கடற்கரைக் கவியரங்கம் பற்றி எடுத்துரைத்தார் என நீங்கள் மகிழ்ந் தீர்களே! இருட்டில் நடக்கும் கவியரங்கிற்கு உயர்ந்த டார்ச் லைட் வாங்கிக் கொடுத்த குழந்தை மனம் படைத்த கோமான் அழ. வள்ளியப் பாவுக்கு மன்றத்தின் சார்பில் கடற்கரைக் கவியரங்கில் பிறந்த நாள் சிறப்போடு வெளியிட்டு மகிழ்ந்தீர்களே! இவை எல்லாவற்றுக்கும் காட்சியாக அல்லவோ இந்த வெள்ளி விழா!

**எனக்கு வந்த பயம்**

பிறகு, பாடிய வழக்கம் மறந்து, பேசும் பழக்கத்தை நீங்கள் மேற்கொண்டீர்கள். "என் கவிதைகளை என் தோழர்களே சரியாகப் படிப்பதில்லை - வான்முகில் போன்ற ஒரு சில தோழர்கள் தவிர" என்று ஒரு முறை சொல்லி விட்டீர்கள். எனக்கு பயம் வந்து விட்டது. வீடு திரும்பியதும் உங்கள் கவிதைகளை எடுத்து மனப்பாடம் செய்யத் தொடங்கி விட்டேன். அடுத்தமுறை பார்க்கும் போது "அங்கே என் கவிதைகளில் ஏதேனும் நான்கினை அடிபிறழாமல் சொல்லுங்கள்!" என்று நீங்கள் என்னை நான்கு பேர் முன்னால் கேட்டு விடுவீர்களோ என்ற பயம் என் மனத்தில் இன்றும் உண்டு. அவனவன் வீட்டு நம்பரே மறந்து விடுகிறது கவிஞரே! காலையில் எத்தனை இட்டிலி சாப் பிட்டீர்கள் என்பதைச் சட்டெனச் சொல்லுங்கள் பார்க்கலாம்! "நாலு" - என்று சொல்லி ஏமாற்றப் பார்க்காதீர்கள். வீட்டில் இன்று தோசை சுட்டிருப்பார்கள்! சகோதரியைக் கேட்டால் அல்லவா தெரியும். அவர்கள் அந்த நாளில் உங்களுடன் கடற்கரைக் கவியரங்குக்கு வருவார் கள்! என் துணைவியும் வருவார்கள். திருமதி சம்பூர்ணத்தம்மாள் எனும் மூதாட்டி வருவார்கள். அவர்கள் கவிதையும் பாடியதாக நினைவு. உடனே எல்லோரும் குடும்பத்துடன் கடற்கரைக் கவியரங்கத்துக்கு வர வேண்டும் என்று கூட நீங்கள் வேண்டுகோள் விடுத்ததுண்டு. அப் போது பலர் குடும்பத்தை அழைத்து வர முடியாமைக்கு என்ன காரணங்கள் இருந்தன என்பதை நீங்கள் இப்போது உணர்ந்திருப் பீர்கள். சரி! நீங்கள்தான் இத்தனை ஆண்டுகளாகக் கடற்கரைக்குச் செல்கிறீர்களே எத்தனை முறை கடலில் நின்று கால், வேட்டி நனைய இயற்கையழகை ரசித்து இருக்கிறீர்கள்.

**"கடலோரம் போயிருந்தும்**

**கால் நனைக்க மறந்தாயா?"**

என்று நான் முல்லைச்சரத்தில் எழுதினேன். அத்துடன் என் படத்தையும் போட்டு வாழ்க்கைக் குறிப்பையும் நீங்கள் வெளியிட்டிருந்தீர்கள். கவிஞர் என்ற முத்திரை குத்திவிட்டீர்கள். வேறு வழியில்லாமல் கவிதை எழுதிக் கொண்டிருக்கிறேன். நீங்களும் வெளியிட்டுக கொண்டிருக்கிறீர்கள்.

**முடியுமா?**

இதெல்லாம் ஞாபகமிருக்கறதே! என் கவிதைகள் ஞாபக மில்லையா? என்று நீங்கள் கேட்பது புரிகிறது. அச்சு நூல்கள் பரவி விட்டபின் தசாவதானி இராமையா பிள்ளை போல் ஒரு சிலர் தான் நினைவுக் கலையை வளர்த்து வருகின்றனர். இருந்தாலும் உங்கள் இசைப்பாடல்கள் நினைவில் நீந்துகின்றன.

**இதோ என் விருப்பம்:**

**'முத்தமிட்டு அனுப்பி வைத்தாள்'**

**புளி ஏப்பக் காரனுக்கும்'**

**'முடிவொன்று வரப்போகுது'**

**'குணங்களால் மனிதரைத் தரம் பிரிக்கின்றேன்.**

**'நம்பமுடியவில்லை'**

**'அழுக்குச் சட்டைக்கும்'**

மேற்குறித்த உங்கள் பாடல்களை நீங்களே பாடி ஒரு கேசட் வெளியிட முடியுமா? புத்தகங்களை விடக் கேசட்டுகள் விரைவில் விற்பனையாகிவிடுகின்றன. வெள்ளி விழாவில் இது ஒரு உருப்படியான பணியாக இருக்கும்!

நீங்கள் மட்டுமல்ல, முல்லைச்சரமும் பாவேந்தர் வழியிலும், குயிலின் பாணியிலும் நடப்பது அனைவருக்கும் தெரியுமே. 'குயிலில்' அச்சுப் பிழைகள் ஏராளமாக, ஒரு முறை வந்த போது பாவேந்தர் தலையங்கத்திலே எழுதிக் காட்டினார்.

"குயிலில் பிழைகள் ஏராளம். அதற்குக் காரணம் இன்னும் அலுவலி னரை வேண்டிய அளவு அமைக்காததே. இப்போது அலுவல் பார்த்து வருகின்றவர்கள் எத்தனை பேர் என்பதையும் சொல்லி விட எண்ணு கிறோம். நான் ஒருவன் - பொன்னடி ஒருவர்.

**வெள்ளை வேட்டித் துறவி**

இப்பொழுதும் முல்லைச்சரத்தில் பிழை மிகுதியாகம் போது "இப்போது எனக்கு நானே உதவியாளனாக இருக்கிறேன் - வேறு யாருக்கும் அல்ல!" என்று பதில் கூட எழுதி விடுகிறீர்களே! இத் தனைக்கும் பெரிய அச்சகங்களை வைத்து நடத்தியதால் அச்சுக் கோப்பாளரின் நிலை உங்களுக்கு நன்றாகவே தெரியும். அவர்களின் பரிதாப நிலை பற்றி

**"எழுத்தடுக்கிக் கண்சோரக் கைகள் சோர**

**இன் கருத்தைப் புத்தமாய்ப் படைத்தளிக்கும்**

**பழுத்த ஓர் அச்சுக்கோப்பாளன் போலப்**

**பண்பாடும் பகுத்தறிவும் ஒருங்கிணைந்து**

**தழைத்தவனைக் காதலியாய்த் துணைவியாகத்**

**தேர்ந்தெடுத்து நான் ஏற்பேன்! இல்லையென்றால்**

**கழுத்து முதல் கால் வரையில் காவி கட்டிக்**

**காலமெல்லாம் உலகினர்க்காய் உழைத்திருப்பேன்"**

*என்று பனிமலரில் அருமையாக எழுதி இருந்தீர்களே! சமுதாயத்தில் கவனிக்கப்படாமல் இருப்பவர்களான அச்சுக் கோப்பாளர்களைச் சிறப்பான உவமையாக்கிக் கவிதைக் கல்வெட்டில் புதைத்து விட்டீர்களே! வாழ்க உங்கள் கவித்திறன்!*

*"காவி கட்டி" - என்றீர்கள். இப்போது மட்டுமென்ன? வெள்ளை வேட்டித் துறவியாகத் தமிழுக்கு உழைத்துக் கொண்டு தானே இருக்கிறீர்கள்?*

*கடிதம் நீண்டு விட்டது. இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.* **'தார்ப் பாலையும் குறிஞ்சி மலர்களும்'** *என்ற தலைப்பில் கட்டுரை எழுதலாம் என்று தான் திட்டமிட்டேன். அது மடலாக முடிந்து விட்டது. குறிஞ்சி மலர் பன்னிரண்டு ஆண்டுகளுக்கொரு முறை பூக்கும். இருபத்தைந் தாண்டுகள் முடிந்ததால் ஒன்றுக்கு மேற்பட்ட மலர்கள்!*

*மற்ற குறிஞ்சி மலர் யார்?*

**பி.கு.** *உடல் நலம் காத்திடுங்கள். அடுத்த முறை நான் சென்னைவரும் போது, சாந்தோமில் உள்ள ஓமியோபதி மருத்துவரிடம் செல்வோம். ஒவ்வும் ஓமியோபதியும் உங்கள் குடல் புண்ணைக் குணப்படுத்தும்.*

*உடல் நலம் காத்திடுக*

*அன்பன்,*

**வான்முகில்**

*53, நாராயண தேவர் தெரு,*
*இராமநாதபுரம்,*
*கோவை - 45.*
*(பழைய முகவரி)*



# கவிதை உலகில் ஓர் விடிவெள்ளி..!

## பேரெழுத்தாளர் நாரண துரைக்கண்ணன்

நீலத்திரைக் கடலோரம் வெண்மணல் பரப்பு. குளிச்சியாக வீசுந்தென்றல் காற்று. வானத்தில் தகத்தகாயமாகப் பொன்னிறத்தைப் பரப்பியவாறு சூரியன் மேற்கடலை நோக்கி விரைந்து செல்லும் இனிய மாலை நேரம்.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் தேர்வு மண்டபத்துக்கு எதிரே, வலக்கரத்தில் திருக்குறள் சுவடியை வைத்துக் கொண்டு நிற்கும், தெய்வப்புலவர் திருவள்ளுவர் திருவுருவச் சிலைக்குப் பின்புறத்தில் காதலர் பாதையை ஒட்டினாற்போல உள்ள மணற் பரப்பில் பெரும்பாலும் இளைஞர்கள் ஓரிருவராக வந்து வட்ட வடிவமாக அமர்கின்றனர்.

ஆறுமணி நெருங்கிக் கொண்டிருக்கிறது. நடுத்தர வயது. ஆறடிக்கு உட்பட்ட உயரம், ஒல்லியான உடம்பு, கோதுமை நிறம், அகன்ற நெற்றி, எடுப்பான நாசி, அறிவுச் சுடர்விடும் கண்கள், அவற்றின் கூர்மையை வெளிக்காட்டாதவாறு மறைக்கும் தங்கப் பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி (முன்பு கவிஞர் அணிந்திருந்தது) அணிந்துள்ள மனிதர் ஒருவர் தன் தோழர்களுடன் வந்து, வட்டமிட்டு உட்கார்ந்திருக்கும் இளைஞர்களை ஒரு சுற்று நோக்கிவிட்டு மேட்டுப் பகுதியில் அமர்கிறார்.

சில விநாடிக்கெல்லாம் தோழர்கள் இருவர் பறக்கும் நிலையிலுள்ள வெண்புறா உருவம் பொறிக்கப்பட்ட சின்னங் கொண்ட பாவட்டாவை எல்லோரும் பார்க்க முகப்பில் நாட்டுகின்றனர்.

தமிழ்க் கவிஞர் மன்றம் திங்கள் தோறும் நடத்துங் கவியரங்கக் கூட்டம் என்று உடனே நமக்குத் தெரிகிறது.

ஆறு மணியானதும் அவ்வரங்கம் களை கட்டிவிடுகிறது. வந்திருப்பவர்களில் பிரமுகர் ஒருவர் தலைமைதாங்கி, முன்னுரை நிகழ்த்தி கவிஞர்களை ஒவ்வொருவராகப் பாடச் சொல்கிறார்.

இது போன்று சென்னைக் கடற்கரைக் கவியரங்கம் பதின்மூன்று ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. பதிமூன்றாம் ஆண்டு தொடங்கி ஜூன் மாதத்துடன் நூற்று ஐம்பத்து ஏழாம் கவியரங்கம் நடக்கிறது என்பதை நினைவு கூரும்பொழுது செயல்வீரர்களுக்கு வியப்பே மேலிடும்.

இக்கவியரங்கத்தில் யாரும் எப்பொருள் பற்றியும் கவிதை பாடலாம். இளைய கவிஞர், முதிய கவிஞர் என்று வித்தியாசம் கிடையாது. சாதி, சமய, கட்சி, அரசியல் விஷயங்களுக்கு இங்கு இடம் இல்லை.

இரவி நுழையாத இடங்களிலும் கவி நுழைவான் என்பார்கள். மேற்றிசை ஞாயிறுடன் போட்டி போட்டுக் கொண்டு இங்கு கூடுங்கவிஞர்கள், முற்போக்கான கவிஞர் வட்டத்தை நோக்கித் தங்கள் கற்பனைத் திறம்மிக்க கவிதைகள் மூலம் விரைந்து முன்னேறுகின்றனர்.

வானொலி, தொலைக்காட்சி மற்றும் பல அமைப்புக்கள் வாயிலாக, தமிழக்கவிஞர் மன்றம் புரிந்துவரும் சாதனைகள் சென்னை நகரத்துடன் நில்லாமல் தமிழகம் முழுதும் புகழைப் பரப்பி வருகின்றன.

இத் தமிழ் கவிஞர் மன்றம் தொடங்குவதற்கு முன்பே, செங்கல்பட்டு மாவட்டத்தில் மாமதுர கவி முருகேச பாகவதரால் இது போன்ற கவியரங்க அமைப்பு ஒன்று என் போன்றவர்கள் துணையுடன் பூதப் பாண்டியனைச் செயலாளராகக் கொண்டு இயங்கி வந்தது. பின் அச் செங்கை கவிஞர் மன்றம் சென்னைத் தமிழ்க் கவிஞர் மன்றத்துடன் இணைந்து செயல்பட்டு வருகிறது. வரலாறு காணாத வகையில் இரண்டு தமிழ்க் கவிஞர் மாநாடுகளை நடத்தியதுடன் தொடர்ந்து கவியரங்கங்களை நடத்தி வருகிறது.

நீலகிரி, ஈரோடு, ஜோலார்பேட்டை, பம்பாய் முதலிய ஊர்களிலும் மாவட்டங்களிலும் கிளை மன்றங்கள் ஏற்படுத்தி தாய்ச் சங்கத்தின் பெருமையைப் பறை சாற்றி வருகின்றன. திருலோக சீத்தாராம், கலைவாணன், அ.வெ.ரா. கிருஷ்ணசாமி நடத்திவந்த கவி அமைப்பையும் தமிழ்க் கவிஞர் மன்றத்துடன் இணைத்துவிட்டனர்.

இவ்வளவு அரும் பெருஞ் சாதனைகளையெல்லாம் புரிந்து, அமைதியாகக் கவிஞர்களின் சேவைக்கும், உயர்வுக்குமாகப் பாடுபட்டு வரும் அற்புத மனிதர் யார்? என்று எண்ணுகிறீர்கள்? நம் அன்பிற்கும் மதிப்புக்கும் உரியவராக இருக்கும் கவிஞர் பொன்னடியான் தான்.

இதற்குமுன் எத்தனையோ கவிதை அமைப்புக்கள் கவிஞர்கள் பலரால் தோற்றுவிக்கப்பட்டன. சில காலம் நடந்தன. ஆனால் எவையும் நீடித்து நடக்கவில்லை.

பாவேந்தர் 'பாண்டியன் பரிசு' என்ற காவியத்தைப் படமாக்கச் சென்னை மாநகரில் தங்கியிருந்த சமயம். ஏற்கனவே நடந்து நின்றுபோயிருந்த 'குயில்' இதழை மீண்டும் புரட்சிக் கவிஞர் தொடங்கி நடத்தி வந்த நேரம், 'குயில்' இதழினைக் கண்டு, படித்து, எழுதி ஊக்கம்

பெற்ற கவிஞர்களை உற்சாகப்படுத்தி முன்னேற்றமுறவைக்கும் நன்னோக்ககோடு 1962 ஏப்ரல் மாத மத்தியில் அனைத்து உலகத்தமிழ்க் கவிஞர் மன்றம் ஒன்றை பாவேந்தர் அவர்கள் தொடங்கி நடத்தி வந்தார்கள்.

இத் தருணத்தில் கவிஞர் பொன்னடியான் புரட்சிக் கவிஞருக்கு உறுதுணையாக இருந்து அவருக்கான எல்லாக் காரியங்களையும் கருத்துடன் கவனித்து வந்தார்.

அதற்கு முன், பொன்னடியான் தமிழ் மறவர் புலவர் பொன்னம் பலனார் மாணவராக இருந்து படிப்பறிவுடன் நற்பண்புகளையும் பெற்றிருந்ததால், பாவேந்தரின் பேரன்பைப் பெறும் முறையில் அவருக்குரிய குற்றேவல்களையெல்லாம் புரிந்து இங்கிதமாகப் பழகி வந்தார்.

தமிழ் மறவர் பகுத்தறிவுப் பாவலர் பொன்னம்பலனார் பாவேந்தர்பால் பேரன்பு கொண்டு பழகி வந்தார். ஆதலால், தம் மாணவர் பொன்னடியானுக்கும் புரட்சிக் கவிஞருடன் எப்படிப் பழகி பணிபுரிந்து வரவேண்டுமென்று சொல்லியிருக்க வேண்டும்.

பாவேந்தர் கவிஞர் மன்றத்தைத் தொடங்குவதற்கு முன்பே, நானும் கவிஞர் எஸ்.டி. சுந்தரமும், பாரததேவி அருணாசலம் முதலியவர்களும் அவரை அடிக்கடி சந்தித்து அளவளாவி மகிழ்ந்ததுண்டு.

தம் வழிகாட்டியான சுப்பிரமணிய பாரதியாரின் வரலாற்றை முதலில் நாடகமாக்கவும் பிறகு திரைப்படமாக்கவும் வேண்டும் என்ற எண்ணம் பாவேந்தருக்கு உண்டாகி அம்முயற்சியில் அவர் மும்முரமாக ஈடுபடத் தொடங்கிய காலத்தில் என்னையும் எஸ்டி. சுந்தரத்தையும் வரச் சொல்லி அது பற்றிப் பேசுவதுண்டு; கருத்துப் பரிமாற்றம செய்து கொள்வதுண்டு. அச்சமயங்களிலெல்லாம் நண்பர் பொன்னடியான் நல்லியல்புகளையும் குணத்தையும், அடக்கத்தையும் கண்டு நாங்கள் மகிழ்ந்திருக்கிறோம். பாராட்டியிருக்கிறோம்.

பாவேந்தர் புதுவையில் இருந்தபோதும், சென்னை வந்து போய்க் கொண்டிருந்த போதும் பல துறைகளைச் சேர்ந்தவர்களும், அவருடன் நெருங்கிப் பழகியிருக்கின்றனர். ஆனால் அவருக்கு உண்மையில் பயன்பட்டவர்கள், உதவிபுரிந்தவர்கள் வெகு சிலரேயாவர்.

புரட்சிக்கவிஞருக்கு மாணவர்கள் பலருண்டு. அவரிடம் பாப்புனையப் பயிற்சி பெற்றவர்கள் பலருண்டு. புதுவையிலேயே புலவர் மாணிக்கம், புலவர் மு.தா. வேலாயுதம், வாணிதாசன், தமிழ்வேள் என்று பலரைச் சொல்லிக்கொண்டே போகலாம். ஆனால் பாவேந்தருக்கு நேர்வாரிசு என மதிக்கப்பட்டவர். வாணிதாசன் அவர்கள் சிறந்த கவிஞர்களில் ஒருவர்.

தமிழ் ஒளி, சுரதா, நாவரசு போன்றவர்கள் பாவேந்தர் பெருமைப் படத்தக்க கவிஞர்களாவர். கவிஞர் நாவரசின்பால் அவருக்குத் தனியன்பேயுண்டு. எனக்குத் தெரிந்து நண்பர் நாவரசுக்கு அடுத்த படியாக நண்பர் பொன்னடியானிடம்தான் உண்மையாக அன்பு

வைத்திருந்தார். அவ்வளவு தூரம் தம் பணிவான தொண்டினால் பாவேந்தர் உள்ளத்தை நண்பர் பொன்னடியான் கவர்ந்திருந்தார்.

பாவேந்தரை நேரில் பார்க்காதவர்கள் கூட அவரை எங்களுக்கு நன்கு தெரியும். எங்கள் ஊருக்கு வந்து எங்கள் வீட்டில் சாப்பிட்டிருக்கிறார். நாங்கள் கவிபாடுவதற்குக் கற்றுக் கொடுத்தார்; அவரிடம் இவ்வளவு காலம் மாணவராயிருந்தோம் என்று சொல்லிக் கொண்டு திரிகின்றனர்.

பாவேந்தரிடம் ஏவலாளாகச் சிலகாலம் இருந்தவர்கள் கூட நாங்கள் அவருடைய மாணவர்கள் என்று பொய்கூறி பெருமை தேடிக் கொள்ள முனைகின்றனர்.

முருகு சுப்ரமணியமும், தமிழண்ணலும் சேர்ந்து புதுக்கோட்டை யிலும் பின் சென்னை நகரிலும் 'பொன்னி' என்ற பெயரில் இலக்கிய இதழொன்றை நடத்தி வந்தனர். அவர்கள் நான் ஆசிரியராக இருந்து நடத்தி வந்த "ஆனந்த போதினி" "பிரசண்டவிகடன்" இதழ்களை முன் மாதிரியாகக் கொண்டு பொன்னியை நடத்தலாயினர்.

1948-49-ஆம் ஆண்டுகளில் தமிழ்ப் படைப்பிலக்கிய வளர்ச்சியிலும் பாப்புனையும் ஆர்வத்திலும் ஒருவிதத் தேக்கமும் ஏற்பட்டது. கவிஞர்கள் எழுத்தாளர்களிடையே உற்சாகமும் ஊக்கமும் குறைந்திருந்தது.

கவிஞர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் ஊக்கம் ஊட்ட சில புதிய யுக்திகள் கையாள நான் முற்பட்டேன். யாப்பிலக்கண விதிகளில் பெரிதும் கருத்தைச் செலுத்தாது உள்ள உந்தலினால் உண்டாகும் எண்ணங்களையும் கற்பனைகளையும் சுதந்திரமாக சுய சிந்தனையோடு கையாண்டு கவிதைகளை இயற்றி அனுப்புங்கள் என்று நான் கூறி "நவீன கவிதை" எனற தலைப்பில் இளங்கவிஞர்கள் எழுதி அனுப்பும் பாக்களை முடிந்தவரை திருத்தி வெளியிட்டு வந்தேன்.

இம்முறையைப் பொன்னி ஆசிரியரும் முன் மாதிரியாகக் கொண்டு "பாரதிதாசன் பரம்பரை" என்ற தலைப்பில் பாவாணர் பலரின் பாக்களை வெளியிடலானார்.

எங்கள் பத்திரிக்கைகளில் கம்பதாசன், வாணிதாசன், தமிழ்ஒளி, தமிழவேள், குமா.பா. கண்ணதாசன், தமிழழகன், நாசி வரதராசன், மஹி, ரா.பு. தங்கராசன், தெசனி, சாலை இளந்திரையன், புத்தனேரி சுப்பிரமணியம் முதலியோர் அறிமுகமாகிப் புகழ் பெற்றிருப்பது போல் பொன்னியிலும் நாரா. நச்சியப்பன், மு. அண்ணாமலை முதலிய பலர் பாரதி தாசன் பரம்பரை என்று அறிமுகமாகி நல்ல கவிஞர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர்.

அதே சமயத்தில் புல்லுருவிகள் பலரும் பாரதிதாசன் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லிப் பம்மாத்துப் பண்ண ஆரம்பித்ததை இங்கு குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை.

தமிழரின் தவக் குறைவினாலோ என்னவோ பாரதிதாசன் தம்

73-ஆவது வயதில் பிணிவாய்ப்பட்டு அமரத்துவம் அடைந்தார். அந்த இறுதிக் கட்டத்திலும் நண்பர் பொன்னடியான் பாவேந்தருடன் இருந்து கண் துஞ்சாது, பசிபாராது பணிவிடையெல்லாம் புரிந்து வந்தார் என்பதை அறிந்தவர்கள் யார் மறக்க முடியும்?

பாவேந்தருக்குப் பின் அகில உலக தமிழ்க் கவிஞர் மன்றம் தமிழகத்தளவில் நின்று பணிபுரியும் நோக்கோடு சென்னைத் தமிழ்க் கவிஞர் மன்றம் என்ற பெயருடன் உவமைக் கவிஞர் சுரதா தலைமையில் இயங்கி வந்தது. பொன்னடியான் செயலாளராக இருந்து தான் அதை நடத்தி வந்தார்.

அதைத் தொடர்ந்து தற்போது இயங்கி வரும் தமிழ்க் கவிஞர் மன்றந்தான் கவிஞர் பொன்னடியானின் முழுப் பொறுப்பில் வந்து மேற்குறித்த பெரிய சாதனைகளை எல்லாம் சாதித்து வருகிறது.

இளங்கவிஞர்களுக்கு இலக்கியப் புலமையையும் உண்டாக்க வேண்டும் என்ற நன்னோக்கத்தோடு கவிஞர் பொன்னடியான் தம் இல்லத்தில் பேரறிஞர்களைக் கொண்டு இலக்கிய இலக்கண வகுப்புகளை நடத்தி வருகின்றார்.

முதல் ஞாயிற்றுக்கிழமையில் கடற்கரைக் கவியரங்கம் நடத்துவது போல இரண்டாவது ஞாயிறு மாலை திறனாய்வுக் கூட்டத்தையும் இவர் நடத்தி வருகிறார்.

இதுவன்றி வளரும் கவிஞர்களை ஊக்குவிப்பதற்காக நண்பர் பொன்னடியான் முல்லைச்சரம் கவிதைத் திங்கள் இதழைப் பதினெட்டு ஆண்டுகளாகப் பெரும் பொருளாதார நெருக்கடிக்கிடையே நடத்தி வருகின்றார்.

கவிதை உலகில் ஒரு விடிவெள்ளி போல் உள்ள பொன்னடியானின் கவிதைப்பணிக்கு வெற்றிவிழா நடக்கும் இந்நேரத்தில் அவர் இப்பணியில் மேலும் ஊக்கத்தோடு ஈடுபட வேண்டுவதற்கான நல்ல சூழ்நிலைகளை நண்பர்களும் கவிஞர்களும் உண்டாக்க வேண்டுமென்று நான் உரிமையுடன் சகோதரர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

நல்ல இலட்சியத்துடன் உள்ள உறுதியுடன் கவிதைத் துறைக்கு அரும்பணி புரிந்து வரும் நண்பர் பொன்னடியானுக்கு வாழ்வில் எல்லா நலன்களும் நற்பேறுகளும் மென்மேலும் உண்டாக வேண்டுமென்று என் நல்வாழ்த்தை வழங்குகிறேன்.

(1985-ஆம் இலக்கியப்பணி வெற்றி விழா மலரில் இடம் பெற்ற கட்டுரை)



# ஒரு தோப்பை உருவாக்கியவர்...!

## பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார்

கவிஞர் பொன்னடியானுக்கும் எனக்கும் இருக்கின்ற மிக நெருக்கமான உறவுகளில் ஒன்று - நான் மதிக்கின்ற பெருந்தலைவர்களில் ஒருவர் பாவேந்தர் பாரதிதாசன். அவரோடு நெருக்கமாக வாழ்ந்தவர் பொன்னடியான். பொன்னடியான் தோன்றிய காலம் தமிழ் தேசியம் தோன்றய காலம்.

கவிதையை நான் நிறுத்திவிட்டு உரைநடைக்குத் திரும்பிய காலம் 1940 என்று சொல்லலாம். அதுவரை பல மொழிகளுக்கு உரிமைப் பட்டிந்த நான் உரை நடைக்குத் திரும்பிய பின் முழுவதும் தமிழுக்குரியவனாகி விட்டேன். அதுமுதல் 1952 வரை பாவேந்தரும் நானும் நெருங்கிய தொடர்பு கொண்டு வாழ்ந்து வந்தோம். பொன்னடியான் இளைஞராகும் வரைக்கும் பாவேந்தரும் நானும் நெருங்கி வாழ்ந்தோம். ஒரே அறையில் இருந்தோம். என் வீட்டிலும் பாரதிதாசன் பல மாதங்கள் தங்கியிருந்தார். இன்றைய பெருந்தலைவர்களை நான் அறிந்திருந்ததற்குக் காரணம் பாவேந்தர் என் வீட்டில் தங்கியிருந்ததால் தான். அவர்களிடம் தன்னைவிடப் பெரிதாக என்னைப் பாவேந்தர் அறிமுகம் செய்து வைப்பார்.

1960 லிருந்து பொன்னடியான் பாவேந்தரோடு நெருங்கி வாழ்ந்து கொண்டிருந்த போது நான் பாவேந்தரிடமிருந்து தொலை தூரத்திலிருந்தேன். அப்போது கூட அவர் உள்ளத்தில் நானும் என் உள்ளத்தில் அவரும் வாழ்ந்து கொண்டுதான் இருந்தோம். அப்போது எங்கள் இருவருக்கும் நல்லெண்ணத் தூதுவராக இருந்தவர் பொன்னடியான். அவருடைய கவிதை பாரதியார், பாரதிதாசன் வழியில் வந்தவை. பாரதியார் கடைப்பிடித்த கவிதை வழி சங்ககால மக்கள் மரபு, சித்தர்மரபு, பக்தி மரபு இவை மூன்றிற்கும் அப்பால் தொல்காப்பியத்திற்கு முற்பட்ட முத்தமிழ் மரபு!

உண்மையான தமிழ்ச் சமுதாய, தமிழ் இலக்கியக் காலம் எது வென்றால் வள்ளுவர் காலம் அல்ல; தொல்காப்பியர் காலமும் அல்ல! தொல்காப்பியத்திற்கும் முற்பட்ட காலத்தில் தான் தமிழ்ச் சமுதாயம் முழு வளர்ச்சி பெற்று விளங்கிய காலம். அத்தகைய தொல்காப்பியத் திற்கும் முற்பட்ட தமிழ் மரபையும் பாரதியார் கொண்டு வந்தார். தொல்காப்பியத்திற்கு முன்தோன்றிய தமிழ் இசை இலக்கியமும், நாடக இலக்கியமும் அழிந்து விட்டன. தொல்காப்பியத்திற்கு முற்பட்ட இசை இலக்கியம் அழிந்து 3000 ஆண்டு இடைவெளிக்குப் பின் புலவர்களை புரவலர்கள் மறந்து இருந்தாலும் மக்கள் மனத்தில் அடிநில ஊற்றாக விளங்கி வருவது பாரதி, பாரதிதாசன் பாடல்கள்தான்! 18,19-ஆம் நூற்றாண்டுக்கு முன் அரசியல், மக்கள் உணர்வுடன் எழுதப்பட்ட பாடல்கள் உலகில் எந்த மொழியிலும் கிடையாது. தமிழ் மொழியைத் தவிர! கலிங்கத்துப்பரணி, நந்திக்கலம்பகம், மூவருலா - இவை இதற்குச் சான்றாகும்! அவ்வழியைப் பின்பற்றி -

பாரதியும், பாரதிதாசனும் சென்ற உண்மையான தமிழ் மரபு வழியில் செல்கின்றவர் பொன்னடியான் அவர்கள்! பாரதிதாசனுடைய மாணாக்கர்கள் பலரின் வழிகள் பலவகையாக இருந்தாலும் இவற்றிலி ருந்து பொன்னடியான் கவிதைகள் வேறுபட்டவை. அவருடைய கவிதையின் பெரும் பகுதி தொழிலாளர், தொழிலாளர் நலம் இவற்றை அடிப்படையாகக் கொண்டவை. தொழிலாளரை மட்டும் அவர் பாடவில்லை. ஒரு தொழிலாளி கண் கொண்டு இயற்கையைப் பார்க் கின்றார். எல்லாவற்றையும் பார்க்கின்றார்! ஒரு தொழிலாளி நோக்கில் தொழிலாளி பாடிய முதல் தமிழ்க் கவிஞனாக விளங்குகிறார் பொன்னடியான்!

அவர் கவிதைகளில் மனித வாழ்க்கையில் எல்லாப் பிரச்சினையும் அடங்கி உள்ளன. கவிதையில் நகைச்சுவை அளவிற்கு மேல் இருந்தால் உரைநடையாகிவிடும். ஆனால் பொன்னடியான் கவிதைகள் அதிக நகைச்சுவை கலந்திருந்தும் இலக்கியக் கருத்துக் கட்டுப்பாட்டை மீற வில்லை. பாரதிதாசன் ஒரு தனி மரம் அல்ல! ஒரு பரம்பரையை உருவாக்கினார். ஆனால், பொன்னடியானோ ஒரு தோப்பையே உருவாக்கினார். இவரே பயிரிட்டு நீர்பாய்ச்சி வளர்த்தார். அது தமிழகத்தையும் தாண்டி வெளி நாடுகளிலும் வியாபித்துள்ளது. வரும் காலத்தில் இவ்வியக்கம் ஓர் உலக மகா இயக்கமாக வளர்ந்தால் வியப்படையமாட்டேன்.

பொன்னடியான் போல ஒரு கவிஞன் தமிழுக்கு அமைந்ததுபோல் இந்திக்கோ, வங்காளிக்கோ, தெலுங்குக்கோ அமையவில்லை.

('பொன்னடியான் கவிதைகள்' முதல் தொகுதி வெளியீட்டு விழாவில் ஒலிப்பதிவான நாடாவிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு பகுதி)

*1980-ம் ஆண்டு*

தமிழில் இறைவனே சிவபெருமானே பாடியதாக இரு பாடல்கள் உண்டு. சங்ககால இறையனார் பாடல் குறுந்தொகையில் இடம் பெற்றதாயினும், இறையனார் முத்திரையுடையதன்று. ஆனால், கி.பி

9-ஆம் நூற்றாண்டுப் பாடல் இறைவாக்காக, இறைமுத்திரையே யுடையது. அத்துடன் அது தமிழகத்தில் தமிழ் வடிவில் மட்டுமின்றி கன்னட நாட்டில் கன்னட மொழி வடிவிலும் நமக்குக் கிடைத்துள்ளது. அதில் சிவபெருமானே தேவார மூவராகிய தம் அடியார்கள் திறனை ஒப்புறழ்வு செய்து திறனாய்வு புரிந்துள்ளார்.

**தன்னடியான் சம்பந்தன்**

**தன்னைப் பாடினான்!**

**பொன்னடியான் சுந்தரன்**

**பொன்னைப் பாடினான்!**

**என்னடியான் என் அப்பன்**

**என்னைப் பாடினான்!**

மூவருள் நடுவராகிய பொன்னடியான் சுந்தரனின் பெயர் கொண்ட கவிஞர் பொன்னடியான் ஒரு சீரிய வகையில் மூவரின் மும்மைத்திறமும் ஒருங்கே கொண்ட முத்தமிழ் வித்தகராகியுள்ளார்.

கவிஞர் பொன்னடியான், புறப்பொன்னை, பணத்தைப் பாடவு மில்லை. இதுகாறும் அதன் அருளிலாப் பொருளுக்கு உரிமைப்பட்டது மில்லை. ஆனால், பொன்னை ஆக்கும் பொன்னினை பொருளை ஆக்கும் பொருளினை அவர் ஏராளமாகக் குவித்துள்ளார். அது தமிழர் வாழ்வைப் பொனனாக்க வல்லது. பொன்னாக்கி வருகிறது.

இந்த அகப்பொன் அவர் உள்ளத்தின் இலக்காகக் கொண்ட மாந்தரின் நேயம் கெழுமிய சமன்மை நெறியையே கவிஞர் பொன்னடி யான் தம் கவிதைப்பணியின் எல்லாக் கோணங்களிலுமிருந்து வகை வகையாகப் பாடியுள்ளார்கள். அது அவர் அகக்குறிக் கோளாகவும் வாழ்விலக்காகிய உண்மை இறைவடிவாகவும் விளங்குவதாதலால் அதனையே விதந்து விதந்து பாடிய கவிஞர் பொன்னடியானை நாம் பொன்னைப் பாடியவராக மட்டுமின்றி, தன்னைப் பாடியவராகவும் இறைமையைப் பாடியவராகவும் ஒருங்கே சொல்வது பொருந்து வதாகும்.

இறைவனே தன்னைப் பாடியவரையோ, தம்மைப் பாடியவரையோ எள்ளி நகையாடுவதன்றி மதிப்பதில்லை. தம் மாந்தநேய வடிவைப் பாடியவரைத்தான் மதிப்பார் என்பதைச் சம்மந்தப் பெருமான்,

**'பொக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு**

**நக்கு நிற்பவன் அவர் தமை நாடியே!**

என்று பாடியுள்ளார். கவிஞர் பொன்னடியானின் கலைப்பணி இறைவனின் மும்மை முத்தமிழ் வடிவே போன்ற அருமைப் பாடுடைய தாகும். அவர் தாமே கவிஞராக, கவிதையஞ்செல்வராகத் தமிழினத் துக்கு அரும் பெரும் பணிசெய்பவர். இதனை அவருடைய இயற்றமிழ் உருவ இறைப்பணி என்னலாம்.

கால் நூற்றாண்டாக, முல்லைச்சரம் என்ற கவிதை ஏட்டை நடத்தி வந்து தமிழ்க் கவிஞர்கள் பல்லோரை, தமிழ்க்கவியிளஞ்செல்வர் செல்வியர்களைக் கவிதைத் தொண்டில் ஈடுபடுத்தி, தமிழுலகில் ஒரு கவிதையுலகையே படைத்து வளர்த்து வருகிறார். இதனை அவருடைய இசைத்தமிழ் உருவ இறைப்பணி என்னல் தகும்.

தமிழ்ப் பாடல்களையும் பிற கவிஞர் பாடல்களையும் உலக மொழியாம் ஆங்கில மொழியாக்கம் செய்வதன் மூலம், தொடர்ந்து கடற்கரைக் கவியரங்கங்கள், மலைச்சாரல் கவியரங்கங்கள், ஆற்றோரக் கவியரங்கங்கள், பூம்பொழில் ஆகிய புதுமைப் பணியரங்கங்களைத் தமிழகத்தை மையமாகக் கொண்டு, ஈழத்தமிழகம், மராட்டியத் தமிழகம், கன்னடத் தமிழகம், வங்கத் தமிழகம் எனத் தமிழ்ப்பண்ப ளாவிய நாகரிக உலகெங்கும் பரவுவதன் மூலமும் கவிஞர் பொன்னடி யான் நாடு கடந்த, மொழி கடந்த, இறைமையின் எல்லையற்ற வடிவான பணியே செய்து வருகிறார் என்பது குறிப்பிடத்தக்கது. இதனை அவரது நாடகத் தமிழ் வடிவ, இறைப்பணி என்று போற்றல் தகும்.

எத்தனை இறைப்படிவங்களையோ இந்தியர் படைத்திருந்தாலும், தில்லைப் பொன்னம்பலத்து ஆடலரசன் படிமத்தையே இன்றைய நாகரிக உலகில் ஐந்து மாடங்களும் கண்கண்ட கலையழகுப் படிவ மாகப் போற்றுவது கண்கூடு. கவிஞர் பொன்னடியான் முத்திறத் தமிழ்ப் பணியின் இம்மூன்றாம் திறக் கலைத் தொண்டே அவர் இந்தியாவிலும் பண்புலகிலும் படைத்து உலவவிட்டிருக்கும் ஆடலரசப் படிமப்பணி என்னலாம்.

இயேசு பெருமான் திருக்குறுக்கைப்பாடேற்றல் கருணை வடிவிலும், புத்தர் பிரான் திருவீற்றிருக்கை அமைதி வடிவிலும், தில்லைப் பொன்னம்பலத்து ஆடலரசரின் திருவருள் நடம் ஆனந்த வடிவிலும் உலகுக்கு உணர்த்திய வாழ்க்கை மலர்ச்சித் தத்துவத்தை மாந்த இனநேயமார்ந்த சமன்மை நெறி வடிவில், எண் சுவை அல்லது ஒன்பான் சுவையும் ஒருங்கு வாய்ந்த ஒரு புதிய இயங்கு கலைப் படிவமாக கவிதையஞ் செம்மல் பொன்னடியான் கலைப்பணி நம் காலத் தமிழகத்திலும் இந்தியாவிலும், பண்புலகிலும் மிளிர்கின்ற தெனலாம்.

கவிதைகளின் எல்லாச் சுவைகளையும் தன்னுள் அடக்கி அவையனைத்தும் தானேயாகக் கொண்டது காதற் கவிதை. அதன் முழுநிறைத் தெய்வீக வடிவம் பெண்மை, அப்பெண்மையின் தாயினத்தின் பெருமையறியாத அரக்கரினங்களுக்குப் பெண்ணுரிமை, பெண்ணின் சமனிலை உரிமை, புதுமைப் பெண் ஆகிய கொடிகள் நாட்டிப்பாடும் பாரதிதாசனின் தமிழ் மரபில் வந்த தமிழ்க்கொழுந்து பொன்னடியான் கவிதை.

காதலருமையறியாத பண்டை உலகுக்கு முதன் முதலாகக் காதல் மண இலக்கென்னும் ஒளி விளக்கம் ஏந்திப் பண்பு பரப்பிய இனம். தமிழினம், உழவரினம் - தொழிலாளரினம், வாணிப இனம் ஆகிய

மூன்றின் தன் மதிப்பை உலக இலக்கியத்தில் முதன் முதல் எடுத்து விளக்கி வடுதலைக் கொடி ஏற்றிய பெருமையும் தமிழுக்குண்டு. பொதுவுடைமை இயக்கத் தந்தையர்கள்-இதனைக் கண்டு வியந்து போற்றியுள்ளனர். உலக விடுதலைக்கு உலகில் முதன் முதல் பாடல் கொடியேற்றிய கவிஞர் பாரதி வழியில் நின்று, உலகப் பெண்டிர் விடுதலை, உலகத் தொழிலாளர் விடுதலை ஆகியவற்றைத் தலை நிமிர்ந்து நின்றுபாடும் ஓர் உலக வானம்பாடியாகக் கவிஞர் பொன்னடியான் விளங்குகிறார்.

வாழ்க! வளர்க! வளமார்ந்திடுக கவிஞர் பொன்னடியான் கவிதைத் திருப்பணி!

*(பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார் அளித்த வாழ்த்து)*

*(இலக்கியப்பணி வெள்ளிவிழா மலரில் 1985)*



**வி.ஜி.பி. மதநல்லிணக்க விழாவில் கவிஞர் பாராட்டப் பெறுகிறார்.**

# நம்மண்ணை இலக்கியத் தூதர்...!

## அன்பு நூலகம் பி.ராமரத்தினம்

*1961*-ஆம் ஆண்டு ஒரு நாள், அப்பொழுது நான் ஒரு காலை நாளிதழில் தலைமைப் பொறுப்பில் இருந்தேன். பாவேந்தர் பாரதி தாசன் தான் வந்தார். அவருக்கே உரித்தான சிவப்புச் சால்வை போர்த்தி, கம்பீர நடையுடன் வந்தவருக்குப் பின்னால் ஒரு ஒல்லியான இளைஞரும் வந்தார். எல்லை இல்லாத் திகைப்பும் மகிழ்ச்சியும் அடைந்தேன். ஏனெனில் நானே அவரைச் சந்தித்து, என் உள்ளக் கிடக்கையை வெளியிட்டு, என் கோரிக்கைக்கு அவர் ஒப்புதலைப் பெற வேண்டும் என்று திட்டமிட்டிருந்தேன். அதை எளிதாக்கியது போல் அவரே நேரில் வந்தது பெரும் பேறல்லவா? பத்திரிகையில் உலகத் தமிழ்க் கவிஞர் மன்றம் தொடக்கம் பற்றிய செய்தி ஒன்று வெளிவர வேண்டும் என்று அதற்கான நக்லையும் கொடுத்தார். அதற்கு ஆவன செய்துவிட்டு நானே ஆரம்பித்தேன்.

"நான் திருக்குறளைப் படித்துக் கொண்டிருக்கிறேன். முப்பாலுக்கும், திருப்பனந்தாள் காசி மடத்தினர் வெளியிட்டுள்ள உரைக்கொத்து என்னிடமுள்ளது. அதிலுள்ள பரிமேலழகர், மணக்குடவர், பரிப் பெருமாள், பரிதியார், காலிங்கர் இவர்களின் உரைகளில் பல குறட் பாக்களுக்குப் பகுத்தறிவுக்குப் பொருந்தாத பொருளும் விளக்கமும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளைப் படிக்கும் பொழுது ஐயா அவர்களின் நினைவுதான் வரும். தாங்கள் திருக்குறளுக்கு உரை எழுதி யிருந்தால் எவ்வளவு பயனுடையதாயிருக்கும்? திருக்குறளைப் பயிலும் மக்கள் அனைவரும் எவ்வளவு மனநிறைவுடன் நன்றி கூறுவார்கள் என்றுதான் நினைப்பேன். எப்பாடுபட்டேனும் ஐயாவின் இணக்கத் தைப் பெற்று உரை ஒன்று எழுதி வாங்கிப் பதிப்பிக்க வேண்டுமென்று உறுதி பூண்டுள்ளேன். இந்த நேரத்தில் ஐயாவைச் சந்தித்தது என் முயற்சிக்கு உரமூட்டியது" என்று கூறினேன். பாவேந்தர் அவர்களும் புன்னகை பூத்து தன்னுடன் வந்த தம்பியை அவரது தியாகராய நகர்

இல்லத்தின் முகவரியைக் கொக்கும்படி பணித்து, விடை பெற்றுச் சென்றார்.

பாவேந்தர் அவர்களின் தன்மானக் கொள்கையும், மூட நம்பிக்கை, மூடப்பழக்க வழக்கங்களைச் சாடும் புரட்சியும், என்னை அவர்பால் ஈர்த்தன. இந்த அடிப்படையில் உலகப் பொது மறையாம் திருக் குறளுக்கு உரை ஒன்று இயற்றப்பட்டால், தமிழ்ச் சமுதாயம் விழிப் படைய வழி வகுத்ததாகும் என்று நம்பினேன். ஆகையால் பாவேந்தரின் அறிமுகம் என் ஆர்வத்திற்கு மேலும் ஊக்கமளித்தது.

ஒரு நன்நாளில், எனது நண்பர் வழித்துணை இராமன் அவர்களுடன் பாவேந்தரவர்களைச் சந்திக்க தியாகராயநகர் அவர் இல்லத்திற்குச் சென்றேன். பாவேந்தர் எங்களை அன்புடன் வரவேற்று, என் ஆர்வத்தைப் பாராட்டினார். பெருமையடைந்தேன். பேச்சு வார்த்தை முடிவில் பாவேந்தர் அந்நாள் வரையிலும் பிரசுர உரிமை வழங்காத நூல்களையும், எதிர் காலத்தில் அவர் இயற்றும் எல்லா நூல்களையும் பதிப்பிக்கும் உரிமையைப் பத்தாண்டுகளுக்கு எனக்கு வழங்கினார். அதற்கு முன் பணமாக ஐயாயிரம் பெற்றுக் கொண்டு ஒப்பந்தப் பத்திரம் எழுதிக் கையெழுத்திட்டுக் கொடுத்தார். அதைப் பொன்னேபோல் போற்றிப் பாதுகாத்து வருகிறேன். விடைபெற எழுந்த போதுதான் அது நிகழ்ந்தது. மிகுந்த சுறுசுறுப்புடனும் உற்சாகத் துடனும் அவர் இட்ட பணிகளைக் கவனித்து வந்த இளைஞரை எங்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். "பெயர் பொன்னடி என்றும், பொன்போல நல்ல குணம் நிறைந்தவர்" என்றும் சொன்னார். "என் நூல்களைப் பதிப்பிக்கும் வேலையில் உங்களுக்கு உதவுவார்; பதிப் பிக்குங்கால் என் கருத்துக்கள் சிதைவு படாவண்ணம் பார்த்துக் கொள்வார்; உங்களுக்கும் எனக்கும் ஓர் இலக்கியப் பாலமாக இருப்பார்" என்று பரிந்துரைத்தது என் மனத்தை விட்டு என்றும் அகலாது.

என் நீண்ட நாள் திட்டங்கள் ஒவ்வொன்றாய் உருப்பெற ஆரம்பித்தன. அன்பு நூலகம் என்ற நிறுவனத்தை வடபழனி, ஆற்காடு சாலை 137-ஆம் எண் எனது சொந்தக் கட்டிடத்தில் தொடங்கினேன். அங்கேயே ஜெயசேகர் என்ற பெயர் கொண்ட அச்சகத்தை நிறுவினேன். வெளி வேலைகளுக்கென ஒரு மோட்டார் வேனையும் வாங்கினேன். இவ்வாறு பெரும் பொருட் செலவில் ஆரம்பித்த என் பதிப்பக வேலைகளையும், அதன்பின் நான் தொடங்கிய 'மணிக் கொடி' என்ற மாதமிருமுறைப் பத்திரிகை வேலைகளையும் கவனிப்பதில் கவிஞர் பொன்னடி எனக்குப் பெரிதும் துணை புரிந்தார்.

அந்த நேரத்தில் தலைவர் காம்ராஜ் அவர்கள் அழைப்பு வந்தது. காங்கிரஸ் சார்பாக அவர் நடத்தி வந்த "நவ சக்தி" நாளிதழின் நிர்வாகப் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார். இதன் காரணமாக என் பதிப்பகத்தையும், அச்சகத்தையும் கவிஞர் பொன்னடியின் மேற் பார்வையில் விட்டிருந்தேன். அப்பொறுப்பை மிகத் திறமையுடன் நடத்திக் காட்டினார். அறிவாற்றலினால் பத்திரிக்கைத் தொழிலில் பயிற்சியும் பெற்றுக் கொண்டார்.

இவ்வனுபவத்தினால் பின்னர் அவர் தொடங்கிய "முல்லைச்சரம்"

பதினெட்டாண்டு காளைப் பருவத்தை எட்டுவது எளிதாயிற்று. பத்திரிகைத் துறையில் ஒரு கால் நூற்றாண்டு காலம் அனுபவம் பெற்ற எனக்கே மலைப்பைக் கொடுக்கும் வகையில் முல்லைச்சரத்தை விடாது நடத்தி வருவது பெருஞ்சாதனையாகும். கவிஞர் பொன்னடி காலத்திலேயே முல்லைச்சரம் வெள்ளி விழா, பொன் விழா, வைர விழாக் கொண்டாடும் சாதனை புரிய வேண்டுமென்று மனமுவந்து வாழ்த்துகிறேன்.

கவிஞர் பொன்னடியின் கண்காணிப்பில் பாவேந்தர் இயற்றிய 'கண்ணகி புரட்சிக் காப்பியம்', 'மணிமேகலை வெண்பா' இரண்டையும் பதிப்பிக்கும் வேலை செவ்வனே நடந்து வந்தன. கண்ணகி புரட்சிக் காப்பியத்தில் சில சிறிய மாற்றங்கள் தேவைப்பட்டன. அவைகளை பாவேந்தரின் கவனத்திற்கு கொண்டு வந்த பொழுது சிறிதும் தயக்கமின்றி மனமுவந்து மாற்றங்கள் செய்து கொடுத்தார். எங்களின் இலக்கியத் தூதரான பொன்னடி இத்தருணங்களில் பெரிதும் உதவியாயிருந்தார் என்பது மறக்க முடியாதது.

திருக்குறள் உரைபற்றி நினைவூட்டிய பொழுதெல்லாம், பாவேந்தர் அம் முயற்சியைத் தள்ளிப்போட்டுக் கொண்டே வந்தார். 'குயில்' பத்திரிகையில் பல குறட்பாக்களுக்குத் தெளிவான உரையும், விளக்கமும் எழுதி வந்திருக்கிறார். குயில் பழைய இதழ்களைச் சேகரித்து அவைகளில் வெளியான உரைகளைத் தொகுக்கும்படி பொன்னடி அவர்களைப் பணித்தார். இதற்காகப் பாவேந்தருடன் நானும், வழித் துணை ராமனும், பொன்னடியும் புதுவைக்குச் சென்று வந்தோம். குயில் பழைய இதழ்களைச் சீரான முறையில் பாதுகாத்து வைக்கப்படாமையால், முயற்சி பலனளிக்கவில்லை. இதற்கிடையில் பாவேந்தரின் கவனம் திரைப்படத் துறையில் திரும்பியதாலும், பின்னர் உடல்நலம் குன்றியதாலும் திருக்குறளுக்கு அவர் சேவை கிடைக்காமலே போயிற்று. புரட்சிகரமான சமுதாயச் சீர்திருத்தத்தை விரும்பும் தமிழ் உள்ளங்களுக்குப் பெரும் ஏமாற்றமென்றே கருதுகிறேன்.

பாவேந்தரவர்களின் மாணவர்களுக்குள்ளே கவிஞர் பொன்னடிதான் முதன்மையானவர். கவி இயற்றும் இலக்கணத்தை பாவேந்தரிடம் முறையாகப் பயின்றவர். 'உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்றும் கற்று' தன் குருவினிடம் பக்தியும் பணிவும் கொண்டவர். பாவேந்தருக்கு மாணவராகவும் அந்தரங்கக் காரியதரிசியாகவும் பலகாலம் சேவை செய்தவர். பாவேந்தரின் புரட்சிகரமான சமுதாய நோக்கினைப் பின் பற்றினார். உழைத்து உழைத்து உருக்குலைந்து போன தொழிலாளி விழித்தெழுந்து மேம்பாடு அடையப் பாடி வருகிறார். எத்தனையோ மாணவர்கள் பாவேந்தரிடம் பயின்றிருப்பார்கள். ஆனால், அவர் இறுதி நாட்களில் தொடங்கிய தமிழ்க்கவிஞர் மன்றத்தைக் கட்டிக் காத்து இத்தனை ஆண்டுகள் வளர்த்தவர் எவருமிலர். அப்பெருமை கவிஞர் பொன்னடிக்கே உரியது. இக்காரணத்தினால்தான் அவரைப் பாவேந்தரின் முதன்மையான மாணவர் என்று கூறினேன்.

பாவேந்தரின் கடைசி மாணவரும் கவிஞர் பொன்னடியே. கவிஞர் பெருமானின் கடைசி பல ஆண்டுகள் அவருடன் இருந்து பணிவிடை செய்யும் பேறு பெற்றவர் கவிஞர் பொன்னடி. பாவேந்தர் உடல் நலம்

குன்றியபோதும் அவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்தவர் பொன்னடி. தன் ஆசானை அரசாங்கப் பொது மருத்துவமனையில் சேர்த்து ஊண் உறக்கமின்றி கவிஞர் பெருமானின் துணைவியாருடன் அவர் அருகே இருந்து பணிவிடை செய்தவரும் அவரே. பாவேந்தருக்கு உணவு உட்கொள்ள முடியாத நிலை வந்தபொழுது நரம்பு மூலம் குளுக்கோஸ் ஏற்றிய காட்சியைக் காணச் சகியாது மயக்கமுற்று விழுந்த விழுமிய மாணவரும் கவிஞர் பொன்னடியே. பெருந்தலைவர் காமராஜரின் அன்பு வேண்டுகோளுக்கிணங்க அப்போது நவசக்தி நாளேட்டின் மேலாளர் பொறுப்பேற்று இருந்தேன். என் அலுவலகத்திற்குக் கவிஞர் பொன்னடி "பாவேந்தர் உடல்நிலை மோசமாகிக் கொண்டிருக்கிறது. உதவிக்கு யாருமில்லை. உடனே நீங்கள் வரவேண்டும்" என்று தொலைபேசி மூலம் அழைப்பு விடுத்தார். அவா வேண்டுகோளுக்கு இணங்க உடன் மருத்துவமனைக்குச் சென்றேன். நிலைமையை உணர்ந்து பொன்னடியுடன் அடுத்து ஆவன செய்ய வேண்டியவைகளை இருவரும் திட்டமிட்டுக் கவனித்தோம். மருத்துவம் பயனளிக்காமல் பாவேந்தர் 21-4-64 நாள் காலை இயற்கை எய்தினார்.

சிறந்த அறிவாளிகள் பலர் தமிழ்நாட்டில் தோன்றி மறைந்திருக் கின்றனர். அவர்கள் வாழ்ந்த காலத்தில் மக்கள் அவர்களை மதித்துப் பெருமைப்படுத்தியதில்லை. மாண்டபின் அவர்களுக்கு மணிமண்டபம் கட்டுகிறோம், அவர்கள் வறுமையால் வாடிய பொழுது ஒரு வேளைச் சோற்றுக்கும் வகை செய்ததில்லை. நினைவாலயம் நிறுவுகிறோம் என்று கூறி அவர்கள் காலடிப்பட்ட மண்ணை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொள்வதும், படங்கள் திறப்பதும், சிலைகள் அமைப்பதும், மறைந்த நாளை நினைவு கூறி மலர் மாலை சாற்றிப் பாமாலை பாடுவதும் நாம் காணும் காட்சி.

பொதுவாழ்வில் தன்னல நோக்குடன் புகுந்து, ஆட்சி பீடத்தில் இருப்பவர்களை, வரையாது கொடுக்கும் வள்ளலென்றும், கொடுத்துக் கொடுத்துச் சிவந்த கரம் என்றும் புகழ் பாடிப் பொது மக்கள் பணத்தில் தங்கள் வசதிகளைப் பெருக்கிக் கொண்டவர்கள் ஏராளம். இப்படிப் பட்ட தமிழகத்தில்தான் பாவேந்தரவர்களும் பிறந்து வாழ்ந்தார்கள். தன்னலமின்றிச் சேவை செய்து தமிழ்த் தாயின் தலைமகன் எனற புகழைத் தவிர பொன்னோ, பொருளோ சேர்த்துக் கொள்ளாது மறைந்தார்கள். அவர் புகழ் உலகமெல்லாம் பரவும். அவர் தம் நூல்களைத் தக்க அறிஞர்களைக் கொண்டு உலக மொழிகளிலெல்லாம் மொழி பெயர்த்து மக்களனைவரும் பயன் பெறும் வகை செய்ய வேண்டியது தமிழக அரசின் தலையாய கடமை. இக்கடமையை அரசுக்கு எடுத்துக் கூறி, காலந் தாழ்த்தாது செயலாற்றத் தூண்ட வேண்டியது தமிழகக் கவிஞர்கள், அறிஞர் பெருமக்கள் அனைவரின் பொறுப்பு ஆகும்.

வாழ்க தமிழ்!

வளர்க பாவேந்தர் புகழ்!

(இலக்கியப் பணி வெள்ளி விழா மலர் 1985)

# புதுமைக் கவிஞரின் படம் போட்ட படைப்புகள்!

## பொன் பரமகுரு எம்.ஏ.பிஎல்., ஐ.பி.எஸ்.



ஓர் ஒப்பற்ற கவிஞரின் கால் நூற்றாண்டு இலக்கியப் பணியைப் பாராட்டி எடுக்கப்படுகிறது இவ் வெள்ளி விழா. இச்சீரிய வெள்ளி விழாவின் சிறந்த நாயகர் அன்புக் கவிஞர் பொன்னடியான். பொன் பரமகுரு மனமுவந்து போற்றிப் பாராட்டும் பொன்னடியான். ஆம். எல்லாம் பொன்மயம்; புதுமைக் கவிஞர் பொன்னடியானின் உயிர்க் கவிதை. உயர் கற்பனை, உள்ளம், உணர்வு, எண்ணம், எழுச்சி, இலட்சியம், கொள்கை, கலை நயம், உவமை அணி, சமதருமக்குரல், பண்புப் புரட்சி, சொற் புதுமை, சந்தப் புதுமை, நீதி நேர்மை, நீரோட்ட நடை யாவும் பொன்னே!

அன்பர் பொன்னடியார் கவியுலகில் புரட்சிக் கவிஞரான பாரதிதாசனாரின் பிரதம சீடராய்த் திகழும் கவிஞர். அமர கவிகள் பாரதியார், பாரதிதாசனார் ஆகியோரின் வழி வந்த கலைநயம் நிறைந்த கவிஞர். தமிழகத்தின் தகுதி மிகுந்த கவிஞர். “கருவிலே திருவுடையார் பொன்னடியார்” எனப் பதிப்புக் கலைஞர் பரதனார் பாராட்டும் பார்புகழ் கவிஞர். கவிதைத் துறையில் புதுமை பல கண்டு வெற்றிவாகை சூடிய கவிஞர். அழுத்தப்பட்ட மக்களுக்காகப் பாடும் எழுச்சிக் கவிஞர். இலக்கியப் பணியால் பாட்டாளி மக்களுக்குத் தொண்டாற்ற முடியும் என்பதை மெய்ப்பித்து வரும் உணர்ச்சிக் கவிஞர். உணர்ச்சிமயமான கவிதைகளை வடிப்பதில் வல்லமை மிக்க கவிஞர். முற்போக்குக் கொள்கை கொண்ட முத்தான கவிஞர். தமிழ்ப் பண்புப் புரட்சி முரசு கொட்டும் புகழ்மிகு கவிஞர். பேச்சு நடையை அப்படியே பின்பற்றி கவிதையில் புதுமை புரிந்த புரட்சிக் கவிஞர். புதுமையினுள் நுழைந்து வீர நடை போடும் புது மலர்ச்சிக் கவிஞர். கற்பனையாற்றலும், சொல்லாட்சியும், அழகுணர்ச்சியும், சமதருமக் கோட்பாடும் கைவரப் பெற்ற கவிஞர். மனித குலத்தின் மாண்புகளை, உரிமைகளைப் பேணிக் காக்கவும், அறியாமைக்கு ஆட்படாத ஏற்றத் தாழ்வற்ற சமதருமச்

சமுதாயத்தைக் காணவும், பாட்டின் மூலம் பாடுபடும் பண்புக் கவிஞர். தமிழ்க் கவிதை இலக்கிய உலகின் மறுமலர்ச்சி இயக்கமாகவும், இருபதாம் நூற்றாண்டின் தமிழ்ச் சங்கமாகவும் விளங்கும் பாவேந்தர் தொடங்கிய தமிழ்க் கவிஞர் மன்றத்தின் காப்பாளராகத் தொடர்ந்து கடமையாற்றும் கர்ம வீரக் கவிஞர்.

"திரு பொன்னடி என் கவிதை இதழாகிய 'குயில்' வார ஏட்டின் எழுத்தாளராகவும், என் உதவியாளராகவும் பன்னாள் நன்கு தொண்டாற்றியவர். அவர் மேலும் ஒரு நல்ல கவிஞர். இந்த அரும்பணிக்கு ஆதாரமாக அவரிடம் இலக்கண அறிவும், இலக்கிய அறிவும் அமைந்திருக்கின்றன. நல்ல குணம், செயல் உடையவர் என்பதோடு கடமை தவறாமை அமையப் பெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது" எனப் பாட்டாளர் நலன் பாடும் பண்புக் கவிஞர் பொன்னடியானைப் பாவேந்தர் பாரதிதாசனார் மனமாரப் பாராட்டுகின்றார்.

'பொன்னடியார் கவிதைகள்', 'ஒரு கைதியின் பாடல்கள்', 'பனி மலர்', 'ஓர் இதயத்தின் ஏக்கம்' ஆகிய, கவிஞர் பொன்னடியானின் கவிதைப் படைப்புகளை நான் படிக்கும் பாக்கியம் பெற்றேன். "பெருக்கெடுத்துப் பாயும் புனலில் முக்குளித்து நீந்தினேன். மெல்லென அசைந்தாடிச் செல்லும் குளிர் நீரில் ஆழ்ந்தேன். அந்த இன்பச் சுகத்தைப் பொன்னடியானின் கவிதைகளிலே நான் அனுபவித்தேன்", எனப் பதிப்புக் கலைஞர் பரதனார் கூறுதல் போல் நானும் அந்த இன்ப சுகத்தை அனுபவித்தேன். இவரது கவிதைகளில் தென்றல் வீசவும், புயல் அடிக்கவும், 'முல்லைச்சரம்' போல் மணம் கமழவும், உணர்ச்சி நெருப்பு எரியவும், குடும்பப் பாசம் மிளிரவும் கண்டேன். இக்கவிஞர் பாடல்,

*"பொன்னாகும்; தென்பூட்டும்*
*புதுமையாகும்*
*புரட்டுகளால் பிழைப்போர்க்(கு)*
*எச்சரிக்கையாகும்!",*
என்றும்;

*"இடி இடிக்கும் இவர் கவிதை*
*வரிகளுள்ளே!*
*எரிமலையின் பெருவெடிப்பும்*
*இணைந்திருக்கும்!*
*வடிகின்ற கொம்புத் தேன்*
*சுவையிருக்கும்*
*வண்டணைக்கும் பன்மலரின்*
*மணமிருக்கும்!*
*விடிவளிக்கும் நல்வாழ்வுக்*
*கருத்திருக்கம்!*
*வெட்டொன்று துண்டிரண்டாம்*
*என்னும் போக்கில்*
*முடிவிருக்கும்; வெண்டைக்காய்த்*

*தன்மை மட்டும்*
*இருக்காதாம் இவர்பாடும்*
*நல்ல பாட்டில்!*

என்றும் இவரது கவிதை வரிகள் மூலமே இவரைப் பாராட்டத் தோன்றுகிறது.

"நாட்டிலே கோடிக் கணக்கான ஏழை மக்கள் நடைப் பிங்களாகி, தாழ்வுற்று வறுமைப் பிடியில் சிக்குண்டு வதைபடும் வேளையில், அவர்களை மீட்சி வழிப்படுத்த - மேன்மை வழி செலுத்த போர் வீரனாக அவர்கள் பக்கம் நின்று ஆவேசப் புரட்சிப் பாடல்களைப் பாடுவதே", தன் வேலையெனப் பறை சாற்றுகிறார் கவிஞர் பொன்னடியான், இவர்தம் 'பனிமலர்' நூலின் விழிவாசலில் -

தான் ஏன் கவிஞரானார் என்பதை மிகத் தெள்ளத் தெளியப் பாடுகிறார்:

*"உழைப்பாளர் சோகமுக*
*உருவங்கள் என்*
*உள்ளத்தைக் கிள்ளியதால்*
*கவிஞ னானேன்!"*

ஆண்டாண்டு தோறும் அடுக்கு மாளிகைக் குலத்தின் பிடியிற் சிக்கித் தூண்டில் புழுவாய்த் துடிக்கும் உழைப்பாளரின் ஒட்டிய உடலும், வாடிய வதனமும் காண்கிறார். உள்ளம் கசிந்து உருகுகிறார்-கவிஞராகிறார்.

*"குழம்பியசேறான சமு*
*தாயம் கண்டு*
*குமுறலுடன் சிரித்ததனால்*
*கவிஞ னானேன்!"*

ஏங்குதலும், ஏசுதலும், கொடுமைகளும், குழப்பங்களும் நிரம்பி, கலங்கிய குட்டை போல் காட்சியளிக்கும் சமுதாயத்தைக் கண்டு கும்பிக் கொதித்துச் சிரிக்கிறார்-கவிஞராகிறார்.

*"இழப்படைந்து நைந்துவிட்ட*
*பெரிய நாட்டின்*
*ஏற்றத்தை எண்ணியதால்*
*கவிஞ னானேன்!"*

நீதி, நேர்மை, நாணயம், வாய்மை, வலிமை, வளமை யாவும் குன்றி, நலிந்து வாடும் நம் மாபெரும் நாட்டில் மறுமலர்ச்சிக்கே உழைக்க நினைக்கிறார்-கவிஞராகிறார்.

*"அழைப்பில்லா விருந்தினனாய்*
*வந்த என்னை*
*அரவணைத்துக் கொண்டாள்இக்*
*கவிதை அன்னை!"*

தமிழ்க் கவிதை அன்னை, அழைப்பின்றித் தானே கவிதைத் துறைக்கு வந்த கவிஞருக்கு, அன்புடன் ஆதரவளிக்கிறாள். எப்படி இருக்கிறது கவிஞரின் விளக்கம்?

அடுத்து, ஒரு கவிஞனின் வேலை என்ன என்பதை வெகு சிறப்பாய்க் கணிக்கின்றார் கவிஞர் இவ்விதம்:

*"கவிழ்ந்திருக்கும் சமுதாயம்*
*நிமிர்தல் வேண்டிக்*
*காவலிலவாம் பாடிடுவோன்*
*கவிஞன்: தீமை*
*கவிழ்ந்திருக்கும் மனிதர்களின்*
*மடமைப் போக்கைக்*
*கவிழ்த்துவிடப் பாடிடுவோன்*
*கவிஞன்: நாணிக்*
*கவிழ்ந்துள்ள நீதிக்கோ*
*புலனைந்தாலும்*
*காவலனாய் நின்றிடுவோன்*
*கவிஞன்; வையம்*
*கவிழாத நெறிப் போக்கில்*
*தழைத்து வாழக்*
*கருத்துக்கள் விதைப்பதுவே*
*அவனின் வேலை!"*

தொடர்ந்து எது கவிதை என்பதை பின் வருமாறு எடுத்துரைக்கின்றார்.

*"வானத்தின் கீழுள்ள*
*உலகை; இங்கு*
*வாழ்ந்துவரும் பல்வேறு*
*மனிதர் கூத்தை*
*காணத்த கும்வகையில்*
*கண்டே உண்டே*
*கரைவகுத்துப் படைப்பதுவே*
*கவிதையாகும்!"*

*'ஆண்டான்கள் அடிமைகள்*
*முறைகள் எல்லாம்*
*அணுவளவும் மாறாமை*
*வேண்டும்' என்றே*
*வேண்டாத பழங்கொள்கை*
*விதைப்போர் எண்ணம்*
*வேரறுக்கப் பாடுவதே*
*கவிதையாகும்!"*

*"இங்கிருக்கும் சமுதாய*
*எதிர் கட்கே*
*இம்மியளவு வும்வளைந்து*
*கொடுத்தி டாமல்*
*சிங்கத்தைப் போல்நிமிர்ந்து*

*ஆர்த்தெழுந்து*
*சிறுமையினைப் பாடுவதே*
*கவிதை யாகும்!"*
*"சாக்காடு என்றாலே*
*என்ன வென்று*
*சரியாகத் தெரியாத*
*பரம்பரையைப்*
*பூக்காடாய் இனிப்பூக்க*
*வைப்பதற்கும்*
*புதர்க்காடாம் பிற்போக்குப்*
*போக்கை நெஞ்சில்*
*தேக்காத புதியோரை*
*வளர்ப்பதற்கும்*
*தித்திக்கும் செந்தமிழில்*
*வடித்தெடுத்து*
*மாக்கேடு களைவதுவே*
*கவிதை என்பேன்!"*

இத்தகைய கவிதை தவிர மற்றதெல்லாம் பைத்தியங்கள் உளறல் என்பது கவிஞரின் முடிவான கருத்து.

கவிஞர் பொன்னடியானின் கொள்கையும், இலட்சியமும் சாலப் போற்றிப் பாராட்டுதற்குரியன. இவர், தான் எவற்றிற்கெல்லாம் அடிமை என்பதை மிகச் சுவைபடப் பாடுகிறார்.

*"அழகிற்கும் தூய அன்பிற்கும்*
*அடிமைப் படாத குணத்திற்கும்*
*அறிவிற்கும் அஞ்சா ஆண்மைக்கும்*
*அறியாமைக் கடங்கா அன்பர்க்கும்*
*உணர்ச்சிக்கும் மாளா உண்மைக்கும்*
*உழைப்பிற்கும் உழைப்போர் உருவிற்கும்*
*உரிமைக்கும் மக்கள் ஒருமைக்கும்*
*உயர்விலா வறியவர் உணர்விற்கும்*
*அடிமை இவன்",*

எனத் தன்னைப் பற்றி திட்டவட்டமாகக் கூறுகிறார். அனைவருடனும் ஏற்றத் தாழ்வின்றிப் பழகிட, எவ்வித வித்தியாசமின்றி வாழ்ந்திடக் கவிஞர் அவாவுறுகிறார். தனது தீரா ஆசையை, திண்ணமான கொள்கையை, தீவிர வேலையை வெகு உறுதியாய் முழங்குகிறார்.

*"அழுகையொலி அவலஒலி*
*கேளா இன்ப;*
*அழகுலகை நான் பார்க்க*
*விரும்புகின்றேன்!*
*தொழுகையொலி துன்ப ஒலி*
*எழும்பா அன்புச்*
*சுடர் உலகை வணங்குதற்கே*

வாழுகின்றேன்!
பழுது நிறை பகைக் கலையைக்
கல்லாத்
தூய
பண்ணுலகைச் கவைத்தற்கே
தவிக்கின்றேன் நான்!"

---

"விளம்பர வெறியரே
என்முதற் பகைவர்!
வெற்றுச்சொல் வீரரே
என்முதற் பகைவர்!"

---

"பதவிக்கும் உதவிக்கும்
பணிவதே இல்லை!
பகட்டாளர் திமிருக்கும்
கனிவதே இல்லை!"

---

"வெற்றிகளாலே மகிழ்வதும் இல்லை!
வீழ்ச்சிகளாலே கவிழ்வதும் இல்லை!"

---

"தூங்கி விழும் உலகினை என்
கவித் திறத்தால்
துள்ளி எழச் செய்வதுவே
என்றன் கொள்கை!
ஈங்குள்ளார் எல்லைமொழி
இனம் கடந்தே
உறவாடப் பாடுவதே என்றன் வேலை!"

நாட்டுப் பற்றும், நாட்டவர் பற்றும் நமக்கு அவசியம் தேவை என அறிவுறுத்தும் கவிஞர், தான் விரும்பும் நாட்டின் இலக்கணத்தை வெகு அழகுறப் பாடுகிறார்.

"தேவை என்ப தறியாத
மக்கள்சூழ்நாடு
திருட்டுபுரட் டறியாத
மனிதன் வாழ்நாடு
பாவியிவன் மற்றொருவன்
புண்ணியவான் என்றே
பாகுபாடு கள்வருக்காப்
பண்பறிந்த நாடு
கூவல்களில், குமுறல்களில்,
கொடுமைகளில் வீழ்ந்து
குறைவாழ்வும் நடக்காத
இன்பம்சூழ் நாடு

*தேவை என்பேன்; அதுவே நாம்*
*விரும்புகின்ற நாட்டின்*
*திருவடிவம் ஒருவடிவம்*
*உயர்வடிவம் என்பேன்!"*

மேலும், நாட்டின் வாழ்வு எப்படி, எப்போது விடியும் என்பதை,

*"வறுமையும் சிறுமையும்*
*வாடிடும் போதே,*
*வாழ்வின் கேடுகள் மடியும்!*
*தீமையும் பொய்மையும்*
*தீய்ந்திடும் போதே*
*தென்றல் இங்கே தவழும்!*
*நாணயம் நேர்மை*
*நிலைத்திடும்போதே*
*நாட்டின் வாழ்வும் விடியும்!"*

எனச் செப்புகிறார். நம் நாட்டை ஆள எப்படிப்பட்டவரை நாம் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதை வெகு நயம்படக் கூறுகிறார்.

*"தவறைத் தாக்கவும்*
*தர்மம் காக்கவும்*
*துணிந்த மனிதனை,*
*இதயத் தூய்மையில்*
*விளைந்த மனிதனை*
*கவிழ்ந்த நாட்டினை*
*நிமிர்த்தத்*
*துடித்தெழும்*
*காவல் தெய்வத்தை,*
*புதுமைப் பாதையில்*
*போகத்*
*துணிந்திடும்*
*புனித தொண்டனை*
*சிந்தை செயல்களில்*
*என்றும்*
*கறைபடாச்*
*செயலின் வீரனை".*
*தேர்ந்தெடு என்கிறார்.*

நாட்டின் உண்மைத் தலைவனாகிடத்தக்க தகுதியையும் வரையறுக்கிறார்.

*"மக்களுடன் மக்களாய்*
*வாழ்ந்திடப் பழகிடு!*
*மண்மீதும் முள்மீதும்*
*நடந்திடப் பயின்றிடு!*
*சிக்கவைக்கும் சேற்றிலும்*
*சென்றிடத் துணிந்திடு!*

*சீரழிவுப் பாதையையும்*
*கடந்திட நடந்திடு!"*

*"குப்பத்தில் சேரியில்*
*கூட்டுறவு வைத்திடு*
*குழப்பத்தில குடுமிபிடிச்*
*சண்டையில் கலந்திடு!*
*தப்பான பேர்வழிகள்*
*வாழ்வையும் அளந்திடு!*
*தவறேதும் அறியாதார்*
*தடமும் அறிந்திடு!*

*"உன்னுடன் வாழ்வோரின்*
*உணர் வெல்லாம் உணர்ந்திடு!*
*உப்புவிலை புளி விலையும்*
*அன்றாடம் தெரிந்திடு!*
*தின்னவரும் கவலைகளில்*
*தேய்ந்து தெளிந்திடு!*
*தேர்ப்பயணம் மறந்து நீ*
*தெருப்பயணம் சென்றிடு!"*

*"காதலில் கலந்திடு;*
*இல்லறத்தில் கனிந்திடு!*
*கவிதை இலக்கியத்தில்*
*நெஞ்சை நனைத்திடு!*
*மோதல் வரும் போதில்நீ*
*மோதவும் துணிந்திடு!*
*முக்காலும் அறியும் ஒரு*
*ஞானியாய் முதிர்ந்திடு!"*

அப்போதுதான் இந்நாட்டு உண்மைத் தலைவனாய் ஆகின்ற தகுதியை அடைந்திட முடியுமென வலியுறுத்துகிறார் கவிஞர்.

தற்கால இளைஞரின் அடாத போக்கையும், அவல நிலையும் கண்டு மனம் குமுறுகிறார்; மானக் கேடெனக் கடிகிறார்.

*"பொழுதெல்வாம் திரைப் பேச்சு;*
*பொன்னால் ஆன*
*பொழுதெல்லாம் நடிகர்*
*நடிகையர் தம்மின்*
*அழகுரைக்கும் வீண்பேச்சு;*
*பொய்யால் ஆன*
*ஆபாசக் கதைப்பேச்சு;*
*போட்டி ஏச்சு!*
*அழுதிருக்கும் நாட்டினையே*
*சீர்திருத்த*
*ஆர்த்தெழுந்து பணியாற்றாது*

*இளைஞர் கூட்டம*
*புழுதி நிறை பழுதுமிகு*
*செயல்கள் தம்மில்*
*புரள்கின்றார்; உருள்கின்றார்;*
*மானக்கேடு!"*

அதே நேரத்தில் இளைஞரின் கடமையை, பொறுப்பைச் சுட்டிக் காட்டவும் செய்கிறார்.

*" ஓ இளைஞர் பரம்பரையே! - உன்*
*எழுச்சியில்தான் இந்த*
*நாட்டெதிர் காலத்தின்*
*ஏற்றம் இருக்கின்றது! - உன்*
*இதய வலுவினில் தான்*
*இந்த வையத்தின்*
*வாழ்வும் கிடக்கின்றது!"*

ஆகவே,

*"கேடு விளைப்பதும்*
*கேட்டில் பிழைப்பதும்*
*கேவலமாய் உணர்வீர்!*
*நாடு நலம் பெறும்*
*நல்வழியில் என்றும்*
*நடைபயில முயல்வீர்!"*

என இளைஞருக்கு அறிவுரை கூறுகிறார்.

பாட்டாளர்களையும், அவர்களது தேவைகளையும் நன்கு படம் பிடித்துக் காட்டுகிறார் கவிஞர்.

*"பாயத் துடிக்கின்ற பசித்த புலிகள்*
*பாட்டாளர் தேவைகள்,*
*தலைவர்களே! - அவர்*
*தீயைத் தேக்கிய காய்ந்த கள்ளிகள்*
*தீட்டிய கூர்வாள், தோழர்களே!"*

அலையும் மனத்தை, அமைதியில்லா மனத்தை இரத்தினச் சுருக்கமாய் எடுத்துக் கூறுகிறார்:

*"ஆசைப்படுகின்றோம்*
*கண்டதன் மேலெல்லாம்*
*அத்தனையும் நமக்கு*
*இங்கே கிடைக்குமா?*
*அத்தனையும் கிடைத் தாலும் நமது*
*மனம்தான் அமைதியைக் கண்டிடுமா?"*

---

*"புகழும் கிடைத்தது*
*பொருளும் கிடைத்தது*
*பொன்னும் மணியும் குவிந்ததம்மா!*
*மகிழ்வும் கிடைத்தது*

*மதிப்பும் உயர்ந்தது*
*மனத்தில் அமைதி இல்லையம்மா!"*

மனம் அமைதி அடைய நமக்கு உள்ளம் உயர வேண்டும் என்கிறார் கவஞர்.

*"உன் உளத்தை உன் குணத்தை*
*ஒழுங்கில் வை முன்னாலே!*
*ஒய்விலாத துயர மெல்லாம்*
*ஓய்ந்துவிடும் தன்னாலே!"*

*"அன்புடைய தோழர்களே!*
*நமக்கோ இங்கே*
*அழியாத மூலதனம்*
*உயர்ந்த உள்ளம்!"*

---

*"உள்ளத்தால் உயர்ந்தோரே*
*இவ்வையத்தில்*
*உள்ளவர்கள் வணங்குகின்ற*
*தெய்வமானார்!"*

நம் நாட்டினர்க்கு உண்மையிலே உள்ளங்கள் உயர்ந்திருந்தால் இங்கே சட்டமோ, காவலர்களோ, நீதிமன்றங்களோ தேவையே இல்லை என்கிறார்.

கவிஞர் பொன்னடியான் பாடாத பொருளே இல்லை எனலாம்.

*"உலகம் விடும் பெரும் மூச்சு*
*காற்று மூச்சு!*
*உயிர்கள்விடும் பழம் மூச்சோ*
*அழுக்கு மூச்சு!*
*கலகம் செய் வான் மூச்சு*
*கயமை மூச்சு!*
*கஞ்சற்றோர் விடும் மூச்சு*
*கண்ணீர் மூச்சு!*
*நிலை கலங்கு வான் மூச்சோ*
*துன்ப மூச்சு!*
*நெஞ்சற்ற முதலாளிக்*
*கூட்ட மூச்சு*
*கொலைமூச்சு - நமை எரிக்கும்*
*நெருப்பு மூச்சு!*
*கற்றோரின் மூச்செல்லாம்*
*இன்ப மூச்சு!*

என மூச்சைப் பற்றிப் பாடுகிறார்.

*"உலகம் முளைத்த நாள்முதல் முளைத்த*
*ஒன்றின் பெயர்தான் அச்சம்! - நெஞ்சில்*
*கலகம் கிளைத்த நாள் முதல் கிளைத்த*

*கருவின் பெயர்தான் அச்சம்!*
*உலவும் காற்றால் மின்னல் இடியால்*
*உருவானதுதான் அச்சம்!-அன்று*
*நிலைதடு மாறிய மனிதரில் ஊறிய*
*நிழலின் பெயர்தான் அச்சம்!"*
என அச்சத்திற்கு இலக்கணம் வகுக்கிறார்.

*"பணமிருந்தால் போதுமிங்கே;*
*பாவம் செய்தோன்*
*புண்ணியவான் புனிதவான்*
*ஆவான்; நல்ல*
*குணமுடையான் தூய்மை*
*ஒழுக்கங்கள் கொண்ட*
*குன்றாத அறிவுடையான்*
*ஏழையானால்*
*மணமகனாய் ஏற்பதில்லை*
*பெண்ணின் வீட்டான்!*
*மாடிவீடும் காரும்*
*இருந்து விட்டால்*
*பிணத்தினையும் மருமகனே*
*என்பான்; மேல்கீழ்*
*பேதங்கள் அதன்பின்னே*
*பேசமாட்டான்!"*
எனச் சமூகத்தில் ஏற்றத்தாழ்வு கண்டு கடிந்து சாடுகின்றார்.

*"ஊழ்வினையால் ஏமாறும்*
*நலிந்த மக்கள்*
*உளந்திருந்த உழைக்கின்ற*
*உழைப்பே சக்தி!*
*ஏழ்பிறப்புத் தத்துவங்கள்*
*கிழட்டு நீதி*
*இல்லாமல் செய்கின்ற*
*செயலே சக்தி!*
*வாழ்கின்ற வரையிங்கே*
*குடிசைமக்கள்*
*வாழ்விற்காய் உழைகின்ற*
*உணர்வே சக்தி!"*
எனச் சக்திக்கும் புது விளக்கம் தனிக்கோணத்தில் தருகின்றார்.

*"நேற்றுப் பகைவன்: இன்று நண்பன்*
*இன்று நண்பன்: நாளை பகைவன்!*

*திட்டித் திரிதல்: கட்டித் தழுவல்*
*கட்டித் தழுவல்: விட்டு நழுவல்!*

*குழப்பம் கொள்கை: கொள்கைக்குழப்பம்*
*இழப்பு வரவு; விளம்பரக் கலவை!*

*எதிரணி உறவு; உறவணி பிரிவு*
*புதிரணி பிரிவு; பொய்மையில் உயர்வு!*
*இதுதான்டா தம்பி அரசியல்!" அதனால்*
*எதற்கு நமக்கு அரசியல்?*

என வெகு தெளிவுற அரசியல் என்றால் என்னவென்று படம் பிடிக்கிறார்.

*"கலப்புத் திருமணம் செய் தோழா!*
*கலப்பு செய் கலப்பு செய்*
*கலப்பு செய் தோழ!*
*உன் சாதி என்சாதி*
*உயர்சாதி கீழ்ச்சாதி*
*உளறல் வழிகளில்நீ*
*புரண்டதெல்லாம் போதும்*
*பெண்சாதி ஆண்சாதி*
*இருபிரிவேயுண்டு*
*பெருவையத் தோட்டே நீ*
*உறவாட வேண்டும்!"*

**நம்மைக் கவ்விய வேற்றுமைச் சனியன் கழுத்தற ஒவ்வொரு வீட்டிலும் கலப்புத் திருமணம் உண்டாக வேண்டும் என உயர்ந்த தோர் புதுவழி காட்டுகிறார்.**

*"பேரழகுப் பெட்டகங்கள்;*
*ஆண்மை நெஞ்சைப்*
*பிழிந்துருக்கும் ஒலியங்கள்;*
*வடியா இன்பச்*
*சாறூறும் கனிக்குலைகள்;*
*நிலைக்கா வையச்*
*சரித்திரத்தின் முத்திரைகள்;*
*சிங்காரத்த*
*தேரினங்கள்; இருளுலகின்*
*மின்னற் பூக்கள்!*
*திருவிழியைத் திறக்கின்ற*
*ஒளிக்கீற்றுக்கள்!*
*போராட்ட வாழ்க்கையிலே*
*கவலை தீர்க்கும்*
*புனிதங்கள - புரிகிறதா?*
*அவர்தம் பெண்கள்!"*

எனப் பெண்ணின் பெருமை பாடும் கவிஞர் -

*"வெண்ணிலவில் ஒளியெடுத்து*
*விண்மீனில் துளியெடுத்துப்*
*பொன் குழம்பை வார்த்தெடுத்து*
*வடித்த உருவமோ? - தென்*
*பொதிகை மலை மூலிகையில்*
*இழைத்த உருவமோ?"*

எனப் பெண்ணின் உருவ அழகை வெகு அருமையாக வருணிக்கிறார்.

அடுத்து பெண்ணின் கண்களைப் பாடுகிறார் பாருங்கள்'

*"கண்கள் - அவள் கண்கள்*
*மேயும் கண்கள்-அலை*
*பாயும் கண்கள்-அகம்*
*ஆயும் கண்கள்-நெறி*
*தோயும் கண்கள்!*
*சாயும் கண்கள்-மகிழ்*
*வீயும் கண்கள்-எழில்*
*வேயும் கண்கள்-ஒளி*
*காயும் கண்கள்!*

*ஆடும் கண்கள்-அறம்*
*பாடும் கண்கள்-அசை*
*போடும் கண்கள்-துயர்*
*மூடும் கண்கள்!*
*நாடும் கண்கள்-எனைத்*
*தேடும் கண்கள்-வளைந்*
*தோடும் கண்கள்-இரை*
*போடும் கண்கள்!"*

எப்படி இருக்கிறது கவிஞரின் கற்பனை வளமும் அதனைக் கவிதை மூலம் அளிக்கும் திறமும்? அம்மட்டோ! கவிஞர் முத்தத்தை வகைப்படுத்திப் பாடுவது நம் மூச்சை அடங்கச் செய்துவிடும்! இதோ படியுங்கள்:

*"முடியழகு மன்னவரே!*
*தேன் சிட்டைப்போல்*
*முகிழ்ந்தே தேன் உறிஞ்சுகின்ற*
*நீங்கள் கேட்கும்*
*மடிமுத்தம், மலர் மணத்து*
*மார்பு முத்தம்,*
*மணியோசை செவ்வாயின்*
*மகிழ்ச்சி முத்தம்,*
*முடிமுத்தம், முப்பழிக்கும்*
*முதுகு முத்தம்,*
*மோவாய்க் கீழ் கழுத்துமுத்தம்*
*அனைத்தினோடும்*
*வடித்தெடுக்காச் சாறுடைய*
*கவியைப் போன்று*
*வருகின்றேன் நாளைமறு*
*நாளைக்குள்ளே!"*

அப்பப்பா, கவிஞர் இன்பத்துப் பாலின் எல்லையையே கண்டவர் போலல்லவோ காணப்படுகிறார்!

மேலும், சுரங்கள் அடுக்கி இசையென பண்ணை எழுப்பும் பாடகர் போல், சொற்றொடர்கள் மூலமே இசைப் பண் எழுப்புகிறார் கவிஞர்:

*"நெருப்பாகிக் காற்றாகி நீராகி*
*வேராகிநிலை வகுப்பேன்!*
*நிறைவாகிக் குறைவாகி நெடிதாகிக்*
*கடிதாகி நினைவலுப்பேன்!*
*வெறுப்பாகி விருப்பாகி விதைப்பாகி*
*அறுவடையும் செய்து நிற்பேன்!*
*விடிவாகி முடிவாகி இயங்காத*
*வடிவாகி வீறு கொள்வோன்!"*

---

*"உதைபட்டு மிதிபட்டு*
*ஓடிபட்டு அடிபட்டு*
*உரிபட்டு வருங்கால*
*உலகத்தால் பிரிபட்டு*
*வதைபடப் போகின்றார்*
*யாரென்று புரிகின்றதா?" - நாளை*
*வறுபடப் போகின்றார்*
*யாரென்று தெரிகின்றதா?"*

எப்படி இருக்கிறது கவிதை நயமும், சந்தமும்? கவிஞர் 'கருவிலே திருவுடையார்' அல்லவா? அதனால்தான் புதுமைக் கவிதை பொங்கி எழுகின்றது.

கவிஞரின் உவமைகளில் கருத்துச் செறிவும், பொருட் பொருத்தமும் வெகு அருமை:

*'................. குளத்து நீரின்*
*பாசிகளாய் நம்முன்னே கலந்த மூடப்*
*பழக்கங்கள்......................."*

*"வஞ்சக நெஞ்சினை*
*வஞ்சகத் தாலேயே*
*வஞ்சிப்பதில் தவறில்லையே!*
*வைரத்தை வைரத்தால்*
*வகுத்துப் பிளத்தலே*
*வரம்பாகும் இதில் தவறில்லையே!"*

*"போண்டாவைப் போன்றிருக்கும்*
*உலகம் இன்றே*
*புரட்சியெனும் சாம்பாரில்*
*மூழ்க வேண்டும்!"*

*"வறண்ட நிலம் போல் காய்ந்த*
*வறியோர் வாழ்வை*
*வற்றவைக்கும் பழங்குப்பைப்*

*போக்கைத் தீய்த்து*
*பரண் ஏறிப்பதுங்கியுள*
*செல்வ நீரைப்*
*பஞ்சையரின் வாழ்விற்கே*
*திருப்ப வேண்டும்!"*

*"................... நித்தம்*
*நற்கரும்போ ஆலைவாய்ப் புகுதல்போலே*
*நலிவேற்றுத் தவிப்பதுவோ*
*பஞ்சையர்கள்?"*

---

*"பழக்குலை கண்டால் பாய்ந்து*
*பசி தீர்க்கும் பறவைகள் போல்"*

இவ்விதம் புதுக் கருத்துக்களைச் சிந்தனையால் புடைத்தெடுத்துப் புது உவமை புது நடையில் வடித்தெடுத்தே புதுமைக் கவிதையினைப் புனைகின்றார் கவிஞர். இது நேர்மை இது தீமை எனத் துணிந்தே பாடும் முழுத் திறனும் பெற்று விளங்குகிறார் கவிஞர். "ஒளிவீசும் உயர் நோக்கில், அறிவுப் போக்கில், விளைநிலமாம் மனிதகுலம் தழைப் பதற்கே ஏலுமட்டும் சீர்திருத்தம் இனித்திருக்கும் எழுச்சி சேர்" கவிதை இலக்கியம் இயற்றிவரும் 'எழுச்சிக் கவிஞர்' பொன்னடியானின் இலக்கியப் பணி பாரில் மென்மேலும் சிறந்தோங்கி, எல்லையிலாப் பெயரும் புகழும் அடைய வேண்டி வாழ்த்துகிறேன்.




**கவின்மிகு கடற்கரை கவியரங்கம்**



# பொன்னடி..!

## கவிஞர் முருகசுந்தரம்



***(கவிஞர் முருகுசுந்தரம் தமிழ்க் கவிதைச் சோலையில் உலவும் தன்னிகரற்ற கவிஞர். பாவேந்தர் பரம்பரையின் பெருமைக் குரியவர் பாவேந்தர் விருதுபெற்ற கவிஞர். பாவேந்தரின் பாசமிகு நட்புக்கும் அன்புக்கும் உரியவரானவர். பாவேந்தரின் உண்மை வரலாற்றை, நினைவுகளை நூல் வடிவாக்கி வரலாறு படைத்து வாழுங்கவிஞர்)***

***1962–ஆம்*** ஆண்டு ஜனவரியில் ஒரு நாள் மாலை 6.30 மணியிருக்கும். தியாகராய நகர் இராமன் தெருவில் குடியிருந்த பாவேந்தரைப் பார்ப்பதற்கு அவர் வளமனையில் , நுழைந்தேன். ஒல்லியான ஓர் இளைஞர் முன் கூடத்தில் மேசைமுன் அமர்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தார் குனிந்த வண்ணமாக. நான் உள்ளே நுழைந்ததும் அவ்விளைஞரின் குனிந்த தலை விசுக்கென்று நிமிர்ந்தது. ஆனால், அவர் நிமிர்ந்த வேகம், நாண் அறுந்த வில் நிமிர்வதை எனக்கு நினைவு படுத்தியது. நீண்டு மெலிந்த முகம். ஆனால், துறு துறுப்பான கண்கள்.

"யார் நீங்கள்?" என்றார் அவ்விளைஞர்.

"நான்தான் முருகுசுந்தரம். சேலம்" என்றேன்.

"ஓ! நீங்கள்தானா? உங்கள் பாடலை நான் குயிலில் பார்த்திருக் கிறேன். ஐயாவைப் பார்க்க வந்தீரா? உட்காருங்கள். ஐயா சாப்பிடு கிறார். வருவார்" என்றார் அவர். அவர் பேசும் போது அவருடைய உடம்பில் எல்லா உறுப்புகளுமே குலுங்கின. உணர்ச்சிப் பிழம்பாகக் காட்சியளித்தார் அவ்விளைஞர்.

"நான்தான் பொன்னடியான், ஐயாவின் செயலர் என்றார்" அவ்விளைஞர்.

யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே என்பது போல் வீடே அதிரும்படி கனைத்துக் கொண்டு பாவேந்தர் வந்தார். நான் எழுந்து நின்றேன் என்பதை விட அந்தக் கனைப்பு என்னை எழுந்து அவசரமாக நிற்க வைத்தது என்பதே பொருத்தம்.

பாவேந்தரோடு என் அறிமுகம், உரையாடல் முடிந்தபின் சுருள் கம்பி போல் உட்கார்ந்திருந்த இளைஞரைக் காட்டி, "தோ பொன்னடி நம்ம பையன். நல்லாக் கவிதை எழுதுவார். அவர் தான் இங்கே எல்லாம்" என்று அறிமுகப்படுத்திவிட்டு என்னைச் சாப்பிடச் சொன்னார்; சாப்பிட்டேன்.

"தோ பொன்னடி நானும் இவரும் ராஜகுமாரிக்கு சினிமா பார்க்கப் போறோம்" என்றார் பாவேந்தர். இரண்டாவது சினிமா பார்த்துவிட்டு வந்தோம். பொன்னடி கதவைத் திறந்து விட்டார்.

பாவேந்தர், "பொன்னடி இவர் இங்க படுத்துக்கறார் (என்னைப் பார்த்து) படுத்துக்குங்க... காலையில் கல்லூரி போகணுமா. 'அடிக்கடி வாங்க" என்று கூறிவிட்டு உள்ளே சென்று படுத்துக் கொண்டார். நான் அதிகாலையில் எழுந்து கல்லூரி விடுதிக்குச் சென்று விட்டேன்.

அந்த வாரம் ஞாயிற்றுக்கிழமை நான் என் உறவினர் வீட்டுக்குச் சென்று விட்டேன். பொன்னடி என் கல்லூரி விடுதிக்குத் தேடி வந்து பார்த்து விட்டு, நான் இல்லாததால் நேராகக் கல்லூரி முதல்வர் பெருமாள், அறைக்குச் சென்று "உங்கள் கல்லூரி விடுதியில் தங்கியிருக்கும் முருகுசுந்தரம் என்ற இளைஞரைப் பாரதிதாசன உடனே பாாக்க வேண்டும் என்று சொல்லி அனுப்பியிருக்கிறார். வந்தால் வரச் சொல்லுங்கள்" என்று கூறி விட்டு வந்து விட்டார். நான் மாலை விடுதி திரும்பியதும் கல்லூரி முதல்வர் கூப்பிட்டனுப்பியதாக ஒருவர் வந்து கூறினார்.

நான் என்னமோ ஏதோ என்ற அச்சத்தோடு முதல்வர் வீட்டுக்குச் சென்றேன். என்னைப் பார்த்த முதல்வர் இரண்டு முறை தொண்டையைச் செருமி விட்டு (அடிக்கடி செருமுவார்) "பாரதி தாசனை உனக்குத் தெரியுமா?" என்று கேட்டர்.

"தெரியும். ஏன்?" என்றேன்! "உன்னை உடனே வரச் சொல்லி யிருக்கிறார். போ!" என்றார்.

"சரி! என்று நான் புறப்பட்டேன். "நீ கவிதை எழுதுவியா? என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். 'ஆமாம்' என்றேன் அவர் சிரித்தார். பிறகு நான் கல்லூரியை விட்டு வெளியேறும்வரை முதல்வரின் அபிமான மாணவன். பாரதிதாசன் என்ற மந்திரச் சொல் எனக்குத் தேடித்தந்த பெருமை அது.

உடனே ராமன் தெருவுக்கு ஓடினேன். உள்ளே நுழைந்ததும் உரிமையோடு, "என்ன நீங்க எங்கே போனீங்க, ஐயா உங்களுக்காக இன்று கோழி, மீன் எல்லாம் வாங்கிச் சமைக்கச் சொன்னார்! 'போய் அந்தத் தம்பியைக் கூட்டிவா'ன்னு அனுப்பிச்சார். உங்களை விடுதியிலே வந்து பார்த்தா காணோம். ஐயாவைப் பாருங்க" என்றார்.

பொன்னடியின் உரிமையான அன்புப் பேச்சு என்னை உலுக்கி விட்டது. நான் பாவேந்தரைப் பார்த்தேன்.

“ஏ வல்ல? தோ கோழி, மீன் எல்லாம் உனக்காக சமைக்கச் சொன்னேன். தாயாரம்மா சாப்பாடு போடு' என்று கோபம் கலந்த அன்பு கட்டளையிட்டார். சாப்பிட்டு விட்டுத் திரும்பினேன்.

பாவேந்தர் நொடிக்கொரு தரம் ‘பொன்னடி பொன்னடி’ என்று கூப்பிட்டுக் கொண்டேயிருப்பார். இவர் ‘என்னங்கய்யா!’ என்று ஓடிக் கொண்டே இருப்பார். பொன்னடி என்ற சொல்லை உச்சரிப்பதில் ஓர் உருக்கம் இருக்கும். பாவேந்தர் தமது மனைவியைக் கூட அவ்வளவு உருக்கமாக அழைத்திருப்பாரோ என்று கூட நான் ஐயப்படுவேன். குருவுக்கும் பக்தனுக்கும் அப்படி ஒரு பந்தம்.

பொன்னடியோடு எனது நெருக்கம் அதிகமாயிற்று. ‘ஐயாவை’ப் பற்றிப் பேசுவது எங்களுக்கு இன்பமான பொழுது போக்கு. ஓயாமல் பேசிச் சிரிப்போம். பொன்னடி செந்துறை அரசினர் பள்ளியில் மாணவ னாக இருந்தபோதே புரட்சிக்காரர். தமிழ் மறவர் பொன்னம்பலனாரின் தலைமாணாக்கர். மாணவர் தலைவர், எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற கோட்பாட்டுக்காரர். பள்ளிக் கரும்பலகையில் பாவேந்தர் பாட்டை எழுதல், ‘வகுப்பில் உள்ளேன் ஐயா’ சொல்லல், மாணவர் தொழுகைக் கூட்டத்தைத் தனித் தமிழில் நடத்தல், பள்ளித் தலைமை யாசிரியர் மகாலிங்கரின் வயிற்றெரிச்சலை இக்காரணங்களால் கிளறி விடல். இவையெல்லாம் இவர் செயல் திட்டங்கள். கடைசியில் போராட்டம. அடி தடி போலீஸ் வருகை, பள்ளியிலிருந்து வெளி யேறல், பாவேந்தரையடைதல் யாவும் பின் விளைவுகள்.

இம் மாணவர் போராட்டத்தை ஆதரித்தும் தலைமையாசிரியர் மகாலிங்கரைக் கண்டித்தும் விடுதலையில் குத்தூசியார் கூட எழுதி யிருந்தார். பாவேந்தர் சென்னைக்கு வந்து படப்பிடிப்புக் கம்பெனி துவங்கியதும், தமிழ் மறவர் பொன்னம்பலனார் பொன்னடியைக் கொண்டு வந்து பாவேந்தரிடம் விட்டுச் சென்றார்.

பாவேந்தர் வாழ்ந்த ராமன் தெரு வீடு எப்பொழுதும் பரபரப்பாக இருக்கும். கவிஞர்களும், கலைஞர்களும், நடிகர்களும் தமிழறிஞர்களும் அரசியல் தலைவர்களும், மாணவர்களும் வந்து போய்க் கொண்டிருப் பர். வீட்டில் எப்போதும் சமாராதனைதான். விருந்து இல்லாத சாப்பாடு பாவேந்தருக்கு மருந்து. பரபரப்பான அந்த வீட்டில் பொன்னடி அப்போது தேனீ போலச் சுற்றி வந்து கொண்டிருப்பார்.

ஒரு நாள் இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு ஓய்வாக போர்டிகோவில் பிரம்பு நாற்காலியைப் போட்டுப் பாவேந்தர் உட்கார்ந்து கொண்டிருந்தார். நானும் பொன்னடியும் கூடத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்போது பாவேந்தர் ‘பொன்னடி’ என்று குரல் கொடுத்தார். பொன்னடி எழுந்து ஓடினார்.

பாவேந்தர் மூக்கின் மேல் விரல் வைத்த வண்ணம் “என்ன மயக்கும் மணம்?” என்று கேட்டார். உடனே நானும் பொன்னடியும் மணம் வந்த திசை நோக்கிச் சென்றோம். பக்கத்து வீடு புகாரி சாகிப்பின் வீடு. அந்த

வீட்டு வேலியில் கொத்துக் கொத்தாக ஒரு செடி பூத்துக் குலுங்கியது. அது ஏதோ ஓர் வகைப்பூ, வேகமான மணம், ஒரு பூங்கொத்தைப் பொன்னடி ஒடித்துக் கொண்டுபோய்ப் பாவேந்தர் கையில் கொடுத் தார். நீண்ட நேரம் அதை மூக்கில் வைத்து முகர்ந்து கொண்டிருந்த பாவேந்தர் சட்டென்று உள்ளே சென்று விட்டார். அடுத்த நாள் காலையில் அவர் படுக்கைக்கருகில் ஒரு காகிதம் கிடந்தது. அதை எடுத்துக் கொண்டு ஓடிவந்தார் பொன்னடி. "முருகு இதைப் பார்த் தீர்களா? 'இரவின் இளவரசி' என்ற பெயரில் ஒரு பாட்டு" என்று சொல்லி என்னிடம் கொடுத்தார். இரவில் பாவேந்தர் கையில் கொடுத்த பூ அழகிய கட்டளைக் கலித்துறையாக மலர்ந்திருக்கிறது.

பாவேந்தர் உலகம் போற்றும் ஒரு மகா கவிஞராக இருக்கலாம். ஆனால், உலகியலில் அவர் ஓர் குழந்தை. யார் எதைச் சொன்னாலும் நம்பிவிடுவார். அவரை எளிதில் ஏமாற்றி விடலாம்-பலர் அவரை ஏமாற்றிச் சுரண்டித்தின்று கொண்டிருந்தனர். அவருடைய குயில் ஏட்டுக்காக வரும் பத்திரிகை காகிதத்தை குயில் ஏடு நின்றிருந்த நேரத்தில் வெளியில் விற்கும் பொறுப்பை ஏற்றிருந்த ஒரு குடியாத்தக் காரர் நிறைய நடுக்கொள்ளையடித்தார். அவரும் பாவேந்தருடைய கார் டிரைவ்ரும் கொள்ளையடிப்பதில் கூட்டாளிகள். ரூ. 5000 கிடைத்தால் அதில் ரூ. 3000 த்தை எடுத்துக் கொண்டு பாவேந்தரிடம் ரூ. 2000 தான் கொடுப்பார்கள். பாவேந்தர் ஏன் என்று கேட்டுக் கொள்ள மாட்டார். கொடுத்த பணத்தை வாங்கிக் கொள்வார். இதை எல்லாம் கண்டு கொண்ட பொன்னடி விழிப்படைந்து, அவர்கள் நடுக்கொள்ளைக்குத் தடுப்பிட்டார். அவர்கள் எரிச்சல் அடைந்தனர்.

பாவேந்தர் எப்போதும் பணத்தைப் போற்றிப் பாதுகாக்கத் தெரியாதவர். அவர் கட்டிலுக்கருகில் இருந்த ஒரு தோல் பெட்டியில் பணம் கற்றை கற்றையாக இருக்கும். பெட்டி எப்போதும் பூட்டில்லாமல் திறந்திருக்கும் அடையா நெடுங்கதவு! ஒரு முறை கார் டிரைவர் அப்பெட்டியிலிருந்து பணத்தை ஆயிரம் ரூபாய் அளவில் எடுத்துக் கொண்டு, பாவேந்தரிடம் அன்பான விடையும் பெற்றுக் கொண்டு, பொங்கலுக்காகச் சொந்த ஊரான தாராபுரம் சென்று விட்டான். டிரைவரின் கூட்டாளியான குடியாத்தக்காரர் குற்றத்தைப் பொன்னடி மேல் திசை திருப்பிவிட்டார். பொன்னடி மீது குற்றம் சொன்னதைப் பாவேந்தரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவர் கொதித்தெழுந்தார். "என்னடா சொன்ன? பொன்னடியையாட குற்றம் சொல்ற? போடா வெளியே; செருப்பால் அடிப்பேன்" என்று கத்த ஆரம்பித்து விட்டார். அன்று ஓடிய குடியாத்தக்காரர் பிறகு பாவேந்தர் வீட்டை மிதிக்கவே இல்லை.

பொன்னடி அப்போது மிகவும் துணிச்சலோடு நடந்து கொண்டார். அவருக்குத் தெரியும், கார் டிரைவர்தான் பணத்தை எடுத்திருக்க வேண்டுமென்று. பாவேந்தர் 'விட்டுடுப்பா' என்று சொல்லியும் கேளாமல் போலீஸில் புகார் கொடுத்தார். இரண்டே நாளில் போலீசார் தாராபுரத்திலிருந்து டிரைவரைக் கையும் களவுமாகப் பிடித்து வந்து விட்டனர். அந்த நிலையில்கூடப் பாவேந்தர் அந்த

டிரைவரைத் தண்டிக்க விரும்பவில்லை. போலீஸ் புகாரைப் பொன்னடியை அனுப்பித் திரும்பப் பெற்றார்.

ஒரு கவிஞனுடைய வாழ்க்கையில் உணர்ச்சி வசப்படக்கூடிய நிகழ்ச்சி எது நடந்தாலும் அது இலக்கிய வடிவம் பெற்றுவிடும். பாவேந்தரின் அரிய படைப்புகள் பல அப்படி வெளிவந்தவைதாம். நல்லவர்கள் என்று நம்பப்பட்டவர்கள் தம்மை ஏமாற்றிய இந்நிகழ்ச்சி பாவேந்தரின் உள்ளத்தைப் பெரிதும் பாதித்தது. **இந்த நல்லவர்-ஏமாற்றுக்காரர் தான் பாவேந்தரின் எல்லப்பன், இருசப்பன் பாத்திரப் படைப்புகள். (பொன்னடியை எல்லப்பனாக்கிப் பாவேந்தர் 'இறைப்பது எளிது பொறுக்குவது அரிது' என்ற தலைப்பில் குயிலில் கவிதை எழுதினார்).**

சிறந்த மேதைகளிடம் நெருங்கிப் பழகியவர்களின் வாழ்க்கை, அம்மேதைகளால் பெரிதும் பிரிக்கமுடியாத பாதிப்புகளைப் பெறு கின்றது. நானும் பொன்னடியும் பாவேந்தரின் தொடர்பால் பெரிதும் பாதிப்படைந்தவர்கள். பாவேந்தரின் இறப்புக்குப் பின்னும் அவர் தொடர்பு எங்களைப் பெரிதும் பாதித்தது. எங்களை வழிநடத்திச் செல்லும் ஆக்க சக்தியாகவே மாறிவிட்டது. பாவேந்தரோடு பழகியவர் கள் யாராக இருந்தாலும், அவரை எங்கள் குடும்பத்துள் ஒருவராக மதிக்கும் உள்ளப் பாங்கு ஏற்பட்டு வட்டது. பொன்னடியைப் பார்க்கும் போது எனக்கும், என்னைப் பார்க்கும் போது பொன்னடிக்கும் இத் தகைய உணர்வு பீறிட்டெழுவதுண்டு. நாங்கள் எங்கு சந்தித்தாலும் எங்களைப் பற்றியோ எங்கள் குடும்பத்தைப் பற்றியோ பேசும் வழக்கம் கிடையாது; பாவேந்தரைப் பற்றியும், அவரிடம் பழகிய பழைய நாள் நினைவுகளையும் அசை போட்டு மகிழ்வதே எங்கள் வேலை. பாவேந்த ருக்குப் பிறகு அவர் புகழைப் பரப்புவதை எங்கள் கடமைகளுள் ஒன்றாகவே நாங்கள் கருதி வந்திருக்கிறோம். அதை எங்களால் முடிந்த வரை செய்தும் வருகிறோம்.

கவிஞர் பொன்னடியான் நடத்தும் முல்லைச்சரம் 25 ஆண்டுகளாக வெளிவருகின்றது. தமிழ் நாட்டில் கவிதை இதழ் நடத்தி யாரும் பணம் சம்பாதிக்க முடியாது. கைப் பணம்தான் போகும். பாவேந்தருக்கே அந்த நிலை என்றால் பொன்னடி பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. என்றாலும் பாவேந்தரின் நினைவுகளை தமிழரிடையே பகிர்ந்து கொள்ளவும், பாவேந்தர் புகழைப் பரப்பவும் ஒரு சிறந்த கருவியாகவே பொன்னடி முல்லைச்சரத்தைத் தொடர்ந்த இழப்புகளின் நடுவே நடத்தி வருகிறார். இப்பணி மிகவும் பாராட்டுக்குரியதாகும். பாவேந்தரை எட்ட நின்று தரிசித்தவர்கள் எல்லாம், அவரோடு கட்டிப் புரண்டதாக எழுதிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், பாவேந்தரின் கடைசிக்கால வாழ்க்கையில் பொன்னடி அவருடைய உள்ளமாக, உணர்ச்சியாக, ஊன்றுகோலாக, விளங்கியவர் என்பது மறக்க முடியாத உண்மை.

வாழ்க பொன்னடி!

(1985-ஆம் ஆண்டு இலக்கியப்பணி வெள்ளி விழா மலரில் இடம் பெற்ற கட்டுரை).

# வெறுக்கு விருதுகள் விழா எடுக்கின்றன?

## இலக்கிய சித்தர்
## வலம்புரி ஜான் எம்.ஏ.பி.எல்.

கவிதை எல்லோருக்கும் கனிந்து விடுகிறது. அது கவிதையா என்பது ஆய்ந்து பார்ப்பதற்குரியது.

பளபளக்கிற பட்டாக் கத்திகளோடு அலைகிற பலருக்கும்கூடப் பாட்டு வந்து விடுகிறது.

கொலைகாரர்கள் கவிதை எழுதுகிறார்கள். ஆகவே, எது கவிதை, எவர் கவிஞர் என்பன போன்ற கேள்விகள் முன்னிலும் பலமாக இப்போது கேட்கப்பட்டு வருகின்றன.

எப்போதும் வருவதல்ல கவிதை; எப்போதோ வருவது கவிதை. நினைத்தால் வருவதல்ல கவிதை; இதயம் கனத்தால் வருவது கவிதை என்று நான் அடிக்கடி சொல்லி வருகிறேன்.

ஒருவன் எழுதுகிற எல்லாம் கவிதை அல்ல. கவிதை எழுதுகிற எல்லாருமே கவிஞர்களுமல்லர்.

வசந்தமயமான வாலிப வார்த்தைகள் மாத்திரம் கவிதைகளாகி விடுவதில்லை. அப்படிப் பார்த்தால் வானவில்லும், வளருகின்ற நிலவும், தாழை மடலும், தங்க நிறக்கடலும், சோலை எழிலும், சுகமான மலரும் எல்லாமே கவிதைகள்தான்.

உண்மையைத் தேடுவது ஒன்றுதான் கவிதை. 'உண்மையைத் தேடுவதுதான் கவிதை' என்றால் பொன்னடியான் எழுதிய எல்லாமே கவிதைகள்தான்.

*"உண்மையின் மீது நம்பிக்கை வைத்திடு!*
*அதுவே என் மதம் தோழனே!*
*உயிர்களின் மீது எப்போதும் அன்புவை!*
*இதுவே என் மனம் தோழனே!"*

என்பது கவிஞர் பொன்னடியான் அவர்களின் கவிதை வரிகள்.

இலவம் பஞ்சு போல எங்கெங்கோ பறந்து திரிவதல்ல கவிதை.

வெடித்தால் விழுகிற, விழுந்தால் முளைக்கிற ஆமணக்கு வித்துப்போல, குறிப்பான நோக்கமுள்ளது கவிதை.

அப்படிப் பார்த்தால் கவிஞர் பொன்னடியான் அவர்களின் கனல் மணக்கும் கற்பூரச் சிந்தனைகள் அனைத்திற்கும் ஒரு காவிய நோக்கமுண்டு.

கோடை காலத்தில் தட்டாமல் கிடைக்கிற தற்பூசனிப் பழங்களைப் போல கவிஞர் பொன்னடியான் அவர்களின் கவிதைகள் மனித சமுதாயத்தின் தாகத்தைத் தீர்ப்பதற்காகக் காலம் தந்திருக்கிற தாயத்து மாத்திரைகள்.

*"ஒரு,*
*புல்முனை அளவான*
*தீப்பொறி கிடைத்தாலும்*
*பூமிக்கு ஒளியூட்டு வேன்!*
*சிறு,*
*நெல்மணி கிடைத்தாலும்*
*அதையே நான் விளைவாக்கி*
*நில மக்கள் பசி போக்குவேன்"*

- என்று நம்பிக்கை ஒளி பாய்ச்சுகிறார்.

கடினமாக எழுதுவதுதான் கவிதை என்று ஒரு காலத்தில் கருதப் பட்டது. காட்டு மூலிகை போல் கண்டுபிடிக்க இயலாமல் ஒரு கருத்து, கண்ணை மூடிக்கொண்டு கிடந்தால்தான் அது கவிதை என்றே கருதப்பட்டது.

கவிதை அடிமைத் தனத்தின் சங்கிலிகளைக் கட்டவிழ்த்து விட்டவர் கள் உலகம் முழுவதும் இருக்கிறார்கள்.

தமிழில் ஓர் இருண்ட இடைவெளிக்குப் பிறகு பாரதி பூத்தபோது தமிழ்க் கவிதைகள் தங்களது அழகு முகத்தை மறைத்துக் கொண்டிருந்த அவசியமற்ற பர்தாக்களை எறிந்துவிடத் தொடங்கின.

கவிதாலயத்திற்குள் கடுக்கன் போட்ட பண்டிதர்கள் மாத்திர மல்லாமல் கால் செருப்பில்லாத பாமரர்களும் நடைபோடலாம் என்கிற கவிதை மக்களாட்சி கண்விழித்த காலத்தில் எழுதப் புறப் பட்டவர் கவிஞர் பொன்னடியான்.

ஆகவேதான் அவரது கருத்துக்கள் மூளையைச் சோதிக்கிற கணக்காக இல்லாமல் இதயத்தைத் தடவுகிற கவிதைகளாக எழுந்தன.

எளிமைதான் அழகு. எளிமை அழகாக இருப்பதற்குக் காரணம் அது உண்மையாக இருப்பதே.

எது எளிமையாக இருக்கிறதோ அது அழகாக இருக்கிறது.

எது அழகாக இருக்கிறதோ அது உண்மையாக இருக்கிறது.

எது உண்மையாக இருக்கிறதோ அதுவே உயர்வாகப் போற்றப் படுகிறது.

அந்த வகையில் கவிஞர் பொன்னடியான் அவர்களின் பாடல்கள் உண்மையின் ஊர்வலமாக, ஆத்மாவின் ஆனந்த ராகமாக இந்த உலகத்தில் எப்போதும் வாழ்ந்திருக்கும்.

இருபதாம் நூற்றாண்டுக் கவிதை இயக்கத்தில் கவிஞர் பொன்னடியான் எங்கே நிற்கிறார்?

உலகத்தைப் பாடுவதற்காகப் புறப்பட்ட சிலபேர் தங்களது தாய் தந்தையரை அறிந்து கொள்ளாமல் தவறிழைத்தார்கள்.

எஸ்கிமோக்களுக்காகச் சிலர் அழத்தெரிந்து வைத்துக் கொண்டார் களே தவிர எள்ளுருண்டை கிடைக்காத உள்ளூர் ஏழைகளைப் பற்றி அவர்கள் நினைத்தார்கள் இல்லை.

இன்னமும் சிலர் தமிழ்நாடு, தமிழ் மொழி, பாரம்பரியப் பெருமைகள் இவற்றைப் பற்றிப் பேசுவதே தங்களது உலகம் தழுவிய பார்வைக்குப் பழுதாக நின்றுவிடும் என்றே கருதி வந்திருக்கிறார்கள்.

கவிஞர் பொன்னடியான் அவர்களின் வெற்றி, உலகம் தழுவிப் பாடமுடிந்த அவரால் தனது உள்ளூரான தமிழகத்தை உவப்போடு நேசிக்க முடிந்தது என்பதுதான்.

கவிஞர் பொன்னடியான் வேரை மறக்காத விருட்சம். அஸ்தி வாரத்தை வெறுக்காத அரண்மனை. ஆகவேதான்,

*"இருக்கும் பரம்பரைப் பெயரைக் கெடுத்திட என்றும் முனையாதீர்*
*இதயக் கதவினை மூடிமூடி வைத்தே என்றும் வளராதீர்*
*அப்பனும் பாட்டனும் சேர்த்த புகழினை அழிக்க நினையாதீர்*
*அவர்கட்கு மேலே பெரும்புகழ் சேர்த்திடும் ஆசை குறையாதீர்"*

என்று எழுதுகிறார்.

"அவார் நாளைக்கு மாண்டால், நான் இன்றைக்கே இறந்து போவேன்", என்று எழுதிய சோவியத் கவிஞனைப் போல,

*"என்னுயிர் மூச்சும் என்னுடற் பேச்சும்*
*எல்லாம் தமிழினுக்கே*
*என்விழி வீச்சும் என்புகழ்ப் பூச்சும்*
*எல்லாம் தமிழினுக்கே"*

என்று கவிஞர் பொன்னடியான் கனன்று எழுதுகிறார்.

'தமிழ்', 'தமிழர்', 'தமிழ் நாடு' என்று பாடிக்கொண்டிருப்போர் ஒரு வகை. 'உலகம்', 'மனிதம்', 'சமுதாயம்' என்று கருதிக் கொண்டிருப்போர் வேறு வகை. இவை இரண்டும் வேறுவேறு என்கிற தவறான மயக்க நிலையிலிருந்து தப்பித்துக் கொண்டிருந்த கவிஞர்களின் தலைவர் கவிஞர் பொன்னடியான்.

*'வேரும், விருட்சமும் ஒன்றுதான்;*
*நெல்லும், வயலும் ஒன்றுதான்;*
*இது சொல்லுவதற்குச் சுலபம்;*
*கண்டுபிடிப்பதற்கோ கடினம்.'*

கவிஞர் பொன்னடிக்கு என்ன தனிச்சிறப்பு?

பலரும் கவிதை எழுதுகிறார்கள்.

அண்ணன் பொன்னடி அவர்கள் கவிதையாகவே வாழ்கிறார்.

எனது எழுத்துக்களிலே கூட அவைகள் பிஞ்சுக் குழந்தைகள் என்பதால் அவற்றிற்கு நெற்றியிலும் பொட்டு வைக்கிறேன்; கன்னத்திலும் பொட்டு வைக்கிறேன்.

பொன்னடியான் அவர்களின் பூகம்பக்கருத்துக்கள் ஆடைகள் பூண்டவை; அணிகளைத் துறந்தவை.

வெள்ளாடை கட்டிய விதவைகள் இல்லை; வெளிக்கிளம்பி வீரம் காட்டும் வித்தகப் பெண்கள்.

கவிஞர் பொன்னடியானின் கவிதை நடை இயல்பாக அவரிடத்தில் வந்ததன்று; தனது கவிதைக் கருத்துக்கள் எல்லோரிடத்திலும் சென்று சேர வேண்டும் என்பதற்காக அவர் தமது நடையைக் கூட நளினமாக்கி இருக்கிறார் என்று நான் நினைக்கிறேன்.

அதற்குக் காரணம் கவிதை என்பது கற்பனை அல்ல; கருவி என்பதைக் கண்டு கொண்டவர் கவிஞர் பொன்னடியான்.

*"எல்லாரும் கவிதை எழுதிடுங்கள்!*
*இனிய நன் நாட்டை எழுப்பிடுங்கள்!*
*பொல்லாங்கு எல்லாமும் போக்கிடுங்கள்!*
*புதுமையைத துறைதோறும் தேக்கிடுங்கள்!*

என்கிறார் கவிஞர் பொன்னடியான்.

கவிதையைக் கருவி என்று கண்டு கொண்டவர்களால் மாத்திரமே சமுதாயம் செழித்து வருகிறது. மற்றவர்களெல்லாம் அந்தி வானத்தை இழைத்துக் கொண்டு ஆன்மாவைப் பார்க்க வைக்கப் போவதாக சோதனைக் குழாய்களை உடைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

உதாரணம் ஒன்று...

*"சந்தர்ப்பமென்னும்*
*சஞ்சலக் காற்றால்*
*மேலே மேலே*
*பறந்து கொண்டிருக்கும்*
*எச்சில் இலைகளே!*
*வெற்றிக் களிப்பின்*
*உச்சியில் மிதக்கும்*
*உங்களுக் கொருசொல்!*
*ஏமாற்றுக் களுக்கே*
*இரையாகும் ஏழைகள்*
*இன்றில்லா விடினும்*
*நாளை மறுநாள்*
*அறிவெனும் விளக்கால்*
*கண்விழித் தெழுவர்*

*தொட்டால் பொசுக்கும்*
*மின்சாரக் கம்பியாய்*
*அன்னவர் மாறும்*
*அந்தநந் நாளில்*
*நீங்கள் எல்லாம்*
*பொசுங்கிக் கருகுவீர்*
*நிச்சயம் நிச்சயம்*
*நிச்சயம் அறிவீர்!*

இளைஞர் உலகில் இன்றில்லாதிருக்கிற ஒன்று நம்பிக்கை. போதுமான அளவிற்கு அவர்களுக்கு ஊக்கம் தருவார் இல்லை. ஊக்கம் தருவதற்காக உற்சாகம் அளிக்கும் சிலரை உரசிப் பார்ப்பவர்களும் உலைத்துப் போட வருகிறவர்களுமே அதிகமாக இருக்கிறார்கள். இப்படிப்பட்ட பாதகர்கள் சிலருக்குப் பாட்டும் வந்து விடுகிறது.

இவர்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டு, இளைய கவிஞர்கள் எண்ணற்றவர்களை ஆதரித்து வருகிறவர் கவிஞர் பொன்னடியான் அவர்கள்.

மற்றவர்கள் கவிதைகளை உருவாக்குகிறார்கள். கவிஞர் பொன்னடியான் கவிஞர்களை உருவாக்குகிறார்.

பாரதி, பாஞ்சாலி சபதத்தைப் படைத்து அளித்தபோது 'எனக்குப் பின் வருகின்ற வரகவிகளுக்கு' என்று தமது அர்ப்பணத்தைத் தொடங்குகிறார். அந்த வழியில் பாவேந்தரின் பண்பு நலன் தெரிகின்ற பயிர் நிலமாக விளங்குகின்ற கவிஞர் பொன்னடியான், ஏராளமான இலக்கியப் பறவைகள் எழுந்து பறக்கின்ற ஆரண்ய அழகுமிக்க கூடாரமாகத் திகழுகின்றார்.

இன்று கவிஞர் பொன்னடியான் ஒரு தனி மனிதரில்லை.

அவரே ஒரு கவிதை இயக்கம்.

தாய்மொழியை வணங்கி, சாதி சமயச் சுவர்களுக்கு அப்பால் தான் வாழ்ந்த சமுதாயத்திற்குத் தொடர்ந்து, தொய்வின்றி உண்மைத் தொண்டாற்றிய இந்த உயரிய கவிஞரை நாடு போற்றும்.

இந்தக் கவிஞரின் காலத்தில் வாழ்பவன் அவரோடு கலந்து பழகுவதும் அவருக்கு விழா எடுப்பதும் என்னைப் பயன்பட வாழவைக்கிறது என்று கருதுகிறேன்.

அவருக்கு எடுக்கின்ற விழாவால் நான் பெருமை பெறுகின்றேன். காரணம், அவரால் தமிழும், சமுதாயமும் தழைக்கின்றன.

இன்று இல்லாத பாவேந்தரை இருத்தி வைக்கிற பொன்னடியான் அவர்களின் புகழ்க் கவிதைகள், ஏவுகணைகளைப் போலக் கண்டம் விட்டுக் கண்டம் பறக்கத் தொடங்கிவிட்டன!

பல்வேறு மொழி அன்பர்களும் தங்கள் தங்கள் மண்ணில் கவிதை வாய்க்கால்களை வடிக்கத் தொடங்கி உள்ளனர்.

இப்போது கவிஞர் பொன்னடியான் அவர்களின் கருத்து வெள்ளம் எங்கெங்கோ நுழைந்து திரிந்து வருகிறது. அவரது எண்ணங்கள் உலகம் முழுவதும் பாய்ந்து பரவ வேண்டும் என்பது எனது ஆவல்.

வாழுகின்ற போதே வரலாறு ஆக வல்ல இந்தக் கவிஞரை வாழ்த்து வதிலும், வணங்குவதிலும் பூரிப்பும், பெருமிதமும் அடைகிறேன்.



## கவிஞர் முருகுசுந்தரம்

காான்வெண்ட் ரோடு
சேலம் 4.
3-6-71

அன்புள்ள பொன்னடியார்க்கு,

முருகு வணக்கம்.

பல அலுவல் தொல்லையின் காரணமாக உடனே மறுமடல் எழுத இயலவில்லை. மன்னிக்கவும். தங்கள் துணைவியர்க்கு என் வணக்கமும், செல்வியர்க்கு என் வாழ்த்தும் உரித்தாகுக. தாங்கள் கேட்ட குறிப்பை அடுத்த பக்கத்தில் எழுதியுள்ளேன். 'இரவின் இளவரசி' என்று அவர் எழுதிய பாடலும், அது எழுதப்பட்ட சூழ்நிலையும் பாவேந்தர் இறப்பின்போது நிகழ்ந்த நிகழ்ச்சிகளும் விரிவாக எழுதுங்கள். ஏனென்றால் இறப்பின்போது உடன் இருந்தவர் தாங்களே. அவர் இறப்பு, இறப்புக் காலத்தில் அவருக்கு ஏற்பட்ட நலிவு, சென்னை வாழ்க்கையில் அவர் பட்ட சீரழிவு, படத்துறை அவரைப் படுத்தியபாடு எல்லாம் உங்களுக்குத்தான் தெரியும். பாவேந்தரின் இறுதி அத்தியாயம் உங்கள் கைவண்ணத்தில்தான் விளக்கம் பெற வேண்டும். கட்டுரை பத்து பக்கங்கட்குக் குறையாமல் இருக்கலாம். தங்கள் புகைப்படம் வேண்டும்.

– முருகு

# ஓர் இதயத்தின் ஏக்கம்!

## வியாசை சரவண குமார் எம்.ஏ.,எம்.எட்.



***முன்னுரை:*** ஒரு சாதாரண மனிதனின் ஏக்கம் நிறைவேறும்போது அவனது சுயநலமே பயன்பெறும். ஆனால் ஒரு கவிஞனின் ஏக்கம் நிறைவேறும்போது அங்குச் சமுதாய நலன் மலரும். கவிஞர் பொன்னடியானின் இதய ஏக்கமான இக் குறுங்காவியம், இளைய சமுதாயம் வாழ வழிகாட்டும் ஒரு கைகாட்டி.

***காவியக் கதை:*** இஃது ஒரு குறுங்காவியமானதால், காவியக்கதை ஒரு குறுநாவலாகவே அமைந்துள்ளது. காதல் கதைதான். ஆனால வில்லன் இல்லாத காதல் தை. மக்கள் கவிஞன் பண்ணரசன் பொன் மலரைக் காதலிக்கின்றான். அவள் வேற்றூருக்கு மாற்றலாகிப் போகின்றாள். பிரிவுத் துயரில் வாடும் காதலனின் கவிதைமடலே நூலின் தொடக்கம். காதலர்கள் தங்கள் காதலை வெளிக்காட்டாமல் அடக்கமாக நடந்துகொள்கின்றனர். எனவே, முறை மாப்பிள்ளை முத்துவுக்கு பொன்மலரை மணமுடிக்க, அவளது பெற்றோர் முனைகின்றனர். பொன்மலர் கவிஞருக்கு எழுதும் இறுதி மடலே நூலின் இரண்டாம் பாகம். அதனைப் படித்து மனமுடைந்த கவிஞன், தற்கொலை செய்துகொள்ள முனைகிறான். இதனையறிந்த் பொன்மலர் காதலனை மருத்துவமனையில் சந்திக்கின்றாள். மகளின் மனமறிந்த பெற்றோர், அவள் விருப்ப:ப்படியே மணமுடிக்கின்றனர்.

பொதுவாகக் காதல் தோல்வியைப் படித்துப் பழக்கப்பட்ட நமக்குக் காதலின் வெற்றியையும், கலப்பு மணத்தின் வெற்றியையும் பாடும் இக்குறுங்காவியம், இலக்கிய வானில் தோன்றிய ஒரு விடிவெள்ளி யாகவே தெரிகின்றது.

***பாத்திரப் படைப்பு:*** இந்நூலில் காணப்படும் பாத்திரங்கள் பண்ணரசன், பொன்மலர், பொன் மலரின் பெற்றோர், முறைமாட்

பிள்ளை முத்து எனச் சிலரே. பொன்மலரின் பாத்திரப்படைப்பே மேலோங்கி நிற்கிறது. வழக்கமாகப் பெண்களை அங்கம் அங்கமாக வருணிக்கும் மரபு முறையை இந்நூலாசிரியர் ஒதுக்கித் தள்ளிவிட்டு ஓரிரு கோடுகளில் உருவத்தைப் புலனாக்கும் ஓவிய முறையைக் கையாளுகின்றார்.

*"கண்ணாலே சிரிப்பாயே! முகத்தைப் பொத்திக்*
*கை விரலின் இடுக்காலே எனைப் பார்ப்பாயே"*

என்ற பண்ணரசனின் மடலை நாம் படிக்கும் பொழுது, பொன்மலர் கை விரலின் இடுக்காலே நம்மையும் பார்ப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது. "எனக்கும், முறை மாப்பிள்ளை முத்துவுக்கும் திருமணம் நடத்தப் பெற்றோர் ஏற்பாடு செய்து விட்டனர். என்னை மறந்து விடுங்கள். எனக்குப் பிறக்கும் மகனுக்கு உங்கள் பெயர் வைப்பேன். நீங்கள் வேறொருத்தியை மணந்து கொள்ளுங்கள்" என்று இறுதி மடல் எழுதுகின்றாள் பொன்மலர். இது வழக்கமாகத் தமிழ்த் திரைப் படங்களிலும் தமிழ்க் கதைகளிலும் வரும் கதைப்போக்கு. இதன் பாதிப்புக்கு ஆளானவளாகவே பொன் மலர் முதலில் தோன்று கின்றாள்.

*"சிறைப் பறவையான தமிழ்ப் பெண்ணினத்தார்*
*சீறுகின்ற புலியாகும் வரைக்கும் இங்கே*
*திரைமறைவு நாடகங்கள் மணச் சடங்கில்*
*தினம் நடக்கும், மூடாக்குப் போக்கே பூக்கும்"*

என்று அவள் தன் மடலில் எழுதுகின்றாள். தன் காதலன் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்ட செய்தியறிந்ததும், சிறைப்பறவையாயிருந்த பொன்மலர் சீறும் புலியாகின்றாள். மணவீட்டில் பெற்றோரின் காவலை மீறி, வெளியேறிச் சென்னைக்குப் பயணமாகிறாள். உண்மைக் காதலை யார்தான் தடுக்க இயலும்? அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்? அவள் சென்னை நோக்கிப் புகைவண்டியில் பயணம் செய்யும் பொழுது, ஆணுடை தரித்து வருவதாகக் காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது.

கவிஞன் பண்ணரசனின் பாத்திரப் படைப்பு பற்றி ஓரிரு குறிப்புகளே கிடைக்கின்றன.

சித்தன்-என் துறவுணர்வைக் கலைத்து விட்டாய்"

என்று பொன்மலருக்கு மடல் எழுதுகிறான் கவிஞன். இச்சித்தனின் சித்தமெல்லாம் நாடும் மக்களும் நலமடைய வேண்டுமென்ற பொது நோக்கில் அமைந்தது.

*தமிழரெல்லாம் ஓரினத்தார் என்ற செய்தி*
*தழுவட்டும் தமிழ் நெஞ்சை; இனிமேல் பூக்கும்*
*தமிழரெல்லாம் ஒரு தாயின் பிள்ளை யாகத்*
*தவழட்டும் தமிழ் நிலத்தில்; வருங் காலத்தில்*
*தமிழரெலாம் உலகோடு தோள் பிணைத்துத்*
*தலை நிமிர்ந்து நடக்கட்டும் புகழ்ப் பூரிப்பில்,*

என்று கவிஞன் கூறுகின்றான். இத்தகு கொள்கைப் பிடிப்பில் இருக்கும் கவிஞனின் மனத்தில் ஏக்கம் பிறந்தது எப்படி?

"அன்பெனும் பெரும்பிடிக்குள் பிறந்த ஏக்கம்"

என்று கவிஞனே விளக்குகின்றான். காதலில் தோல்வியுற்றவர் தற்கொலை செய்துகொள்வது கோழைத்தனம் தான், ஆனால் உணர்வுகள் மேலோங்கி நிற்கையில் அறிவின் வழி நிற்கும் எணணங்கள் மங்கிவிடுவது இயற்கையே.

*"ஏக்கத்தில் கருகலிலும் இறத்தல் நன்றே"*
*"காய் பழுத்துக் கனியாகும் நேரம் சின்னக்*
*கல்லடியால் தரைவீழ்தல் போல் போகின்றேன்"*

என்று கவிஞன் கூறும் காரணங்கள் உணர்வின் மேலாதிக்கத்தால் தோன்றியவை என்று விளங்குகின்றது. இவ்வாறு உணர்ச்சியின் வடிவாகவே இப்பாத்திரம் படைக்கப்பட்டுள்து.

பிற படைப்புகள் சிறு பாத்திரங்களே. பொன் மலரின் தந்தை, மணவீட்டில் தன் மகளைக் காணாமல் அழும்போது அவள் சிறு வயதில் காதில் துளை போட்டுக் கொண்டு, நகை போட்டுக் கொள்ள அடம் பிடித்த கதையைச் சொல்லித் தேம்புகின்றார். இது தந்தைப் பாசத்தின் தன்மையைக் காட்டுகிறது. பொன்மலரின் தாய், முதிய தலைமுறைத் தாய்மார்களின் இயல்புக்கேற்பப் படைக்கப்பட்ட பாத்திரம். எங்கோ ஒருமுறை தலைகாட்டி, ஏதோ ஒருசில சொற்களையே பேசுகின்றாள். குடிப் பெருமையைக் காக்க வேண்டும் என்பது அந்த இதயத்தின் ஏக்கம். முதிய தாயின் இயல்பான சொற்களாலேயே கவிதை அமைந்துள்ளது காண்க.

*"என்னங்க, மாப்பிள்ளை தந்தை தாயே*
*இதை மறுத்தால் என் செய்ய? நம்மைச் சுற்றித்*
*தின்பதற்கும் முழுமொட்டை அடிப்பதற்கும்*
*திரண்டுள்ள உறவினரோ, உதட்டைத் தூக்கிக்*
*கண்ணாலே ஏளனங்கள் பேசுவாரே!*
*கதைகதையாய் ஊரெங்கும் பரப்புவாரே!*
*இன்னுயிரைத் தாக்கும் இச்செயலுக்கெல்லாம்*
*என் செய்வோம்?"*

என்று தாய் ஏங்கிறாள். அந்த நல்லிதயத்தின் ஏக்கத்தை நீக்கத் தந்தை கூறும் பதில் சிந்திக்கத் தக்கது.

*"எவன் தயவை நம்பிநாம் வாழுகின்றோம்*
*என்னுழைப்பால் நானுயர்ந்தேன்...*
*எவன் வந்தால் என்ன? போனால்தான் என்ன*
*என் செல்வி வாழ்விற்கே வாழ்வேன்"*

என்று சூளுரைக்கின்றார். நேர்மையாக வாழ்ந்த ஒரு தந்தையின் வீரம் இங்குப் பேசுகின்றது.

முறை மாப்பிள்ளை முத்து, பண்ணரசனின் சுவைஞனாகப் படைக்கப்பட்டுள்ளான்.

காதலரின் எதிர்க் கட்சியில் இருக்க வேண்டிய பெற்றோரும், முறை மாப்பிள்ளையும், கட்சி மாறி விடுகின்றனர். சாதி, மதம், பணம், நிலை-முதலானவை காதலர் மணம் முடிக்கத் தடையாய் இருப்பதாகத் தெரியவில்லை. 'பெற்றோரிடம் உரிய நாளில் சொல்லவில்லை என்பதே காதலுக்கான தடையாகத் தெரிகிறது. கதையின் சிக்கலுக்கு இது வலுவான காரணமாகத் தெரியவில்லை. இத் தடையை மீற முயலாமல் பண்ணரசன் தற்கொலை செய்ய முயல்கின்றான். ஆனால் தடையை மீறி, வீட்டை விட்டு வெளியேறி வரும் பொன் மலர், புதுமைப் பெண்ணாகக் காட்சி தருகிறாள்.

இக கதையில் வரும் எல்லாருக்கும் இதயம் இருக்கிறது ஏக்கமும் இருக்கிறது. "ஓர் இதயத்தின் ஏக்கம்? யார் இதயத்தின் ஏக்கம்? தூக்க மாத்திரையில் ஏக்கத்தை முடித்துக் கொள்ளும் பண்ணரசனின் ஏக்கத்தைவிட, அவனைக் காப்பாற்றி, மணமுடித்துக் கொண்டு வெற்றி பெறும் பொன்மலரின் இதய ஏக்கமே நூலின் தலைப்பாகியுள்ளது, என்பதே என் கருத்து. செயல் திறனுடைய இதயத்தின் ஏக்கத்தால் தான் நாடு பயன்பெறும்.

**கவிநயம்:** குறுங்காவியத்தின் கதை சிறிதெனினும் கவிநயம் பெரிதே. காவிய வானில் உவமை விண்மீன்கள் மின்னி மினுக்குகின்றன. இந்த உவமைகள் வலிந்து புனையப் பட்டவை அல்ல; எளியவை இயல்பானவை; அன்றாட வாழ்வில் காணக் கூடியவை இவற்றைத் தொகுத்து ஆய்ந்தால் தனி நூலே எழுதலாம். எடுத்துக் காட்டாக ஒன்றிரண்டு மட்டும் இங்குக் காணலாம்.

காதலன்-காதலி-பிரிவை விளக்க

*"தாயை விட்டே*
*ஊர் பிரிந்த சிறு பள்ளி மாணவன்போல்"*
என்ற பாசமிக்க உவமை கையாளப்பட்டுள்ளது.

பிரிவால் வாடும் காதலனின் நிலை.

**"பொரி உருண்டை போலே நான் தக்கையானேன்".**

என்ற அருமையான உவமையின் மூலம் புலப்படுகின்றது. பொரி உண்டை கனமாகவும், பெரி.தாகவம் தோன்றினாலும், கையிலெடுத்துப் பார்த்தால் தக்கையாக இருப்பதை உணரலாம். அது போலப் பிரிவால் வாடும் கவிஞன் வெளித் தோற்றத்திற்குப் பெரியவனாக, உடல் வலுவுள்ளவனாகத் தோன்றினாலும், உள் வலுவின்றித் தக்கையாக இருக்கின்றான் என்பதற்கு இதைவிட வேறு பொருத்தமான உவமையினை எவரும் கூற இயலாது.

**கரிகாலன் கல்லணையின் சிலையைப் போல்**

**காத்திருப்பேன்"** - என்று ஓர் உவமை.

இப்படிப் பல புதிய, அரிய உவமைகளைக் கவிஞர் கையாண்டாலும், ஓரிடத்தில் உவமை காட்ட முடியாமல்

*----- "மகள் முகத்தைக்*
*கண்ணாரக் காண்பதற்குத் துடிக்கும் அன்னார்*
*கருணை மனத்துக் குவமை தேடுகின்றேன்"*

என்கின்றார். இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் இந்த அடிகளை ஆராய்ந்து "இது உவமை மறுப்பணி என்று கூறியுள்ளார்.

இது ஒரு கவிஞனின் காதல் காவியம்தான். என்றாலும் தன் வீடு, பெண்டு, பிள்ளை என்ற குறுகிய வட்டத்தில் சுழலவில்லை. தமிழ் ஒளி, கீட்சு முதலானோரின் வாழ்க்கைக் குறிப்புகள் இதில் உள்ளன. தன் காவியத்தில் சம காலத்திய கவிஞர்களின் பெயர்களைக் குறிக்கும் பரந்த மனப்பான்மை ஒரு சிலருக்கே வரும்.

*"தலை வணங்காப் புகழ்க் கவிஞன் ஏழைத் தோழன்*
*தமிழ் ஒளியும் இப்படித்தான், ஒருத்தியின் மேல்*
*தணியாத அன்பு வைத்தான்; காதலித்தான்*

என்று கவிஞர் குறிப்பிட்டுள்ளார்.

ஆங்கிலக் கவிஞர் வில்லியம் வேர்ட்ஸ்வொர்த், 'தி ரிசொலேஷன் அண்டு இன்டிபென்டென்ஸ்' என்ற கவிதையில் தாமஸ் சாட்டர்டன், இராபர்ட் பான்ஸ் ஆகியோரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். சாட்டர்டனும், பான்சும் ஏழ்மையில் வாடி, இளமையில் மறைந்த ஆங்கிலக் கவிஞர்கள். வோர்ட் வொர்த் கவிதைக் குறிப்பின் மூலம் தாம் நாம் அவர்களைப் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது. அதேபோல் தமிழ் ஒளி என்னும் தமிழ்க் கவிஞன் ஒருவன் இருந்ததே, பொன்னடி யான் கவிதைக் குறிப்பின் மூலம் தானே தெரிகிறது.

**கவி நடை:** கவிநடை எளிய இனிய நடை, நாம் அன்றாடம் பயன்படுத்தும் பேச்சு நடை. இங்கு ஓசை நயமிக்க வரிகளாக மாறியிருப்பது கவிஞரின் திறமையைக் காட்டுகின்றது. எதுகை மோனைக்காக வலிந்து ஏதாவது ஒரு சொல்லைப் போட்டதாக எவரும் காட்ட இயலாது

முதல் பகுதியில் கவிதைகளுக்கிடையில்

*"சரிதானா? சரிதானா? சரியே தானா?*
*ஓரிதயம் உனக்காக ஏங்கி, ஏங்கி,*
*உயிர்வாதை படுவதுவும் முறையேதானா?"*

என்ற வரிகளை மீண்டும், மீண்டும் பல்லவி போல் பயன்படுத்தி யிருப்பது ஒரு புதுமையே. கவி மடலின் மைய உணர்வுப் பிழிவாக இவ்வரிகள் அமைத்துள்ளதால், இவை தனித்து நிற்காமல், பிற கவிதை வரிகளுடன் இணைந்தே ஓசை நயம் கூட்டுகின்றன. நாம் உணர்ச்சி வசப்படும் பொழுதும், தயங்கும் பொழுதும், பேச்சில் தடுமாற்றம் ஏற்படுவது இயற்கையே. இதனைக் கவிதையின் இயல்பாகப் பயன்படுத்தியுள்ளது ஒரு புதுமையே. இதோபாருங்கள்.

***"கண்ணீரை --- கண்ணீரை --- என் கண்ணீரைக்***
***காணிக்கை யாக்குகின்றேன் உங்களுக்கே,***

*"நான் வந்து -- நான் வந்து -- முத்து"*

கதை மாந்தரின் பெயர்களைப் பாட்டில் அமைப்பதற்கே திறமை வேண்டும் - ஊர் பெயர்களை அமைப்பதும் அரிதுதான். காகிதத்தின் மேல் உள்ள இரும்புத் தூள்கள் கீழே மறைத்து வைக்கப்படும் காந்த மொன்றின் ஈர்ப்பினால் சிலிர்த்து, அணி வகுப்பதைப் பார்த்திருப் பீர்கள், அது போலக் கவிஞனின் காந்த சக்தியால் ஊர்ப் பெயர்கள் அணிவகுப்பதைப் பாருங்கள்.

*"சாயர் புரம், குமார புரம் கன்ன நல்லூர்,*
*சாத்தான் குளம், குமார கிரி, ஆராம் பண்ணை,*
*தூய பண்பு நாசரத்தூர், நாணல் காடு*
*துவளாத நாங்குனேரி, மீளவிட்டான்,*
*தேயாத புகழுடைய பழைய காயல்*
*திறன் மிகுந்த பழங் கோட்டை போன்ற ஊரார்*
*வாயாடிக் கிடந்தார்கள்; விருந்தை உண்ண*
*வந்திருந்த உறவினரோ அழுதார் ஆங்கே!*

**சமுதாயப் பயன்:**

இவ்வாறு கவிநயத்தில் சிறந்து விளங்கும் ஒரு காதல் காவியத்தைப் படிப்பதால் சமுதாயத்துக்கு என்ன பயன்? முன்னரே நான் குறித் துள்ளது போல இது காதலர் இருவரின் சொந்தக் கதை மட்டுமன்று. உலகப் பொது நோக்கில் அமைந்த கருத்துக்கள் பல கொண்ட பொதுச் சோலையில் மணம் பரப்பும் மலர்களில் சில:

*"மனக் கதவு மூடப் பட்டே யிருந்தால்*
*மனிதனில்லை; உலகத்தின் இயக்கம் இல்லை"*

*"துரும்பளவும், மற்றோர்க்குத் தீங்கு செய்யாத்*
*தூய உள்ளம் கொண்டிடுவீர்; உயர்வு கொள்வீர்!!*

காதலர்கள் தங்கள் காதலைப் பற்றிப் பெற்றோரிடம் துணிந்து உரைத்திருந்தால் முதலிலேயே வெற்றி கிடைத்திருக்கும். துணிவே வாழ்வின் வெற்றிக்குத் துணை என்பதைக் கவிஞர் இவ்வாறு உரைக்கின்றார்.

*"   தோல்வி தன்னைக்*
*கோழை மனம் கொண்டதனால்*
*அணைத்துக் கொண்டோம்"*

*"மோதலுக்கும், சாதலுக்கும் துணிந்திருந்தால்*
*முழுவெற்றித் தேனாற்றில் கலந்திருப்போம்"*

மேலும் முறையான, அடக்கமான காதலுக்குப் பெற்றோரின் ஆதரவும் கிடைக்கும் என்ற நம்பிக்கை ஒளியை, இந்நூலில் இளையோரின் உள்ளங்களில் ஏற்றி வைத்துள்ளது.

**முடிவுரை:** ஒரு நூலின் வெற்றி அதனைப் படிப்பவர்களின் எண்ணிக்கையில் இல்லை. கவிதை இலக்கியங்களைப் படிப்பவர்களின் எண்ணிக்கை குறைவே. ஆனால் படிப்பவர் மனத்தில் நீங்கா இடம்

பெற்றுவிட்டால் அதுவே நல்ல வெற்றியாகும். அந்த வெற்றியை இந்நூல் சிறப்பாகவே பெற்றுவிட்டது. இக்காவியம் முல்லைச் சரத்தில் தொடராக வெளிவந்த பொழுது, வரிகளை மனப்பாடம் செய்த பலர், இன்றும் அதனைச் சொல்லி வியக்கின்றனர்.

எனவே இதுபோன்ற குறுங்காவியங்கள் பலவற்றைக் கவிஞர் பொன்னடியான் இயற்றுவாரா? என்பதே என் இதயத்தின் ஏக்கம். பண்ணரசன், பொன்மலரின் மணவாழ்க்கை, இலக்கிய வாழ்க்கை, அரசியல் வாழ்க்கை முதலானவற்றை அடிப்படையாகக் கொண்டு அடுத்தடுத்துத் தொடர்காவியங்கள் எழுதலாமே.

திறனாய்வாளர்களுக்கு ஒரு வேண்டுகோள்: இந்நூல் 1969-ல் முதல் பதிப்பாகவும், 1981 இல் இரண்டாம் பதிப்பாகவும் வெளிவந்தது. ஆனால் இந்நூல் பற்றிய விரிவான திறனாய்வு இதுவரை ஏடுகளில் வந்ததாகத் தெரியவில்லை. நூலாசிரியர் நடத்தும் 'முல்லைச் சரத்திலும்' வெளியாகவில்லை. காரணம் என்ன? 'முல்லைச் சரம்' - கவிஞர் பொன்னடியான் சார்பு ஏடுதான்; ஆனால் அவருக்காக மட்டும் நடத்தப்படவில்லை. இது ஒரு காரணம். ஆனால் வலுவான காரணமில்லை. எனவே ஒரு நூல் வெளியானவுடன் அதுபற்றிய ஆழ்ந்த திறனாய்வினை உடனே வெளியிட வேண்டுமென்று திறனாய்வாளர்களையும் இலக்கிய ஏடுகளின் ஆசிரியர்களையும் கேட்டுக் கொள்கிறேன். இதன்மூலம் உண்மைக் கவிஞர்கள் ஊக்கமடைவர். போலிகள் மடிவர். நாடும் மொழியும் பலன்பெற்றுச் செழிக்கும்.



# உண்மை லட்சியக் கவிஞர்

## நடிகமணி டி.வி. நாராயணசாமி.



**பா**வேந்தர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பரம்பரை, தமிழகத்தில் வேரூன்றிவிட்ட ஒன்றாகும். அந்த வீரமிக்க பரம்பரையில் தோன்றிய தன்மானச் சுடர்விளக்கு உணர்ச்சிக் கவிஞர் பொன்னடியான்.

பொன்னடியான் கவிதைச் சொற்கள் யாப்பு, அணி, சீர், தளை அடிப்படையில் பொங்கும் அலைகடலென ஆர்ப்பரித்துவரும் புன்மைகளைச் சுட்டெரிக்கும் புரட்சிப் பாமாலையாகும்.

சிந்திக்கும் திறனற்றுச் சமுதாயத்தின் அடித்தளத்தில் விழுந்து கிடக்கும் மனிதக் கூட்டத்தைத் தட்டி எழுப்பித் தன்மானப் போருக்கு தயார் செய்வதுதான் முற்போக்குக் கவிஞனின் கடமையாகும். ஒரு புத்தம் புதிய, பேதங்களற்ற, தாழ்வுகள் நீங்கிய புரட்சி வாழ்வை மலர வைப்பதுதான் ஒரு உண்மைக் கவிஞனின் இலட்சியமாகும்.

அதனை அற்புதமாக நிலை நிறுத்திக் காட்டுகிறார் ஆற்றல் மிக்க கவிதை வரிகளிலே கவிஞர் பொன்னடியான். பொன்னடியான் கவிதைகள் பொலிவு மிக்கது, வலிவு மிக்கது, உயிரோட்டம் மிகுந்தது. அவரது கவிதைகளை முற்றும் ஆய்ந்து ஒப்பாய்வு செய்து, விரிவான நூற்கள் பலவற்றை ஆற்றல் மிக்கவர்கள் ஆக்கிட வேண்டும் என விரும்புகிறேன்.

"முடிவொன்று வரப்போகுது" எனும் தலைப்பில் கவிஞரால் ஆக்கப்பட்டுள்ள கவிதை, எதிர்காலத்தை நம் நெஞ்சில் நிறுத்திடும்-நிகழப்போகும் உண்மை நிலையைச் சித்தரித்துக் காட்டும் எக்காள மாகும்.

*"முடிவொன்று வரப்போகுது - அவர் முடிமீதும், மடி மீதும் ஏழையர் கை ஓங்கி அடி ஒன்று விழப்போகுது-பே-ரடி ஒன்று விழப்போகுது!*

கற்பனைக் கவிதைகளை மட்டுமே எழுதிக் கொண்டிருப்போர் மத்தியில் சமுதாய நலனே வாழ்வியலுக்கு உகந்தது என்று இக்கவிஞர் கருதி சமுதாயக் கவிதைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து எழுதி வருகிறார்.

*"கலை இலக்கியம் நித்தம் வளர்ப்போம்*
*கவிழாத சமுகம் காண உழைப்போம்*
*மானுடம் மணக்கும் மண்ணகம் படைப்போம்*
*மனிதர் நாம் வேற்றுமை எல்லாம் துடைப்போம்"*

என்ற இக்கவிதையில் சமுதாயம் எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்பதைத் தெளிவு படக் கூறியுள்ளார்.

இந்த உலகம் பாசத்தாலும், அன்பாலும் பிணைக்கப்பட்டது. இதை உணராததால்தான் வேற்றுமையும் வெறுப்பும் அழிவை ஏற்படுத்து கிறது. இக் கவிஞர் எல்லோரிடமும் பாசத்தோடும் அன்போடும் பழகித் தன் கருத்துக்களை அவர்களிடையே புகுத்துவதில் வல்லவர். அவரைப் பார்த்து ஒரு முறை பேசிவிட்டால் போதும். அடுத்த முறை பார்க்கும் பொழுது நம் குடும்பத்தில் ஒவ்வொருவர் நலனையும் விசாரித்து நம்மை ஈர்த்து ஐக்யமாகிவிடுவார். பின்னர் அவரை மறக்கவும் முடியாது. நம்மால் பார்க்காமல் இருக்கவும் இயலாது. இது இவருக்கே உரிய தனிச்சிறப்பாகும். இவரது இந்தப் பண்பினை -

*"இந்த உலகத்தில் வாழும் மனிதர்*
*அனைவரின் இல்லத்திலும் - நான்*
*சொந்தம் கொண்டாடி கலந்துறவாடிட*
*சிந்தனை செய்துள்ளேன்"*

- என்ற இக்கவிதை படம் பிடித்துக் காட்டுகிறது.

தமிழன்பால் தணியாத பற்றுக் கொண்ட இக்கவிஞர் தேசிய ஒருமைப்பாட்டிலும் தளராத பற்றுடையவர். நம் நாடு வேற்றுமையில் ஒற்றுமை காணும் நாடு. இங்கே மொழிகள் பல, மதங்கள் பல, இனங்கள் பல என்றாலும் நாம் ஒன்றுபட்ட மக்களாகவே வாழ்ந்து வருகின்றோம். உலக அரங்கில் இதனால் நமக்குப் பெருமை ஏற்பட்டுள்ளது. இதில் எந்த ஒரு பகுதி குறைந்தாலும் இந்திய பூமி அங்கஹீனமான மனிதனாகவே ஆகிவிடும். இக்கூற்றை நம் கவிஞர்

*"இந்திய நாடொரு பூச்சரமாகும்*
*இதில் ஒரு மாநில மலர் குறைந்தாலும்*
*வந்துவிடும் சீர் அழிவும் குலைவும்*
*வழித்தடுமாறிக் குழப்பம் நிலவும்".*

- என்ற இந்த பொன் வரிகளின் மூலம் இந்திய ஒற்றுமையை மிகவும் தெளிவாகக் கூறியுள்ளார்.

மெல்லிய தோற்றத்தை உடைய இக்கவிஞர் மேடை ஏறிவிட்டால் இடி இடிக்கும், எரிமலை வெடிக்கும், ஈட்டிகள் பாயும், வீரம் கொப்பளிக்கும். கொடுமை கண்டு கொதித்தெழுவார். ஏழைகளுக்கு துயரென்றால் இவரால் ஏற்க இயலாது.

"நான்,

எரிமலையாகிக் கொண்டிருக்கின்றேன்

என்னைத் தடுக்க முடியாது!

என்னைத் தடுக்க முடியாது!

நல்விதை யான என் ஏழைச் சகோதரர்

நைந்து படு துயர்ப் பாடுகள் கண்டு

நான்

அணுகுண்டாகிக் கொண்டிருக்கின்றேன்

என்னை அழிக்க முடியாது!

என்னை ழிக்க முடியாது!

- என்ற இவரது உணர்ச்சி பொங்கிய வரிகள் இவரது பண்பையும், உணர்வுகளையும் தெள்ளத் தெளிவாகக் காட்டுகின்றன.

இக் கவிஞர் தமிழ்கூறும் நல் உலகிற்குக் கிடைத்த அரிய பெட்டகம். பாவேந்தர் வார்த்தெடுத்த அற்புத சிற்பம். இவரிடம் பாரதியின் தொலைநோக்கைக் காணலாம். பாரதிதாசனின் புரட்சியைக் காணலாம். கம்பனின் கவிநயத்தைக் காணலாம். பட்டுக்கோட்டையின் சமுதாய வேட்கையைக் காணலாம். உயிர் மூச்செல்லாம் தமிழ்ச் சமுதாயமென்றே வாழும் இக் கவிஞர் நான் க்ண்ட ஓர் அற்புதக் கவிஞர்.

"வாழ்க பொன்னடியான் புகழ்

வளர்க அவர் தம் தமிழ்த் தொண்டு!"



# பொன்னடியாரின் சமுதாயப் பார்வை

## பேராசிரியர் முல்லையன்பன்



### சமுதாயக் கவிஞன் யார்?

கவிஞனை முதலில் உருவாக்குவது சமுதாயம். பின்னர் அச் சமுதாயத்தினை நன்னெறியில் செலுத்தி, நல்லமைப்பாக மாற்றி யமைக்கும் வல்லமை படைத்தவனாக உருவாகும் கவிஞனே சமுதாயக் கவிஞன். இந்தியா இன்னும் ஓர் ஏழை நாடே. கல்வியறிவு இல்லர்தவர்கள் ஏராளம். இவர்களும் புரிந்து கொள்ளத்தக்க கவிதை எழுதும் கவிஞனே சமுதாயத்திற்குப் பயனுள்ளவனாக இருக்கின்றான். இதற்கு மாறாகப் பாமர மக்கள் எளிதில் புரிந்து கொள்ள முடியாத சிக்கல் நடை, படித்தவர்களும் கூடப் புரிந்து கொள்ள முடியாத உவமை, உருவகத் தொடரடுக்குகள், மேலை நாட்டுப் புராணத் துணுக்குகள் முதலானவற்றையே பயன்படுத்திக் கவிதை எழுதுபவர்கள் சமுதாயத்தைப் பயன்படுத்திக் கொள்ளும் கவிஞர்கள். இவ்விரு வகைகளுள், முதல் வகையினைச் சேர்ந்தவர்தான் பொன்னடியான். பாரதிதாசனுக்குப் பிறகு தமிழகத்தில் தோன்றிய சமுதாயக் கவிஞர்களுள், சமுதாயப் பார்வையில் சிறந்து விளங்குபவர் கவிஞர் பொன்னடியானே.

### ஏன் கவிஞன் ஆனேன்?

கவிதை உணர்வு எல்லோரது மனத்திலும் ஊறிக் கிடக்கிறது. தாலாட்டிலிருந்து ஒப்பாரி வரையிலும் கவிதை மனிதனைத் தொடர்கின்றது. உள்ளத்தில் ஊறிக் கிடக்கும் அக்கவி உணர்வைக் கவிதை வடிவில் வெளிப்படுத்துபவர் சிலரே. அச் சிலருள்ளும் "கலை கலைக்காகவே" என்ற கொள்கையுடன் கவிதை எழுதும் கவிஞர்கள் உள்ளனர். அவர்களும் போற்றத் தக்கவரே-பூசை அறை விளக்கைப் போல. மாறாகக் "கலை மக்களுக்காகவே" என்று கவிதை எழுதும் கவிஞர்கள், ஏற்றிய தீப்பந்தங்களைப் போன்றவர்கள்; அறியாமை

இருளகற்றிச் சமுதாயத்திற்கு வழிகாட்டுபவர்கள். சமுதாயக் குப்பைகளைக் கொளுத்தவும் இவர்கள் பயன்படுகின்றார்கள். இந்த இரண்டாம் வகையைச் சேர்ந்தவரே கவிஞர் பொன்னடியான்.

முதற்காதல் தோல்வி, காதல், நாட்டுப் பற்று, பொழுதுபோக்கு, பிற கவிஞர்களின் தாக்கம் முதலான பல காரணங்களால் ஒருவன் கவிஞன் ஆகலாம். ஆனால், பொன்னடியான் தான் கவிஞன் ஆனதற்கான காரணத்தை

*"உழைப்பாளர் சோகமுக உருவங்கள் என்*
*உள்ளத்தைக் கிள்ளியதால் கவிஞனானேன்!*
*குழம்பிய சேறான சமுதாயம் கண்டு*
*குமுறலுடன் சிரித்ததனால் கவிஞன் ஆனேன்"*

- என்று கூறுகின்றார். உள்ளத்தைக் கிள்ளும் கவர்ச்சிப் பொருள்கள் பல இருக்க, உழைப்பாளர் சோகமுக உருவங்கள் இவரது உள்ளத்தைக் கிள்ளினவாம். குழம்பிய குட்டையில் மீன்பிடிப்பவர்கள் சமுதாய எதிரிகள். நம் சமுதாயம் இன்னும் ஒரு குழம்பிய குட்டைதான். குட்டையின் பல இடங்களில் நீர் கூட வற்றிப்போய் உள்ளது. குழம்பிய சேறு மட்டும்தான் பல இடங்களில் காண்கின்றோம். இந்நிலைக்குக் காரணம் நம் சமுதாய அமைப்பே. இதனை மாற்றியமைக்கலாம் என்ற நம்பிக்கையில் தோன்றிய சிரிப்பே இவரைக் கவிஞனாக்கியது.

**நான் விரும்பும் நாடு:**

குழம்பிய சேறான சமுதாயத்தை மாற்ற, இவர் எத்தகு நாட்டினைப் படைக்க விரும்புகின்றார்?

*"எனதுனது என்றில்லாச் சட்டம் கொண்ட*
*எழுச்சியுல கமைத்தற்கே முயலுகின்றேன்"*

என்கிறார்.

செல்வத்தை மட்டுமே அளவுகோலாகக் கொண்டு செயல்படும் இன்றைய சமுதாயத்தை மாற்றினால் தானே அத்தகு எழுச்சியுலகம் அமைக்க இயலும்.

*"பணத்தளவால் கடைக்கண்ணால்*
*அளந்து பார்க்கும்*
*பழியுலகைக் கருக்குதற்கே உறுதி*
*கொண்டேன்"*

என்று கவிஞர் சூளுரைக்கின்றார்.

பணத்தால் மனிதர்களை அளந்து பார்க்காமல் வேறு எதனைக் கொண்டு அளப்பது?

*"குணங்களால் மனிதரைத்*
*தரம்பிரிக்கின்றேன்*
*கொள்கையால் அவர்களை*
*நான்பகுக் கின்றேன்".*

- என்று சில புதுய அளவு கோல்களைக் கவிஞர் நமக்குக் கொடுக்கின்றார். கொள்கையால் மனிதர்களைப் பகுப்பதொன்றும்

3522 B

புதிதன்று. முன்னாளில் மதக் கொள்கைகளால் மனிதர்களைப் பிரிப்பது முதன்மை பெற்றிருந்தது. இன்றோ அரசியல் கொள்கைகள் அளவு கோல்களாக உள்ளன. இந்த அளவு கோலிலுள்ள குறையைக் கருதிய கவிஞர், குணங்களுக்கு முதலிடம் கொடுத்துப் பாடியுள்ளது ஊன்றி நோக்கத் தக்கது.

தனியுடைமை நீக்கப்பட்டுப் பொதுவுடைமை ஆக்கப்பட வேண்டும். எனறு பாடாத சமுதாயக் கவிஞன் இல்லை. ஆனால் இக்கருத்தினை -

*"வெட்டாவிட்டால் நமது நகங்கள் கூட*
*வினைவைக்கும் உடம்பிற்கே!*
*அதுபோல் வேலிக்*
*கட்டிவைத்துப் பொதுச் சொத்தைத்*
*தனிச்சொத்தாக்கிக்*
*கற்பனைப் பொய்க் கதை கட்டி ஏய்க்கும்.."*

- என்று ஓர் எளிய இனிய, உவமை மூலம் விளக்கிய சமுதாயக் கவிஞர் பொன்னடியானே. இதனைப் புரிந்து கொள்ள அகராதி யையோ, புராணக் குறிப்புப் புத்தகங்களையோ, கலைக் களஞ்சியத் தையோ புரட்ட வேண்டியதில்லை. கையைப் புரட்டி நகங்களைப் பார்த்தால் போதுமே. நகங்கள் வளருவதும், அவற்றுள் அழுக்குச் சேர்வதும் தெரிந்துவிடும்.

இக்கவிஞர் விரும்பும் நாட்டில் யார் யாருக்கு இடமுண்டு?

*"தேவை என்பதறியாத மக்கள் சூழ்நாடு*
*திருட்டுப்புரட் டறியாத மனிதர்*
*வாழ்நாடு" -*

*"கடமைகளை உணர்ந்தோர்க்கும்;*
*இரண்டு பிள்ளை பெற்றே*
*கட்டுபாட்டில் போக*
*முனைப்வர்க்கும்; உள்ள*
*உடமையெவாம் பொதுமக்கள்*
*சொத்தாகும் என்ற*
*உண்மைகளை ஒப்புக் கொண்டு*
*ள்ளவர்க்கும் -"*

- இவர் விரும்பும் நாட்டில் இடமுண்டு. ஊருக்கே உபதேசம் "உனக்கில்லையடிக் கண்ணே" என்றில்லாமல், இவர் இரண்டு பிள்ளைகள் பெற்றே கட்டுப்பாட்டில் வாழ முனைந்தவர். எனவே இவர் விரும்பும் நாட்டில் இவருக்கு இடமுண்டு.

(எனக்கும் இடமுண்டு)

**அடிமை:**

நம் நாடு சுதந்திரம் பெற்று விட்டது. என்றாலும் நாம் பல்வேறு அமைப்புகளுக்கு அடிமைகளாகவே வாழ்ந்து வருகின்றோம். "தானாய் எல்லாம் மாறும் என்பது பழைய பொய்யடா" என்பார் பட்டுக் கோட்டையார்.

- இதனையொட்டிப் பொன்னடியான்.

*"அடிமைகளாய் நமை ஆக்கிடும் இந்த*
*அமைப்புகளே மாறவேண்டும்*
*என்பேன் - அட*
*மாறாவிட்டால் மாற்ற வேண்டும் என்பேன்"*

என்று பாடுகின்றார்.

அவ்வாறு நாம் சில சமுதாய அமைப்புகளை மாற்றிவிட்டாலும் கூடக் கவிஞன் இவற்றுக்கு மனத்தளவில் எப்போதும் அடிமைப்பட்டே இருப்பான். கவிஞன் உணர்ச்சிகளின் அடிமை என்பது எல்லாருக்கும் தெரிந்ததே. ஆனால் உணர்ச்சிகளுக்கு அடிமைப்பட்டு, உண்மைகளை மறைத்து, அல்லது மறந்து பாடும் கவிஞர்களால் சமுதாயத்துக்குப் பலன் இல்லை. உண்மைக்கும் அடிமையாகி நிற்கும் கவிஞர்களால்தான் உழைப்போர் நலம் பெற முடியும் என்ற கருத்தினைப் பொன்னடியான்,

*"உணர்ச்சிக்கும் மானா உண்மைக்கும்*
*உழைப்பிற்கும் உழைப்போர் உருவிற்கும்*
*அடிமை இவன்" என்றே*
*என்னை அழைத்திடுங்கள்" -*

என்று அடிமைப் பட்டயமாக எழுதித் தந்துள்ளார். இத்தகு புதிய அடிமைகள் பெருகும் நாடே சுதந்திர நாடாக வாழும். இல்லையெனில் சுடுகாடாகிவிடும்.

**உலகம் தழுவிய கொள்கை:**

இவர், தன்நாடு, தன்மொழி, தன்மக்கள் என்று குறுகிய வட்டத்தில் சுழலுவதில்லை. இவரைச் சார்ந்த தோழர்களுக்கு இவர் விடுக்கும் வேண்டுகோள் இதோ:

*"உலகம் தழுவிய கொள்கை உணர்வுடன்*
*உலகைத் தழுவிடுங்கள-அட*
*உங்களைத்தான் என் தோழர்களே!"*

எல்லோரும் ஏதோ ஓர் உணர்வுடன் உலகைத் தழுவிக் கொண்டுதான் இருக்கின்றனர். ஆனால், பொன்னடியாரோ, உலகம் தழுவிய கொள்கை உணர்வுடன் உலகைத் தழுவிடச் சொல்கிறார்.

ஆனால் அந்தோ, இன்று போர் வெறியே உலகைத் தழுவிக் கொண்டுள்ளது. தொண்டு செய்யும் நல்லெண்ணம் வளர்ந்தால், போர் வெறி விலகும்; அறநெறி மலரும்.

*"வல்லமையைக் காட்டுதற்கு நித்தம் வையம்*
*வன்மை மிகு போர்க்கருவி கண்டதுண்டு!*
*வல்லரசு நாடுகளோ வளர்ந்த தாலே*
*வாய்ச்சண்டை, கைச்சண்டை வளர்ந்ததுண்டு*
*தொல்லைபடும் இம்மனிதச் சமூகத்திற்குத்*
*தொண்டு செய்யும் நல்லெண்ணம் வளர்ந்த துண்டா?*
*நல்லாரே! அவ்வெண்ணம் நாம் வளர்த்தே*
*நம்முலகை அறநெறியால் தழைக்க வைப்போம்"*

- என்பது பொன்னடியாரின் வேண்டுகோள்.

உலகம் முழுவதும் ஓர் அரசிற்குள் இயங்கவேண்டும் என்று பலர் கனவு கண்டுள்ளனர். இவரும் அதுபோன்று கனவு கண்டு.

*"உலகம் ஓர் அரசிற்குள் இயங்குகின்ற*
*உயர்வான திருநாளின் வரவுக்காகக்*
*கலகம்பொய்ச் சூதுகளும், ஏற்றத்தாழ்வும்*
*கவிழ்ந்துள்ள போராட்ட உலகைத் தீய்ப்போம்"*
- என உலக சமாதானத்துக்குப் பாடுகின்றார்.

**இசைப் பாடல்கள்:**

அச்சிடப்பட்டுப் படிக்கப்படும் பாடல்களை விட, மேடைகளில் பாடப்படும் இயக்கப் பாடல்களே மக்கள் மனத்தை எளிதில் கவர்கின்றன. இசைப் பாடல்களில் காமத்தைச் சேர்த்து மக்களின் உணர்வுகளை மங்கச் செய்யும் பணியினைத் திரைக் கவிஞர்கள் திறம்படச் செய்து வருகின்றனர். அம் மயக்கத்தினின்று மக்களை மீட்டுச் சமுதாய மறுமலர்ச்சிக்கான இசைப்பாடல்கள் எழுதும் பணியினைப் பொன்னடியான் முதற்கடமையாகச் செய்து வருகின்றார்.

அதற்கு "முடிவொன்று வரப்போகுது"-என்ற பாடல் ஓர் எடுத்துக் காட்டு, அதில்

*"கைகட்டி, வாய்பொத்தி*
*உழைத்திடும் மறக் கூட்டம்*
*கனவாகிச் கடப்போகுது!!-அவர்*
*கைகூட்டும் குட்டினில்*
*பட்டாடைப் பதர்க் கூட்டம்*
*கடுந்துயர்ப் படப்போகுது!"*
என்னும் புரட்சி வரிகள் கேட்போரைக் கிளர்ந்தெழச் செய்யும் வலிமை கொண்டவை.

உழைத்து உண்பவர்க்கும், உழைக்காமல் உண்பவர்க்கும் உலகெங்கும் நீண்ட காலமாக நடைபெற்றுவரும் போராட்டத்தை விளக்கப் பொன்னடியான் கையாளும் உவமைகள் இசைப்பாடலின் இலக்கியத் தரத்தினை உயர்த்துகின்றன.

*"புளிஏப்பக் காரனுக்கும்*
*பசிஏப்பக் காரனுக்கும்*
*போராட்டம் ரொம்ப நல்லா*
*நடக்குது!-அந்தப்*
*போராட்டம் முடியாம*
*வழியேதும் புரியாம*
*நாடு இப்போ*
*குழப்பத்திலே கெடக்குது".*
- என்றொரு பாடல்,

*"அழுக்குச் சட்டைக்கும்*
*சிலுக்குச் சட்டைக்கும்*
*உறவு எப்போது?*

*அடிதடி சண்டை அனைத்தும் மறைந்து*
*அமைதி எப்போது?"*

- என்றொரு பாடல். இத்தகைய பாடல்கள் மேடைகளில் முழங்கப்பட்டால், கேட்போர் மனத்தில் சிந்தனையைத் தூண்டும் என்பதில் ஐயமில்லை.

**பாட்டாளர் நலன்:**

பொன்னடியானின் சமுதாயப் பார்வை பெரும்பாலும் பாட்டாளர் நலனை நோக்கியே திரும்பியுள்ளது. பாட்டாளர் நிலைமைபற்றித் தலைவர்களுக்கும், தோழர்களுக்கும் கவிஞர் எடுத்துரைக்கும் பாடலில்,

*"பாயத் துடிக்கின்ற பசித்த புலிகள்*
*பாட்டாளர் தேவைகள் தலைவர்களே!-அவர்*
*தீயைத் தேக்கிய காய்ந்த கனிகள்*
*தீட்டிய கூர்வாள் தோழர்களே!"*

எனக் கூறுவது கவனிக்கத் தக்கது.

எதிர்காலம், உழைப்பவர்களுக்கே எனக் கூறவரும் கவிஞர், எத்திப் பிழைப்பவர்க்கும் ஓர் எச்சரிக்கை விடுக்கின்றார்.

*"உழைப்பவர் தோள்களில்*
*உலகம் ஒரு நாள்*
*ஊஞ்சலாடிடப் போகுது!-எத்திப்*
*பிழைப்பவர் வாய்களில்*
*வயிற்றினி லெல்லாம்*
*மண்விழுந்தே மூடப்போகுது!"*

என்று முரசறைகிறார்.

**கொள்கைக் கவிஞர்:**

பணம், பதவி, பட்டத்துக்காக வளைந்து கொடுக்கும் மனிதர்களிடையே உலவும் சிந்தனையாளர் பலர், கொள்கைகளை வரவுக்கேற்றபடி மாற்றிக் கொள்கின்றனர். அவர்கள் வாழ்க்கைப் படகுகள் உல்லாசக் கப்பல்களாக மாறிவிடுகின்றன. ஆனால்,

*"காற்றடிக்கும் பக்கமெல்லாம்*
*என்துடுப்பைப் போடமாட்டேன்*
*கைவலிக்கும் என்பதனால்*
*திசைமாறிப் போகமாட்டேன்"*

எனப் பாடும் பொன்னடியானின் வாழ்க்கைப் படகு கடலில் தத்தளிக்கும் கட்டுமரமாகவே இன்றும் இருப்பதில் வியப்பேதுமில்லை!

பணமும், புகழும் சிறிதளவு சேர்ந்து விட்ட உடனே "தான்"-என்னும் அகந்தை தலைக்கேறுவதால் வீழ்ச்சியுறும் மாந்தர் ஏராளம். வாழ்வின் உண்மை வெற்றியை அடையும் கொள்கை வழியினை அவரின் இப்பாடல் காட்டுகிறது.

*"மானிடக் கடலினில்*
*மறைத்துளி நான் எனும்*

*மர்மம் உணர்ந்து விட்டால்*
*வானினை எட்டும்*
*புகழினைத் தொட்டு நீ*
*வாழ்க்கையில் வென்றிடலாம்!"*

**அச்சத்திலிருந்து விடுதலை:**

மனிதன் குகைகளில் வாழ்ந்த நாள்முதல், விண்வெளியில் வலம் வரும் இந்நாள் வரை அச்சத்திற்கே அடிமையாக வாழ்கிறான். இத்தகு அச்சத்திலிருந்து மானிட சமுதாயம் விடுதலையடைய வேண்டும் என்பதை

*"அச்சமில்லை! அச்சமில்லை!*
*அச்சமென்பதில்லையே*
*உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும்"*

என்று பாரதி பாடினார். அவர் வழிநிற்கும் பொன்னடியான் -

*"அச்சமென்றால் என்னவென்றே*
*அறியாவண்ணம்*
*அரும்புகின்ற பரம்பரையை*
*இனி வளர்ப்போம்.*
*மச்சவீட்டான் ஓர்குடிசை*
*வீட்டான் என்ற*
*மனக்குறையால், ஏற்றத்*
*தாழ்வால் முளைக்கும்*
*அச்சத்தேர் அச்சாணி*
*முறிப்போம் மக்கள்*
*அனைவருமே சமமென்ற*
*நெறி வகுப்போம்"*

- எனப் பாடுகின்றார். பொருளாதார ஏற்றத்தாழ்வே பெரும்பாலான அச்சங்களுக்கு ஆணிவேர். அந்த வேரறுத்தால் அச்சம் முடியும் என்ற கவிஞர் கருத்து எவரும் ஏற்றுக் கொள்ளக் கூடியதே.

**தலைவனும் இளைஞனும்:**

சமுதாய மாற்றங்களைக் காண உழைப்பதில் இளைஞர்களுக்கும் பெரும் பங்கும் பொறுப்பும் உண்டு. இதனைக் கவிஞர் -

*"நாம் ஒரு முடிவுக்கு வரவேண்டும்*
*நாடு விடிவுக்கு வரவேண்டும்.*

*கண்ணி வெடிகளாய்க்*
*காத்துக் கிடந்து*
*காலம் வரும்போது*
*இளைஞர் எழுந்தால்"*

என்று பாடுகின்றார். காலம் வரும்போது எழுந்திடும் இளைஞர் என்ன பணி செய்ய வேண்டும்?

*"மூடத்தனத்தின் அடிவேர் கிள்ளியே*
*முளையில் போட்டிட*

*வாடா! இளைஞர் வா!*
*வாடிக் கிடப்போர்க்குக் கோடிபணிசெய்து*
*வயிற்றுக்குச் சோறிட*
*வாடா! இளைஞா வா!*
*நாடு நலம்பெற பீடு நடையுடன்*
*நல்லுயிர் தந்திட*
*வாடா இளைஞா-வா"*

என்று இசைநயத்துடன் பாடுகின்றார் பொன்னடியான். வீர உணர்வைத் தூண்டும்படி அமைந்துள்ள ஓசை நயமும், கடமை உணர்வைத் தூண்டும்படி அமைந்துள்ள பொருள் நயமும் கொண்டது இப்பாடல்.

"கொலை வாளினை எடடா"-என்ற பாவேந்தரின் பாடலுக்கு அடுத்துத் தமிழில் எழுதப்பட்ட சிறந்த சமுதாயப் பார்வை மிக்கப் பாடல் இதுவே எனலாம்.

இன்றைய இளைஞர்களே நாளைய தலைவர்கள். முறையான பயிற்சி இன்மையால் பிஞ்சிலே பழுத்துவிடும் இளைஞர்கள் பலர். இளைஞர்களாக இருக்கும்பொழுது நற்பணியாற்றும் ஒருசிலர், பின்னர் தலைவர்களாக வரும்பொழுது தடம்மாறி விடுகின்றனர். தடம்மாறும் இரயில் இன்ஜின், பிற பெட்டிகளையும், தன் பின்னால் இழுத்துச் சென்று விடுவதைப்போல, மக்களையும், கட்சித் தொண்டர்களையும், சில தலைவர்கள் கவிழ்த்து விடுகின்றனர். இந்நிலைமை மாற வேண்டும். இன்றைய இளைஞர்கள் நாளைய உண்மைத் தலைவர்களாய் மாறவேண்டும் என்று கருதும் பொன்னடியான் அதற்கான பயிற்சித் திட்டத்தையும் தருகின்றார்.

*"மக்களுடன் மக்களாய் வாழ்ந்திடப் பழகிடு!*
*மண்மீதும் முள்மீதும் நடந்திடப் பயின்றிடு!*
*சிக்கலைக்கும் சேற்றிலும்*
*சென்றிடத் துணிந்திடு.*

*அப்போது தான் நீ இந்*
*நாட்டுண்மைத் தலைவனாய்*
*ஆகின்ற தகுதியை அடைந்திடும் நாள்வரும்"*

அய்யப்பன் கோயிலுக்குச் செல்லும் பக்தர்கள் சில நாள் மட்டுமே மேற்கொள்ளும் இப்பயிற்சியை அனைவரும் எப்போதும் பெற்று அதன்படி நடந்தால் நாட்டுக்கு நல்ல தலைவர்கள் கிடைப்பதில் பஞ்சம் இராது.

**மன்றமும் ஏடும்:**

இவ்வாறு, அழுத்தப்பட்ட மக்களின் எழுச்சிக் குரலாகவும், உழைப்பாளர்களின் உண்மைக் குரலாகவும், இவரது பாடல்கள் விளங்குகின்றன. சமுதாய மறுமலர்ச்சி உணர்வைத் தூண்டும் இவரது இசைப்பாடல்கள், மேடைகளில் இயக்கப்பாடல்களாகப் பாடப் பெற்றால், விரைவில் மக்களிடையே பரவி பயன் விளைவிக்கும்.

அந்நாளில் புலவர்களது பாடல்களைப் பரப்பும் பணியினைச் சமயவாதிகள் செய்தனர். இந்நாளில் இப்பணியினை அரசியல் வாதிகளே மேற்கொள்ள வேண்டும். பாரதி, பாரதிதாசன் பாடல்கள் அரசியல் கட்சிகளின் இயக்கப் பாடல்களாக மாறிய பொழுதுதான் மக்களிடம் பெரிதும் பரவின; பலனளித்தன. பாரதிதாசனின் சீடரான பொன்னடியாரின் பாடல்களும், அவை போல, மேடைகளில் இயக்கப் பாடல்களாக முழக்கப்படும் பொழுதுதான் உண்மையான, முழுப்பயன் கிடைக்கும்.

கவிதைகளை எழுதி, அச்சடித்து, நூலாக்கிவிட்டு, அறையில் தூங்கிவிழும் கவிஞரல்லர் இவர். சமுதாயமும், பிற கவிஞர்களும் பயன்பெறும் வண்ணம் இவரே ஓர் இயக்கத்தினை நடத்தி வருகின்றார். அதுதான் முல்லைச்சரம்; எவர் தயவையும் நாடாமல், 31 ஆண்டுகளாக முல்லைச்சரத்தினைக் கவிதை இலக்கிய ஏடாக ஓர் இதழ்கூட விடுபடாமல் இவர் நடத்திவருவது ஓர் உலக சாதனையே.

சமுதாயத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகளை மாற்ற விழையும் கவிஞர்கள், முதலில் தங்களுக்குள் இருக்கும் ஏற்றத் தாழ்வுகளை ஒழிக்க வேண்டும். போட்டிப் பொறாமையை மறக்க வேண்டும். இந்த நோக்கத்துடன் பாரதிதாசன் தொடங்கிய அனைத்துலகத் தமிழ்க் கவிஞர் மன்றத்தினைப் பொன்னடியான் தொடர்ந்து நடத்தி வருகிறார். விளம்பரம பெற்றோரும் பற்பசை விளம்பரத்துக்குப் பல்லைக் காட்டுவோரும்தாம் மேடைக் கவியரங்குகளில் ஏறிக் கவிதை பாடமுடியும் என்ற நிலை, பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டில் இருந்தது. இதனை மாற்ற எண்ணிய பொன்னடியான் 26 ஆண்டுகளுக்கு முன் சென்னையில் கடற்கரைக் கவியரங்கினைத் தொடங்கினார். ஒவ்வொரு மாதமும் முதல் ஞாயிற்றுக் கிழமையன்று மாலை 6 மணிக்குச் சென்னை மெரீனாவில் உள்ள திருவள்ளுவர் சிலைக்குப் பின்புறம் இக் கடற்கரைக் கவியரங்கம் கூடுகின்றது. நெருக்கடி நிலைமைக் காலத்திலும் இக் கவியரங்கம் நடைபெறறது. ஆர்வமுள்ள அனைவரும் இங்கே கவி பாடலாம். ஆனால் "சாதி, சமய, அரசியல், காழ்ப்புணவர்வற்ற பாடல்களையே பாடவேண்டும்-" என்ற அறிவிப்புடன் இன்றும் தொடர்ந்து நடைபெற்று வரும் இக்கவியரங்கமும் ஓர் உலக சாதனையே. அங்கே கூடும் கவிஞர்கள், கடலில் கால்நனைத்துக் கொண்டு, காற்று வாங்கியபடி கவிதைகளைப் படித்துவிட்டுக் கடலையைக் கொரித்துக் கொண்டு சென்று விடுவதில்லை. பொன்னடியானின் சமுதாயப் பார்வை இங்கும் உலகளாவிப் பரவுகின்றது. உலகின் எந்தப் பகுதியில் நீதிக்கும் நேர்மைக்கும் குறை ஏற்பட்டாலும் கடற்கரைக் கவிஞர்கள் கொதித் தெழுந்து கண்டனக் குரல் எழுப்புகின்றனர். எடுத்துக் காட்டாகப் இருபத்தைந்தாண்டுகளுக்கு முன்பே இலங்கைத் தமிழர்களுக்காகக் குரல் கொடுத்ததும், சில ஆண்டுகளுக்கு முன் ஈரான் நாட்டில் அடக்கு முறைக்கு ஆளான சிந்தனையாளர்களுக்காகக் குரல் கொடுத்ததும் இக் கவியரங்கமே.

இக் கடற்கரைக் கவியரங்க நடைமுறைகளைப் பின்பற்றி நாடெங்கிலும் பல திறந்த வெளிக் கவியரங்குகள் தொடர் நிகழ்ச்சிகளாக நடைபெற்று வருகின்றன. பம்பாய் பூங்காக் கவியரங்கம், ஈரோடு பூங்காக் கவியரங்கம், உதகை மலைச்சாரல் கவியரங்கம் போன்றவை, "சிந்தனையாளர் ஒன்றுபட வேண்டும். சிந்தனையாளர் சீர்பெற வேண்டும். சிந்தனையாளர் செயல்பட வேண்டும்"-என்ற நோக்கங்களுடன் இயங்கும் தமிழ்க் கவிஞர் மன்றப் பாசறைகளாக விளங்குகின்றன.

இவ்வாறு, முல்லைச்சரத்தையும் தமிழ்க் கவிஞர் மன்றத்தையும் தன் இரு கண்களாகக் கொண்டு செயல்படும் கவிஞர் பொன்னடியானின் இலக்கியப்பணி 36-ஆம் ஆண்டு விழா இவ்வாண்டு கொண்டாடப் படுகின்றது. முல்லைச்சரத்தின் 31-ஆம் ஆண்டு விழாவும் அத்துடன் இணைத்து நடத்தப்படுகின்றது. இந்த விழாவின் மூலம் இவரது சீரிய கருத்துகளும், சிறந்த தொண்டுணர்வும், உலகளாவிய சமுதாயப் பார்வையும், இன்னும் பல்லாயிரம் மக்கள் தெரிந்து கொள்ள வழி ஏற்பட்டால். அதுவே விழாவின் வெற்றியாகும். சமுதாய உணர்வுமிக்க கவிஞர் ஒருவருக்கு ஊக்க மூட்டுவது சமுதாயத்தின் பொறுப்பல்லவா?

பொறுப்புணர்ந்தோர் செயல்படுக!



## பேரெழுத்தாளர் அகிலன் வாழ்த்து

3, குஸ்டியன் பீச் தெரு,

சாந்தோம், சென்னை 600 004.

அன்புடையீர்,

வணக்கம். கவிஞர் பொன்னடியான் அவர்களது இலக்கியப் பணியில் இருபத்தைந்து ஆண்டுகள் பற்றிய விழாச் செய்தி அறிந்தேன். விழா இனிது நடைபெற வாழ்த்துக்கள். உடல் நலம் மிகவும் குன்றியிருப்பதால் இப்பொழுது கட்டுரை எழுதவோ, சிறப்பு அமைப்பாளராகவோ, காப்பாளராகவோ இருக்க இயலாதிருக்கிறேன். இந்த நாடு பெற்றெடுத்த மிகப்பெரும் கவிஞர் பொன்னடி அவர்கள். அவருடைய கவிதைகள் தலைசிறந்தவை. இந்த நாட்டின் பல்வேறு துறைகளில் உள்ள கவிஞர்களுக்கு அவர் வழிகாட்டி. விழா மிகச்சிறப்பாக நடைபெற என் உளம் நிறைந்த வாழ்த்துக்கள்.

தங்கள் அன்புள்ள

அகிலன்



# பெண்ணின் பெருமை பாடும் பெருங்கவிஞர் பொன்னடியான்

பேராசிரியர் டாக்டர் சரளா ராஜகோபாலன்



**கா**தல் என்பது அரிய உணர்ச்சி. அது சிலரைத் தீவிரமாகப் பற்றுகிறது. ஆனால் அது கவிஞரிடம் புகும்போது காவியமாக மலர்கிறது. ஓவியரிடம் புகும்போது வெள்ளைத்தாளும் உள்ளம் கொள்ளை கொள்ளும் ஓவியமாகிறது. சிற்பியினிடம் சரணடையும் போது கல்லும் கனிவாகிறது. காதல், கலைஞர்களின் உள்ளத்தை மட்டும் மென்மையாக்குகிறது என்பதல்ல, அவர்களுடைய படைப் பையும் மலரினும் மென்மையாக்கிவிடுகிறது.

பனிமலர் என்று பெண்ணை உருவகப்படுத்திக் கூறுகிறார் கவிஞர் பொனனடியான். அவ்வுருவத்தையே அவர் ஒரு நூலுக்குத் தலைப்பாகத் தந்துள்ளார். அதில் அவர் பாடியுள்ள 32 பாடல்களும் பெண்ணைப் பல கோணங்களில் படம் பிடித்திருப்பனவே. இந்நூல் இவருடைய முதல் நூல் என்பது குறிப்பிடத்தக்கது. இந்நூலுக்கு விழிவாசல் அமைக்கின்ற கவிஞர், "இத்தொகுப்பிலுள்ள கவிதைகள் எனக்காக, என்னை வைத்து எழுதப்பட்டவை அல்ல உங்கட்காக உங்களை வைத்து எழுதப்பட்டவையாகும்" என்று முன்னெச்சரிக்கை யோடு எழுதுகிறார்.

இவருடைய காதல் பாடல்களில் விரசமான காம உணர்வுகள் இடம் பெறாமை குறிப்பிடத்தக்கது. இவர் அதைக் கண்டிக்கவும் செய்கிறார்.

இவர் எழுதிய குறுங்காவியமான 'ஓர் இதயத்தின் ஏக்கம்' அழகான காதல் காவியம். இக்காவியம் ஓர் இதயத்தில் பூத்த ஏக்கத்தையும் அந்த ஏக்கத்திற்கு எதிர் விடையளித்த இன்னோர் இதயத்தின் ஏக்கத்தையும் படம் பிடித்த கவிதை. தங்கள் வாழ்வில்; காதல் மணம், கலப்புமணம் புரிந்து வெற்றி கண்டவர்க்கும் அம்முயற்சியில் கருகிப் போய்க் கண்ணீர்க் கதையானோர்க்கும் இந்நூலை ஆசிரியர் காணிக்கை

யாக்கியமை குறிப்பிடத்தக்கது. இனிமேல் முளை விட்டுத் தழைக்கப் போகின்ற கவிஞர்களாவது தங்கள் வாழ்வில் காதல் மணத்தை - கலப்பு மணத்தை மேற்கொண்டு சீர்திருத்த முற்போக்கு வழியில் செல்ல வேண்டும் என்ற கவிஞரின் பேராவலே இந்நூல் எழுதத் தூண்டு கோலாயிற்று. "எத்தனைப் பேரிலக்கியங்கள் படைத்தாலும் அவைக ளெல்லாம் இக் குறுங்காவியத்திற்கு இணையாகா என்பதே என் கணிப்பு". என்று கவிஞரே பெருமிதத்துடன் கூறிக்கொள்ளும்படியான காதற் படைப்பு இது.

இவருடைய இசைத் தொகுதியான 'ஒரு கைதியின் பாடல்கள்' என்னும் தொகுதியில் உள்ள 55 பாடல்களுள் 15 பாடல்கள் பெண்மையைப் பற்றியனவே.

பொன்னடியான் கவிதைகள் என்னும் இவருடைய நூலிலும் 10 பாடல்கள் பெண்மையைப் பற்றியனவே. 'பேரழகுப் பெட்டகங்கள்' என்று அவர் கொடுத்துள்ள தலைப்பே, கவிதை நயம் பொருந்தியது. 'பறக்கத் தெரியாத பட்டாம் பூச்சிகள்' என்ற நூலிலும் 6 காதற் பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

மலர்களுக்கும் மங்கைக்கும் தொடர்பிருப்பதால் அவர் பெண் களுக்கு மலர்களின் பெயர்களையே கொடுத்துள்ளார். 'ஓர் இதயத்தின் ஏக்கம்' எனும் நூலினது கவிதைத் தலைவியின் பெயர் பொன்மலர். மற்றப் பெண்களுக்கும் முல்லை, செங்கமலம், செந்தாமரை என்றே மலர்களின் பெயரிடுகிறார். அவர் பெண்ணைக் காதலியாக, மனைவி யாக-தாயாகக் காண்கிறார்.

மென்மையும் இனிமையும் மணக்கிற வடிவம் பெண்மை!

மென்மையான வார்த்தைகளால் தாளம் தட்டி இனிமையான ஓசையினால் சந்தம் கூட்டி, நயமான கவிதை ஓவியந் தீட்டி பெண்மை யின் வடிவை, நடையை, குரலை, எழிலை, மணத்தை, சுவையை, குணத்தை, ஒரு இசைப் பாடலாய் நம்முன் நடைபயில விடுகிற நயத்தால் நம் நெஞ்சைக் கொள்ளை கொள்கிறார் கவிஞர்!

*"புன்னகை வடிவுடன்*
*உயிர்பெற்று வந்தால், எப்படியோ -*
*வடிவப்படி!*

*பூங்கொடி தென்றலில்*
*அசைந்து நடந்தால், எப்படியோ -*
*நடை அப்படி!*

*இன்னிசை பண்ணிசை*
*இணைந்து கலந்தால் எப்படியோ -*
*குரல் அப்படி!*

*எழிலெலாம் ஒன்று*
*திரண்டு அசைந்தால் எப்படியோ -*
*அவள் அப்படி!*
*.............................................."*

'ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே' என்பது பண்டைய பழமொழி.

*"பெண்நினைத் தால்ஒரு வீடு*
*துலங்கும்*
*பெருமைகள் வந்து*
*புழங்கும்! - அவள்*
*கண்நனைந் தால்அந்த வீடு*
*கலங்கும்*
*கவலைகள் காய்த்துக்*
*குலுங்கும்*

(ப.தெ.ப.பூ. 22)

என்பது கவிஞர் கூறும் புதுமை மொழி! பெண்மை வாழ்க! என்று கூத்திடுவோமடா! என்று ஆனந்தக் கூத்திடுகிறார் பாரதியார்,

*"கற்பனை வளத்திற்குக்*
*கரைகட்டி நீர்பாய்ச்சும்*
*கன்னியர் கூட்டங்கள் வாழ்க!*

(ஒரு கைதி. பா 23)

என்று பல்லாண்டு பாடுகிறார் இக் கவிஞர்.

பெண்ணின் பெருமையை உணர்ந்து பாடும் இக்கவிஞர் காதல் உள்ளத்தையும் புலப்படுத்துகிறார்.

*"பாட்டின் ஒலியினிலும் - அவன்*
*பார்க்கும் பொருள்களிலும்*
*ஏட்டில் இணைந்திருக்கும் - தமிழ்*
*எழுத்தாய் இனித்திருந்தாள்*

(பனி 17)

என்று கவிஞர் "நோக்குவ எல்லாம் அவையே போறல்" என்னும் தொல்காப்பிய இலக்கணத்திற்கு இலக்கியம் வகுக்கிறார்.

தலைவியின் வடிவழகைக் கண்ட தலைவன்,

*"வெண்ணிலவில் ஒளியெடுத்து*
*விண்மீனில் துளியெடுத்துப்*
*பொன்குழம்பை வார்த்தெடுத்து*
*வடித்த உருவமோ?-தென்*
*பொதிகைமலை மூலிகையில்*
*இழைத்த உருவமோ?".*

(பனி 29)

என வியக்கிறான். "அணங்குகொல் ஆய்மயில் கொல் கனங்குழை மாதர்கொல்" என்று வியக்கும் வள்ளுவத் தலைவனையும் விஞ்சுகிறான் இத்தலைவன்.

தலைவியின் முகத்திற்கு மதியை உவமை கூறுவர் மற்ற தலைவர்கள். இக்கவிஞரின் தலைவனோ அவன் விரும்பும் உயிரனைய முத்தமிழையே அவளுக்கு உவமையாக்குகிறான். (பனி 22)

நாணத்தையே அணிகலனாகக் கொண்ட தலைவியை நலம் பாராட்டுகிறான் தலைவன்.

*"நாணத்தைக் கோத்தெடுத்து*
*நடனஉடலில் சேர்த்து வைத்து*
*மான்பார்வை கொடுத்துச் சென்றது யாரடி?-உனக்கு*
*மங்கையென்ற பெயர் கொடுத்தது யாரடி?"*
என்று உரிமையோடு கேட்கிறான்.

தன் உள்ளம் கவர்ந்த கண்களை, அவள் காதலைக் காட்டிய கண்களை எவ்வளவு பாராட்டினாலும் காதலனுக்கு தெவிட்டவில்லை. மேயும் கண்கள், அலை பாயும் கண்கள், அகம் ஆயும் கண்கள், நெறி தோயும் கண்கள், சாயும் கண்கள், மகிழ்வீயும் கண்கள், எழில் வேயும் கண்கள், ஒளி சாயும் கண்கள், ஆடும் கண்கள், அறம் பாடும் கண்கள், அசைபோடும் கண்கள், துயர் மூடும் கண்கள், நாடும் கண்கள், தேடும் கண்கள், வளைத்தோடும் கண்கள், இரை போடும் கண்கள் என்று தலைவியின் கண்ணழகைச் சொல்லிச் சொல்லி இன்புறுகிறான் தலைவன். (ஒரு கைதி.33) அனைத்திலும் வந்துள்ள பெயரெச்சமே ஆசிரியரின் இலக்கண அறிவைச் சுட்டுகிறது. இத்தலைவியோ, 'யானோக்குங்கால் நிலனோக்கும்' என்னும் திருக்குறளைக் கற்றவள். அதனால்,

*"நான் பார்க்கும் நேரம் பார்த்து*
*நாணிநாணிக் கவிழ்ந்திருப்பாள்!*
*நான்பார்க்கா நேரம் அந்த*
*நாயகி என்மேல் கவிழ்ந்திருப்பாள்"*

(ஒரு கைதி. பா.27)

என்னும் படியாகத் தலைவனைப் பார்க்கிறாள். 'அவள் வாழ்க' என்று வாழ்த்துகிறான் தலைவன். தலைவியின் கண்ணடி பட்டதால் ஒரு காவியம் கனிகிறது. அதனால் கவலைகளே தூரப்போங்கள் என்று துன்பத்தைத் துரத்துகிறான்.

*"பழமை இருள்ஓட்டும் திறத்தாள் - புதுப்*
*பகுத்தறி வின்வழி பாய்கின்ற அறத்தாள்!*
என்று பகுத்தறிவையும் உடையவளாகத் தலைவி பொன்னி விளங்கு கிறாள். ஒரு காதலி எப்படி இருக்க வேண்டும் என்பதையும் ஆசிரியர் காட்டுகிறார். இப்பகுதி மிகச் சிறந்த பகுதி எனலாம். தலைவியின் அழகைவிடக் கொள்கைக்கே முதலிடம் கொடுக்கும் காதலனின் தனிச் சிறப்பு, இங்குப் புலப்படுத்தப்படுகிறது.

'தமிழச்சி இல்லையானால் அருகினிலும் நான் செல்லேன்". "இத்தரையில் தமிழ் தமிழர் புகழின் சீர்த்தி எண்ணாதாளாயின் நான் இணைய மாட்டேன்!" "தொண்டு செய்து நாட்டிற்காய் உழைக்கும் எண்ணம் துளியில்லை எனில் அவளைச் சுவைக்க மாட்டேன்!" "பழமைப் போக்கின் பேதையெனில் நான் அவளை நெருங்க மாட்டேன்" "அழுதிருக்கும் உலக மக்கள் நலஞ்சிறக்க ஆசையிலா ளாயின் நான் அணைக்க மாட்டேன்" "நான் என்ற நாணமின்றி

அகந்தை கொண்ட நங்கையெனில் நெஞ்சாலும் நினைக்க மாட்டேன்" (பனி 74) என்று ஆசிரியர் ஒரு காதலி எப்படி இருக்க வேண்டும் என்று படம் பிடிக்கிறார்.

இராமாயணத்தில் சூர்ப்பனகை பேரழகு கொண்டு வருகிறாள். கவிச்சக்கரவர்த்தி அவளை வருணிக்கிறார். சந்த நயம் தாளமிடுகிறது.

*"பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்கச்*
*செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடிய ளாகி*
*அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்*
*வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்"*

(கம்பரா 2859)

என்று சந்த நயத்தோடு கூறுகிறார் கம்பர். அதே போன்று கவிஞர் பொனனடியானின் கன்னிமகளும் வருகிறாள். அவளுடைய நடையழகு கண்ட கவிஞருக்கு, கவிதை நடையழகு வருகிறது. அவள் வைக்கும் அடிக்கேற்ப இவருடைய கவிதையடிகள் சிங்காரமாய்-சிருங்காரமாய் நடந்து வருகிறது.

*"சேலாடும் விழியாடச் செங்கனி இதழ்வாடச்*
*சித்திரப் பூமேனி அசைந்தாட;*
*மேலாடை மெல்லாடை மின்னிடும் புத்தாடை*
*மினுக்கி மினுக்கியே நடனமாட;*
*நூலாடும் சிற்றிடை பாலாடை நுதலொடு*
*நுண்கலை முலையகம் தூரியாட;*
*காலாடிக் காலாடி என்னுடன் உறவாட*
*கன்னிவந் தாள்துயர் ஓடவே*

(பனி 45)

என்பது ஆசிரியர் சந்த நயப்பாடல்.

இன்றைய கன்னி நாளைய தாயாகிறாள். அவள் வழிதான் பரம்பரையும் பூக்கும். அதனால் நாளை நல்ல சேய்களை உருவாக்கப் போகும் இன்றைய காதலிக்கு அவர் அறிவுரை கூறுகிறார்.

*"வருங்காலம் புரட்சிப் போக்கில்*
*வளர்வதோ நமது கையில்*
*திருக்கோலம் காட்சி தந்து*
*தெருவெலாம் அறிவு பொங்க*
*இருட்கோலம் மறைய வேண்டும்!*
*எழுச்சிக்கோர் மலர்ச்சி வேண்டும்".*

என்பது பெண்மைக்கு அவர் கூறும் அறிவுரை.

பெண்ணுரிமை பாட வந்த கவிஞர் பொன்னடியான் அவர்கள் ஆண்மை மட்டும் தான் பெண்மையின் சிறப்பைச் சொல்லிச் சொல்லி இன்புறுவதா? பெண்மையும் ஆண்மையின் சிறப்பைச் சொல்லி இன்புறலாம் அல்லவா? நாணம் இருப்பினும் தலைவனின் பெருமை கூறுவதால் நாணம் போய்விடுமா? என்ன?

காதலியின் தலைவன் தமிழ்த் தலைவன்; பகுத்தறிவுத் தலைவனின்;

"என் தமிழைக் காக்கும் வீரன் இதோ" (ஒரு கைதி.85) என்று இறும்பூது கொள்கிறாள்.

*"நீதிக்கோ அவன் துணைவன்*
*நேர்மைக்கோ அவன் தோழன்*
*சாதிமத சவைக் குழியில்*
*சாய்வோர்க்கோ அவன் பகைவன்*

(ஒரு கைதி 35)

என்று தலைவனின் புகழ் பாடுகிறாள் ஒரு தலைவி.

"காற்றிலேறி விண்ணையும் சாடுவோம் காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே" என்று பாடுவார் பாரதி. அவர் வழி வந்த பாவேந்தரோ,

*"கண்ணின் கடைப்பார்வை*
*காதலியர் காட்டிவிட்டால்*
*மண்ணில் குமரர்க்கு*
*மாமலையும் ஓர் கடுகாம்"*
என்பார். அவர் வழிவந்த இப் பாவலரோ,

*"படைமுழுதும் வெற்றி கொள்ள*
*ஒருவன் போதும்*
*மாங்குயிலார் அருகினிலே*
*இருந்து விட்டால்!*
என்று பெண்ணின் பெருமை பாடுகிறார். அதனால் மதிவிரிவும் மனவிரிவும் ஒருங்கே பெற்ற வீங்குதோள் இள்ளஞனை நோக்கி

*"ஏங்கி ஏங்கி*
*விம்மாதே தென்பாங்குத்*
*துணையைத் தேடு"*

(பனி 44)

என்று கூறுவார் கவிஞர்.

களவு கற்பாகியே தீரவேண்டும் என்பது ஆசிரியரின் கொள்கை. காதல் தோல்வியை இவர் பாடல்கள் காட்டுவதில்லை. காதலனை வருமாறு மடல் விடுக்கிறாள் காதலி ஒருத்தி.

(பனி 18-20)

*"திருமணம் மனித னுக்குத்*
*தேவைதான் மிகவுந் தேவை!*
*ஒருமனம் இணைந்த ஆண்பெண்*
*உறவின்றேல் உலகம் ஏது?*

(பனி 66)

என்று திருமணத்தை வற்புறுத்துகிறார் ஆசிரியர்.

*"அழகைச் சுவையுங்கள்*
*அள்ளிக் குடியுங்கள்*
*அரும்பாய் மலருங்கள் காதலர்காள் - ஆனால்*

*ஆருயிர் ஈருயிர்*
*ஒருயி ராகிடும்*
*இல்லறம் காணுங்கள் காதலர்காள்!*

(பனி 15)

என்பது காதலர்களுக்கு அவர் விடுக்கும் வேண்டுகோள். திருமணம் ஏன் வேண்டும் என்று கேட்போருக்கு விடையும் அவரே கொடுக்கிறார்.

*"உலகம் என்னை வாழ்த்தும்படி*
*உருவாக்க ஒருத்தி வேண்டும்*
*கலகம் வந்து சூழாமல்*
*காத்திடவே ஒருத்தி வேண்டும்!"* (பனி 21)

என்று திருமணத்திற்கான காரணத்தைக் கூறுகிறார். காதல் திருமணத்திற்குத் தடையாய் இருப்போரை,

*"தூயதமிழ்க் காதலர்க்குத்*
*தடையாய் நிற்போர்*
*தோன்முரிப்போம், தூக்கிலிடச்*
*சட்டம் செய்வோம்"*

(ஓர்.இத.ஏ. 61)

என்று காதலுக்குத் தடை விதிப்போரைச் சாடுகிறார். மண மக்களைத் தேர்ந்தெக்கும் பொறுப்பு மணமக்களுக்கே அமைய வேண்டும். பெற்றோர் தலையீடு வேண்டாம் என்பது ஆசிரியர் கருத்து.

*அப்பனுக்கும் அன்னைக்கும் வயது வந்த*
*ஆளான தம்மக்கள் திரும ணத்தில்*
*தப்பாகத் தலையிடற்கோ*
*உரிமை இல்லை!*
*தத்தமது விருப்பம்போல்*
*துணையைத்தேடி*
*எப்போதும் இல்லறத்தை அவர் நடத்த*
*இங்கினிமேல் பிள்ளைகட்கே*
*உரிமை வேண்டும்!*

(ஓர்.இத.ஏ.37)

என்பது கவிஞரின் அவா.

**காதல் திருமணம்**

சமுதாய சிற்பியாகிய இவர் காதல் மணத்தின் மூலம் கலப்பு மணத்தையும், விதவை மணத்தையும் வரவேற்கிறார். 'முளைவிட்டுத் தழைக்கப்போகின்ற கவிஞர்களாவது தங்கள் வாழ்வில் காதல் மணத்தை, கலப்பு மணத்தை மேற்கொண்டு சீர்திருத்த முற்போக்கு வழியில் செல்ல வேண்டும் என்பதே எனது பேரவா' என கவிஞரே, ஓர் இதயத்தின் ஏக்கம்' முன்னுரையில் கூறுகிறார். காதல் மணம், கலப்பு மணத்தின் மூலம்தான் நாட்டிலுள்ள சாதி, சமய, இன, மொழி வேற்றுமைகள் மறைய முடியும் என்பது அவருடைய உறுதியான எண்ணம்.

*"ஒவ்வொரு வீட்டிலும்
கலப்புத் திருமணம்
காதல் திருமணம்
உண்டாக வேண்டும் என் தோழனே -
நம்மைக்
கவ்விய வேற்றுமைச்
சனியன் கழுத்தற
இன்னும் புதுவழி
கண்டாக வேண்டும்என் தோழனே!"*

*(பொன்.148)*

எனத் தோழனுக்கு வேண்டுகோள் விடுக்கிறார்.

*"மாமன்மகள்-அடே,
அத்தை மகள் இவள்
மாறாத முறைப்பெண்
என்னும் பழம்பாட்டுக்
கோமாளி உறவெல்லாம்
குப்பையில் போட்டிடு"*

என அத்தை மகள் மாமன் மகன் உறவு கூறி, காதல் திருமணத்தை அறுக்கப் பார்ப்பவர்களிடம் பழைய மூடச் சமுதாயக் கொள்கைகளைக் குப்பையில் போடும்படி கூறுகிறார் இந்த வேகக் கவிஞர்.

*"உன்சாதி, என்சாதி,
உயர்சாதி கீழ்ச்சாதி
உளறல் வழிகளில் நீ
புரண்டதெல் லாம்போதும்"*

*(ஒரு கைதி பா.46)*

எனக் காதலனுக்குக் கூறுகின்ற கவிஞர்,

*"காவியப் பெரும் புகழ்
சோவியத் காளையைக்
கன்னித் தமிழ் மங்கை
மணந்திட வேண்டும்".*

*(ஒரு கைதி பா.66)*

என்று ஆணை விடுக்கிறார்.

*"கலப்பு மணம் பரவட்டும்
இந்த நாட்டில்
காதல் மணம் பெருகட்டும்
இந்த நாட்டில்
கலப்பு மணம் செய்யத்துடிக்கும்
காதலர்க்குக்
காப்பளிக்கத் துணியட்டும்;
அரசு; நீண்ட*

*நிலப்பரப்பில் சாதிமதப் பாகு பாடு*
*நெருப்பண்டா திருப்பதற்கே*
*உழைப்போம் நாமே"*

(ஓர்.இத.ஏ.பா.67)

என்று காதல் மணமும், கலப்புமணமும் வெற்றிபெற வழிவகைகளையும் கூறுகிறார். பல நேரங்களில் காதல் மணம் வெற்றி பெறாததற்குக் காரணம் என்ன என்பதை நன்றாக ஆய்ந்து 'ஓர் இதயத்தின் ஏக்கம்' என்ற நூலில் 'பொன்மலர்' என்ற பாத்திரப் படைப்பின் வழி கூறுகிறார்.

*"பண்பாட்டால் நாணத்தால்*
*ஒழுக்கம் என்னும்*
*பகல்வேடப் பழம்போக்கால்*
*அஞ்சி அஞ்சிப்*
*புண்பட்டுப் போய்விட்டோம்;*
*உலகத்தாரின்*
*புகைச்சலுக்கும் எரிச்சலுக்கும்*
*பயந்த தாலே*
*வெண்பட்டுத் தூயநெஞ்சில்*
*என்றும் ஆறா*
*வெட்டுக்கா யம்ஒன்றைச்*
*செய்து கொண்டோம்!*
*பண்பட்டு வளர்ந்துவந்த*
*காதல் தன்னைப்*
*பக்குவமாய்க் காக்காது*
*கெடுத்துக் கொண்டோம்!"*

(ஓர்.இத.ஏ. 28-29)

என்ற பொன் மலரின் கூற்று, காதலில் தோல்வியுற்றதனால் தற்கொலை புரிந்து கொள்ளும் கோழை நெஞ்சங்களுக்கும் சவுக்கடி கொடுக்கிறது.

**மனைவியைப் பற்றிய கருத்து**

காதலியைப் பற்றிக் கூறிய கவிஞர், இல்லறம் நடத்தத் துணை நிற்கும் மனைவியைப் பற்றியும் கூறுகிறார்.

*"எழுதி எழுதிப் பிழைக்கும் எனக்கோ*
*எனது மனைவி துணைவி! என்*
*எழுத்துக்கும் அதன் வளத்துக்கும் அவள்*
*இனிய குணமே உணவு!*

(பனி 13)

என்று ஒரு எழுத்தாளனின் பெருமிதத்துடன் கூறுகிறார். அவருடைய மனைவியினால் தான்,

*"புழுதி நிறைந்த சமுதா யத்தின்*
*வளர்ச்சிக் கேஉழைத் திருப்பேன்!*

*- நாளும்*
*பழுது கசிந்த கொடிய வர்க்காய்க்*
*கருத்துக் கள்குவித் திருப்பேன்'*

(பனி 13)

என்று-தன் கவிதைக்கு ஆணிவேராக இருப்பவள் அவள்தான்-என்று கூறுகிறார்.

மனைவியரின் உணர்வுகளை மதிக்கின்ற கணவர் இவர். வேலைக்குப் போகும் தன் துணைவியின் துன்பத்தை அறிந்தவர் அல்லவா இவர்? வேலைக்குப் போகும் பெண்களை விமரிசனம் செய்கிறார்.

*"அரசு அலுவலின்*
*அடிமைக ளாகி*
*ஆலைகள் கொழுக்கும்*
*கூலிக ளாகி*
*உரைசல் மிகுந்த*
*ஓடு வண்டிகள்*
*உரைசல்க ளாகி*
*உரைகல் லாகி*
*நாளும் தேய்ந்து*
*நலிந்து நலிந்து*
*வாழும் கொடுமைக்கு*
*வார்த்தைக ளுண்டோ?*

(ப.தெ.ப.பூ. 21)

என்பது கவிஞரின் இதயக் குமுறல்.

"கோடாலி கொண்டு மரம் வெட்டிப் பிழைக்கும் ஏழைத் தொழிலாளியின் அன்பு வாழ்க்கையை அப்படியே படம் பிடிக்கிறார். அவர்களின் பேச்சிலேயே, நாட்டுப்பறப் பாடல் மெட்டில் அமைக்கிறார்.

*"பொட்டுப் போட்ட புடவை யோடு*
*புதுர விக்கை வேண்டும் என்றேன்*
*எட்டுநா ளாகக் காக சேர்க்கிறார்*
*என்னையே தன்னை விடவும் காக்கிறார்"*

(பனி 16)

என்பது அன்புக் கணவனின் செயல் வெளிப்பாடு.

**தாய்மை**

திருமணம் முடிந்த ஓரிரு மாதங்களிலேயே மணமக்களைப் பார்ப்பவர் "என்ன ஏதாவது விசேஷம் உண்டா" என்று கேள்வி கேட்டு மகப்பேற்றை ஆவலோடு எதிர் பார்த்தல் உலக வழக்கு, திருமணம் முடிந்து நான்கு மாதங்கள் ஆன தாய் ஒருத்தியைப் பார்த்து அவளுடைய தோழி சிறந்த மக்களைப் பெற வேண்டும் என்று வாழ்த்துகிறாள்.

*"நாடு காக்கும் மறவன் ஒருவன்*
*உன்றன் வயிற்றில் பிறக்க வேண்டும்*
*வீடு காக்கும் பெண்மை மலரோ*
*உன்றன் மடியில் தவழ வேண்டும்*

(பொன். கவி.2)

என்று வாழ்த்துகிறாள். இவ் வாழ்த்தும் முறை எந்தக் கவிஞர்களும் பயன்படுத்தாத ஒரு புதுத்துறையாகும்.

சங்ககாலம் முதற்கொண்டு இன்றுவரை வேறெந்தக் கவிஞர்களும் காட்டாத தாய்மையை இவர் காட்டுகிறார். தன் கணவனிடம், கருவுற்ற தாய் ஒருத்தி நடைவண்டி கேட்கிறாள். இனி பிறககப்போகும் தன் மகனுக்கு,

*'வேங்கையாக நடந்து பழக'*
*'வைரக்கால்கள் நடந்து பழக'*
*'நாளைத் தலைவன் நடந்து பழக'*

ஒரு நடை வண்டி வேண்டும் என்று கேட்பது இதுவரை எந்தக் கவிஞரும் கையாளாத உத்தியாகும்.

சங்ககாலம் முதற்கொண்டு இன்றுவரை உடன்போக்கு மேற் கொண்ட (காதலி காதலனுடன் ஓடிப்போதல்) தன் மகளைப் பழித்தல மரபாகவே அமைந்துள்ளது. பொன்னடியான் அவர்கள் கண்ட தாயோ, ஓடிப்போன, தன் மகளை வாழ்த்துகிறாள்.

*"ஏசட்டுமே ஏசட்டுமே*
*ஊரார்எனை ஏசட்டும்-அவர்*
*என்னிஎன்னி நகைக்கட்டும்*
*கரியை முகத்தில் பூசட்டும்"*

(பனிமலர். 40)

என்பது தாயின் சொற்கள். ஊரவரின் அலருக்கு அஞ்சியே தலைவியை வருத்தும் தாய், கவிஞரின் கைவண்ணத்தால் மாற்றம் பெறுகிறாள். தன் மகளைத் தன்னிடமிருந்து பிரித்தற்குக் காரணமாக இருக்கும் மணமகனைத் தூற்றுதல் தாயின் இயல்பு. இவருடைய தாயோ தன் மருமகனின் பண்பு நலன்களைக் கூறிப் போற்றுகிறாள்.

*"படித்தவன்தான்; பண்பறிந்து*
*பழகுவோன்என் மாப்பிள்ளை!-உயர்*
*பைந்தமிழின் சுவையறிந்தோன்*
*பகுத்தறிவோன் மாப்பிள்ளை!*
*அடித்திருக்கும் ஏழைமக்கள்*
*துயர்உணர்ந்தோன் மாப்பிள்ளை!*
*-இந்தத்*
*தாயகுணம் போதாதா?*
*வாழ்களன் பெண்பிள்ளை"*

(பனிமலர் 39)

என்று, சிறந்த மணமகனின் தகுதிகளைக் கூறி அத்தகையவனைத்

தேர்ந்தெடுத்த தன் மகளையும் வாழ்த்தும் தாய் இவள் ஒருத்தியாகத் தான் இருக்க முடியும்.

நாளும் கோளும் பார்த்தறியாப் பகுத்தறிவு மணத்தையும் வரவேற்கிறாள் இத்தாய்.

*"நாளும் கோளும் பார்த்தறியா*
*நன்மணம்இது புதுமணம்!-இந்த*
*நாடுவாழ வழியமைக்கும்*
*வாழ்க்கலப் புமணம்"*

(பனி 40)

என்று கவிஞர் புதுமைத் தாயினைப் படைத்துள்ளார்.

ஒரு தாயானவள் தன் மகன் கலெக்டராக வேண்டும், டாக்டராக வேண்டும் என்றுதான் கனவு காண்பாள். இவருடைய உயர்ந்த தாயோ,

*"போராடும் ஏழையர்க்கே*
*போராட வேண்டும்நீ*
*வேரோடு மடமைகளை*
*வீழ்த்திடத்தான் வேண்டும்நீ!"*

(பொன்னடியான் கவிதைகள் 2)

என்று ஆசைப்படுகிறார்.

கவிஞரின் இன்னொரு தாய், இளமையின் உணர்வுகளைப் புரிந்து கொண்டவள்

*"இளமையில் எனக்கே*
*இருந்த ஆசைஎன்*
*மகளுக்கும் இருக்காதா?"*

(ஒரு கைதி. பா. 36)

என்று உளவியல் முறையில் நோக்குகிறாள்.

*"சாதி சமயக் கிறுக்கர் போக்கைச்*
*சார்ந்தவள் நானல்ல!-பழஞ்*
*சாத்திரச் சழக்கால்*
*சேர்ந்தவர் மனத்தைப்*
*பிரிப்பது முறையல்ல!*

*பின்ன நெருங்கும்*
*மலர்க்கொடி இரண்டும்*
*பின்னிப் பிணையட்டுமே-துளிப்*
*பிரிவும் வராது துயரும் தொடாது*
*பஞ்சணை அணையட்டுமே"*

(ஒரு கைதி பா 36)

எனப் பகுத்தறிவுக் கண்ணோடு பார்க்கிறாள்.

**பெண் கல்வி**

ஆசிரியர் பெண் கல்வியை நேரிடையாக வற்புறுத்திக் கூறவில்லை

யென்றாலும், மறைமுகமாக நகைச்சுவைபடக் கூறுகிறார். சமையற்காரி செந்தாமரை தனக்கு வந்த மடலைப் படிக்கத் தெரியவில்லை. அதனால்,

*"பதைத்தாள் துடித்தாள்;*
*கையின் மடலைத்*
*தொட்டுத் தொட்டே*
*உற்றுப் பார்த்தாள்*
*சட்டியைத் தூக்கிப்*
*பொட்டென்று போட்டாள்*
*சாற்றில் உப்பை*
*மீண்டும் தூவினாள்*
*பக்கம் வந்த பூனையை ஐயோ!*
*பட்டென் றடித்தாள்;*
*செத்தே விட்டது!"*

(ப.தெ.ப.பூ251)

என்று கல்வியின்மையால் விளையும் கேடுகளை ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார். பெண்கள் ஏட்டுக் கல்வியோடு நாட்டியக் கலையும் பயில வேண்டும் என்பது கவிஞரின் உள்ளக் கிடக்கை.

*"பாட்டியல் பண்ணியல் கற்றறிந் தேநீ*
*பாடு படுவோர்க்குத்*
*துணைநிற்க-வேண்டும்"*

(ஒரு கைதி பா 28)

கற்கும் கலைகள் எதற்குப் பயன்பட வேண்டும் என்று கூறுவதில் கவிஞரின் உயர்ந்த குறிக்கோளும் புலப்படுத்தப்படுகிறது.

இந்தச் சமுதாயத்தில் ஆணை உயர்வாகவும் பெண்ணைத் தாழ் வாகவும் கருதும் போக்கே நிலவுகிறது. இன்ப நிலையில்

*"........... கீழ்மேல் என்ற*
*காரிருளில் கிடக்கின்ற*
*மடமைப் போக்கர்*
*கட்டுகளைக் கைவிலங்கை*
*உடைத்தெறிந்தே*
*யார் உயர்வு தாழ்வென்ற*
*பேத மின்றி*
*இருவருமே சமநிலையில்*
*தோழ ரானோம்!"*

என்ற சமநிலை இவரது கவிதையில் புலப்படுகிறது.

பாரதிதாசன் வழிவந்தவர் இக்கவிஞர். கோரிக்கையற்றுக் கிடக்கும் வேரிற் பழுத்த பழங்களை அவர் பாடியதை நேரிற் கண்டவர். அவருடைய உள்ளத்தில் விதவைத் திருமணம் எழாமல் இருக்குமா? இவருடைய விதவைக்கும் 'முல்லை' என்றே பெயரிட்டுள்ளார். விதவையானாலும் இவளுக்கும் மணமுண்டு என்பதைச் சுட்டவே 'முல்லை' என்று பெயரிடுகிறார் எனலாம்.

*"புத்துருதாய் எனைப் போன்று*
*கைம்மைப் பெண்கள்*
*பொலிவற்றுக் கிடக்கின்றார்*
*வாழ்வின்று"*

*(பனி 19)*

என்று வினவுகின்றாள் படரும் துணையிழந்த முல்லைக்கொடியாள். அதற்குக் கவிஞர் கூட விடை கூறுகிறார்.

*"நித்தம் நித்தம்*
*கவிஞர்களோ மலர்கின்றார்கள்*
*நிலைமாறும்;*
*கவலைவிடு என்றேன்; சென்றாள்"*

*(பனி 10)*

என்னும் பதிலில் இளைய கவிஞர்களின் உயர்ந்த கொள்கையும் சிந்தனைத் தெளிவும், செயல் திறமும் பற்றிய நம்பிக்கையும் தெரிகிறது. காதலைப் போற்றும் கவிஞர் காம வெறியாட்டத்தைக் கடிகிறார்.

*"மங்கை அழகிற்கோ*
*மானம் அடகுவைத்தாய்;*
*தங்காமல் மீண்டும் ஏன்*
*தாகத்தால் ஓடுகின்றாய்?*

*(பனி 65)*

என்பது அவர் தொடுக்கும் வினா.

ஒரே ஒரு துணையுடன் வாழ்தலையே சிறப்பாக நினைக்கும் **கவிஞர்**, 'கலைமன்னன் டூமாஸ்' பரத்தமையால் சீரழிந்ததைச் சித்திரிக்கிறார்.

*"தையலரால் சீரழிந்தான்;*
*நைந்தபோன*
*தையலிட்ட உடையோடு*
*கருணை இல்லா*
*மையிருட்டில் நடக்கின்றான்*
*விழிநீரோடு"*

*(பனி 57)*

என்று பரத்தமையின் தீமையை விவரிக்கறார்.

சில படித்த பெண்கள், ஆணவத்தோடு நடக்கும் விதத்தைக் கண்டு நொந்த, கவிஞரின் உள்ளம் அறிவுரை கூறத் தயங்கவில்லை.

*"புதுமைப்பெண் ணாகநீ*
*வாழ்ந்திடு என்றால்*
*பொய்ம்மை வடிவாக வாழ்வதுவா?*
*போயும்போ யும்இந்தப்*
*போலிப் பகட்டினில்*
*மேனி மினுக்கித் திரிவதுவா?"*

*(பொன். கவி 2)*

என்று கவிஞனுக்குரிய உரிமையோடு பாதை மாறும் பெண்மையைக் கடிகிறார்.

இவர் பெண்ணுக்குக் கொடுத்துள்ள அடைமொழிகளைப் போல் வேறு எவரும் கையாண்டிருக்க முடியாது எனலாம். பேரழகுப் பெட்டகங்கள் என்னும் தலைப்பில் உள்ள ஒரே கவிதையில் மட்டும் 25 உருவகங்கள் பெண்களைப் பற்றியவை என்றால் இது வியப்பைத் தரும். இவர் பூவையரை, ஒப்பனை ஓடங்கள், ஒய்யாரக் கூடங்கள், ஒளிசிந்தும் மாடங்கள், சித்திரப் பாவைகள், சிங்காரச் சோலைகள், சீர்வாழ்வின் தேவைகள், புதுமையின் வடிவங்கள், பூங்காவின் வண்டுகள், பண்ணிசைப் பாடல்கள், பனிமலர் வடிவங்கள், பாங்கான கூடல்கள், புரண்டோடும் அருவிகள்

(ஒரு கைதி பா ப 22)

மென்பஞ்சு மேனிகள், மேலாக்குத் தோணிகள் கண்கொஞ்சப் பிறந்திட்ட கலைதரும் வாணிகள், பொன்னொளிர் புதையல்கள், புலர்ந்திட்ட பொழுதுகள், எந்நேரமும் நெஞ்சில் நிழலாடும் விழுதுகள், அமைதித் திருவிழி அசைவுகள், அன்புச்சுவை பொழி அருவிகள், சிமிழ்க்கும் சிலிர்ப்புக்கள்.

(பொன் கவி 2)

என இவ்வாறு உவமைகளை அடுக்கிக் கொண்டே செல்கிறார். இது அவருக்கு பெண்மையின் பால் உள்ள ஈடுபாட்டையும் மதிப்பையும் புலப்படுத்துகிறது.

இவருடைய பொதுவுடைமைக் கவிதைகள் சண்டமாருதமாய், உலகையே புரட்டித் தள்ளுவது போன்று மிகுந்த வேகத்துடன், உலகத்தையே கலக்கித் தள்ளும் பேரிரைச்சலுடன் வீசுகின்ற கடும்புயலாய்க் காட்சி தருகிறது. அவருடைய பெண்மைக் கவிதை களோ, பொதிகையில் பிறந்து, சந்தன மணத்தைத் தழுவி, தமிழில் தோய்ந்து, தமிழ் மதுரையில் நடந்து ஒயிலாய் வந்து மகளிரின் உள்ளத்தைக் கனிவிக்கும் இனிய தென்றலாய் அமைகிறது.



# இவர் ஒருவரே!



புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் அன்பு மாணவர் பொன்னடியான். புரட்சிக் கவிஞரின் உதவியாளராக, தொண்டராக மாணாக்கராக விளங்கியவர். அவரின் இறுதி நாள் வரை பாவேந்தரின் நிழலாகத் தொடர்ந்தவர். புரட்சிக் கவிஞரின் வாழ்க்கையின் ஓர் அங்கமாகித் திகழ்ந்த அவர் பற்றி பாவேந்தரின் மகன் இப்படி எழுதுகிறார்.

"இருபதாண்டின் முன்னர் இருந்த காட்சியினை ஒப்பிட்டுப் பார்க்கிறேன். பாரதிதாசன் திரைப்பட நிறுவனத்தின் கணக்கை எழுத வேண்டும்; குயில் இதழின் நிர்வாகத்தைப் பார்க்க வேண்டும். வருவோர் போவோர்க்கு விடைகூறியாக வேண்டும்; குயில் இதழுக்கு வரும் பாடல்களை முறைப்படுத்த வேண்டும். இத்தனைக்கும் மேலாகவும் முதன்மையாகவும் பாவேந்தர் எழுதிக் குவித்த பாடல்களை எல்லாம் பெயர்த்து எழுதவேண்டும். இன்னும் எத்தனையோ வேண்டும்-வேண்டும்!

**இத்தனைக்கும் பொறுப்பு ஒரே பொன்னடி. இந்த ஒன்றைப பனை மரம் ஒரு பண்டயே ப்பாசறையிறங்க நிழல் கொடுத்துக் கொண்டிருக் கிறது.**

**இவர் பாவேந்தர் சிடர் என்ற ஒரே காரணத்திற்காகப் பல தாக்குதல் களுக்கு ஆளானவர்".**

இப்படித் தொடர்கிறது திரு மன்னர் மன்னன் கவிஞரின் இலக்கியப்பணி. வெள்ளி விழா மலருக்காகத் தம் கைப்பட எழுதிய பாராட்டுக் கட்டுரை.

இதையே மெய்ப்பிக்கும் வகையில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் 15.5.1962-ம் நாளிட்ட குயில் இதழின் தலையங்கத்தில் இப்படி எழுதுகிறார். இதோ அந்தத் தலையங்கத்தின் ஒரு பகுதி.

**"சென்ற குயிலில் (1.5.62) பிழைகள் ஏராளம்.**

**அதற்குக் காரணம் இன்னும் அலுவலினரை வேண்டிய அளவு அமைக்காததே. இப்பொழுது அலுவல் பார்த்து வருகின்றவர்கள் எத்தனை பேர் என்பதையும் இப்போது சொல்லிவிட எண்ணு கிறோம். 10 பேர் இருப்பார்கள் என்று எண்ணிவிட வேண்டாம். அல்லது 5 பேர்கள் இருக்கலாமோ என்று நீங்கள் எண்ணி விடக்கூடும்.**

**நான் ஒருவன், பொன்னடி ஒருவர்.**

சென்ற இதழில் பிழை பார்க்க ஆள் இல்லாததால் இருப்பவர்க்கும் ஒய்வில்லாததால் இலக்கணப் பிழை மிகுதியாயிற்று. அதற்காக வருந்துகிறோம்.

இப்படி பாவேந்தரின் அந்த வரலாற்றுச் சிறப்புமிக்க தலையங்கம் தொடர்கிறது.

இன்னொரு முக்கியமான செய்தி அதே குயில் இதழின் 7-ஆம் பக்கத்தில் பொன்னடியாரின் சிறப்புகளை, முக்கியத்துவத்தை வைத்துக் கொஞ்சம் கற்பனை கலந்து ஒரு கதைக் கவிதையே எழுதுகிறோர் புரட்சிக் கவிஞர்.

இந்த உண்மையை பாவேந்தரின் நெருங்கிய தொண்டர்களில் ஒருவராக இருந்த சேலம் **பெருங்கவிஞர் முருகு சுந்தரம்** அவர்களும் கவிஞரின் வெள்ளிவிழா மலரில் எழுதியுள்ள 'பொன்னடி' என்ற இதயம் தொடும் கட்டுரையில் குறிப்பிட்டு எழுதுகிறார். பாவேந்தரின் பொன்னடி தொடர்புடைய அந்த அரிய கவிதை எது? இதோ அந்தக் கவிதை.

**இறைப்பது எளிது பொறுக்குவது அரிது!**

என்கணக்கன் எல்லப்பன் இல்லா நேரம்
இரிசப்பன் என்னிடத்தில் வந்து குந்தி
"உன்கணக்கன் பெரும் பொய்யன் என்று சொன்னான்
உண்மையிலே அவன் தீயன் என்று சொன்னான்.
அன்னவனை இன்றைக்கே நீக்க வேண்டும்
அன்பினால் இதைஉன்பால் சொல்லு கின்றேன்"
என்றுரைத்தான். "இரிசப்பா என்க ணக்கன்
ஏன் தீயன்?-உரையப்பா" என்று கேட்டேன்.

"நேரிலும்நான் அறிந்ததுண்டு பிறர்வா யாலும்
நிறய நான் கேட்டதுண்டு. பொய்யா சொல்வேன்
பாரில்அவ னைப்போலே முடிச்சு மாறிப்
பையனைநாம் பார்த்திடவும் முடியா" தென்றான்
சீரிய என் எல்லப்பன் தீயன் ஆன

சேதியைநான் இன்றுதான் கேட்க லானேன்!
ஏரோட்டப் போகாமல் இரிசப் பன்தான்
எல்லப்பன் மேற்பழியை அடுக்கு கின்றான்.

என்நலத்துக் குழைப்பதாய்ச் சொல்லிச் சொல்லி
இயல்புடையார் நண்புடையார் சொந்தக் காரர்
தந்நலத்தை எண்ணிஎனை ஏய்த்துச் சென்றார்
தனிஓர்ஆள் எல்லப்பன் துணையாய் நின்றான்
அன்னவனும் போய்விட்டால் நிலைமை என்ன?
ஆம்! எனினும் "அன்புள்ள இரிசப் பாநீ
சொன்னபடி எல்லனை நான் நீக்கி விட்டேன்
தோதாய்நீ வேலைபார்" என்று சொல்லி

போய்வாஎன் றேஉரைத்தேன்! இரிசன் போனான்
புதன் கிழமை மாலையிலே சாலை ஓரம்
நேயனாம் கணக்கனிடம் இரிசன் என்ற
நெருப்புமனக் கொடும்பாவி நிகழ்த்து கின்றான்:
"நாயேடா எல்லப்பா உனைத்தொ லைத்தேன்
நான்தாண்டா இனிக்கணக்கன்; என்வி ருப்பம்
தீயேஎன் றாலும் அது தென்றல்" என்றான்.
செவிமடுத்தேன். அவன் சொல்லை மறைந்து நின்றே

அலுவலகம் இரிசனார் அதிகா ரத்தில்
அடங்கிற்று நானும்உள் ளூரில் இல்லை.
தொலை நோக்கிச் சென்றுவிட்ட தாய்நி னைத்தான்
தொடங்கினார் காரியத்தை இரிச னாரும்!
விலைஏறப் பெற்றஎன் மேசை யைத்தன்
வீட்டுக்கு வண்டியிலே ஏற்றிச் சென்றான்
குலைகுலையாய்ப் பழந்தொங்கும் மாம ரத்தைக்
கொலைகாரன் சூளைக்கு விற்று விட்டான்.

வெட்டுமுன்னே குறுக்கிட்டேன்; வெட்டா வண்ணம்
வெடுக்கென்று கோடரியைப் பறித்துக் காத்தேன்
பெட்டியிலே இருப்பென்ன என்று பார்த்தேன்
பெரிய தொகை காணவில்லை. என்ன என்றேன்.
எட்டுநூ றெடுத்துள்ளேன் என்பற் றாக
எழுதிவைத்தேன் பார்கணக்கை என்று சொன்னான்
இட்டார்கள் சிறையினிலே இரிச னாரை
எல்லப்பனைக்கெஞ்ச யாரால் ஆகும்?

- பா

இப்படி புரட்சிக் கவிஞர்-பொன்னடி தொடர்புடைய பல ஆதாரங்கள் உள்ளன. புரட்சிக் கவிஞரின் புகழுக்குக் களங்கம் ஏற்பட்ட போதெல்லாம் அந்த களங்கங்களை ஏற்படுத்திய கயவர்களை தன்

பேச்சாற்றலால், எழுத்தாற்றலால் வெகுண்டெழுந்து கவிஞர் பொன்னடியான் விரட்டியடித்துள் ளார். இது தமிழகம் அறிந்த உண்மை.

இதை மெய்ப்பிக்கும் வகையில் பாவேந்தரின் பெயர்த்தி (பாவேந்தரின் மூன்றாம் மகள் ரமணியின் மகள்) கவிஞர் மணிமேகலை ஒரு மடலில் இப்படி உணர்ச்சி மயமாகக் குறிப்பிடுகிறார்.

"கவிஞர். ஐயா,

**பாவேந்தரின் புகழுக்குக் களங்கம் ஏற்படுத்தும் வகையில் ஒரு கயவனால் எழுதப்பட்ட புரட்டுக் கதைகளை நான் படிக்க ஆரம்பித்த மறு நிமிடமே எனக்குக் குருதி எழுச்சி வந்து விட்டது. அமைதிப் படுத்தியவாறே மறுபடி மறுபடி படித்தேன். எனக்கு வ்ருத்தம் என்னவென்றால் எனக்கு இதுபற்றி எதுவும் தெரியாது. தெரிந் திருந்தால் இங்கிருந்து ஒரு படையையே திரட்டிக் கொண்டு வந்திருப்பேன்.**

**தாங்கள் ஒருவரே முன் நின்று இத்தகைய கொடியவர்களோ போராடி இத்தனை பெருஞ்செயல்கள் செய்து வந்துள்ளதை நினைக்கையில் பயம் என்றால் என்னவென்று கேட்கும். பாவேந்தரின் தலையாய மாணாக்கர் இவர் ஒருவரே என்று அனைவர் விரலும் உங்களையே சுட்டும் என்பதைப் பெருமகிழ்ச்சி யுடன் தெரிவித்துக் கொள்கிறேன்" என்று கூறும் திருமதி மணிமேகலையின் கணிப்பு தமிழகம் தலைவணங்கி ஏற்றுக் கொள்ளும் கணிப்பு என்பதே நூற்றுக்கு நூறு உண்மை.**

**திருமதி. நைட்டிங்கேல்**





# போற்றும் பணி புரிபவர்!

**கவிஞர் குருவிக்கரம்பை சண்முகம்**

பொன்னடியான் என் இனிய நண்பர் மட்டுமல்ல! உடன் பிறவாத சகோதரரும் ஆவார்! நாங்கள் எல்லாம் ஒரு கூட்டுப் பறவைகள்! ஆம்! புதுவைக் குயிலின் வழித் தோன்றல்கள்!

பொன்னடியான் செயல்திறம் மிக்கவர்! அமைப்புக்களை உருவாக்கி பலருக்குப் பயன் தரும் நற்பணி புரிபவர்! முற்போக்கானவர்! ஏழை எளியவரும் பாடி மகிழும் கவிதைகளை இயற்றுவதில் வல்லவர்!

அயராத நெஞ்சுரமும் இடையறாத நற்பணிகளும் பொன்னடியானின் தனிச்சிறப்புகள்! சாதி, சமய, வட்டார மனப்பான்மைகளைக் கடந்து தமிழ், தமிழன், மனிதன் என்ற கண்ணோட்டங்களில் ஊறி வளர்ந்து உழைக்கும் பெருமக்கள் கூட்டத்தின் உயர்வுக்காகப் பாடுபவர்! பாடுபடுபவர்!

'ஓர் இதயத்தின் ஏக்கம்' என்ற காப்பியம் அவரைச் சிறந்த கவிஞராகவும், இனிய காதலராகவும் தமிழகத்துக்கு அறிமுகப்படுத்தியது!

ஒரு கவிஞனின் வாழ்க்கை ஒரு நல்ல காவியமாக முடியும் என்பதற்குப் பொன்னடியான் இயற்றிய 'ஓர் இதயத்தின் ஏக்கம்' என்ற காவியம் நல்ல எடுத்துக் காட்டாகும்!

இதழாசிரியர் என்ற முறையில் அவரது பணி மிகவும் வியக்கத் தக்கது. தன்னந்தனி மனிதராக அவர் தொடர்ந்து பல ஆண்டுகளாக நடத்தி வரும் 'முல்லைச்சரம்' தமிழ்க் கவிஞர் பலர் தம் வளர்ச்சிக்கு உதவியது.

'கடற்கரைக் கவியரங்கம்' பல கவிஞர்களை ஞாயிற்றுக்கிழமைகளில் கடற்கரைக்கு அழைத்ததோடு மட்டுமல்லாமல், சாதி, சமயக் காழ்ப் பற்ற கவிதை உலகுக்கும் அழைத்துச் சென்றது!

கவிஞர் பொன்னடியானின் பணி கவிதைப் பணி! தமிழ்ப் பணி! கற்றவரும் ஏழை எளிய கவிஞர்களும் போற்றும் உயர் பணி! தொடர்க அவர் பணி!



# புரட்சிக் கவிஞரின் தீர்க்க தரிசனம்!

கடலூர் எம்.கே. மூர்த்தி

புரட்சிக் கவிஞர் இல்லத்தில் (10, இராமன் தெரு, தியாகராய நகர், சென்னை 17) தமிழ்க் கவிஞர் மன்றம் தொடங்கப்பட்டுள்ளது. தொடக்க விழாவில் கவிஞரின் இல்லத்தில் உள்ள பெரிய முற்றத்தில் கவிஞர்கள் கூடியுள்ளோம். அனைவரையும் இளஞ்சிட்டாக ஓடி ஓடி வரவேற்கிறார் கவிஞர் பொன்னடியான். பல ஆண்டுகள் பழகிய அன்போடு அவர் வரவேற்று உபசரித்த உபசரிப்பு இன்றும் மனக்கண் முன் நிற்கிறது. புரட்சிக் கவிஞர் புலிபாய்வது போல் அமைந்துள்ள வெளிநாட்டுப் பட்டு விரிப்புக்கு முன் அமர்ந்திருக்கிறார். அவர் வலது பக்கத்தில் பாரதியார் மகள் செல்லம்மா பாரதி அமர்ந்து பாவேந்தரோடு அன்போடு பேசிக் கொண்டிருக்கிறார். அவர் பார்வை சரியாகத் தெரியாத நிலை. அவருடன் அவர் கணவரும் வந்திருக்கிறார். இடது பக்கத்தில் எழுத்தாளர் நாரண துரைக்கண்ணன் வீற்றிருக்கிறார்.

கூட்டம் தொடங்கிய உடன் எல்லாரும் தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ளும் சடங்கு நடக்கிறது. முற்றத்தின் ஓரத்தில் கவிஞர் முருகு சுந்தரம், கவிஞர் நாக. முத்தையா 'பக்கத்தில் உட்கார்ந்திருந்த பொன்னடி' தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளாமல் உள்ளே விருந்து ஏற்பாடுகளைக் கவனிக்கும் சாக்கில், மறைந்து விடுகிறார். இதைப் புரட்சிக் கவிஞர் கவனிக்காமல் இல்லை. அடுத்து தேர்தல் நடக்கிறது. புரட்சிக் கவிஞர் தலைவராகவும், நாரண துரைக்கண்ணன் துணைத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டபின் ஆட்சிக்குழு உறுப்பினர் தேர்தல் நடக்கிறது. திரு. நாரண துரைக்கண்ணன் நின்று கொண்டு பெயர்களை எழுதுகிறார்.

அந்த நேரத்தில், "பொன்னடி" என்று இடியென முழங்கிக் குரல் கொடுக்கிறார் பாவேந்தர். பொன்னடி, "அய்யா" என்று ஓடி வந்து பாரதியார் மகள் பக்கத்தில் நிற்கிறார். "எங்க போன-சரி இப்படி உட்கார்" என்று தன் பக்கத்தில் சாடை காட்டுகிறார். பொன்னடி உட்கார்ந்தவுடன், "அதுல பொன்னடி பேரு இல்ல?" என்று கேட்கிறார். (அதாவது ஆட்சிக்குழு உறுப்பினராக அவரைத் தொர்ந்தெடுக்க வில்லையா? தேர்ந்தெடுங்கள் என்பது அதன் பொருள்) உடனே, "பொன்னடியான்" என்று அவர் பெயரை முன்மொழிகிறார்கள். உடனே புரட்சிக் கவிஞர், "பொன்னடியான் இல்லை- பொன்னடி" என்று கணீர்க்குரலில் திருத்தம் செய்கிறார். இந்த மன்றம் தொடங்கு வதற்குக் காரணமாக இருந்து, நாளை இந்த மன்றத்தைக் கட்டிக்காக் கின்ற பொறுப்பேற்கப் போகின்றவன் இப்படி அறிமுகப்படுத்தியும் கொள்ளாமல், தேர்தல் நேரத்திலும் மறைந்து நிற்கிறானே என்ற தீர்க்கதரிசன உணர்வோடு பொன்னடியை அன்று அழைத்த புரட்சிக் கவிஞரின் அழைப்பொலி இன்றும் என் காதில் எதிரொலிக்கிறது.

# ஓவியர் பார்வையில் கவிஞர் பொன்னடியார்



















ஓவியர் பார்வையில்...
—கவிஞர் பொன்னடியார்







# புதுமைக் கவிஞர் பொன்னடியான் வாழ்க்கைப் பாதை

# புதுமைக் கவிஞர் பொன்னடியார் வாழ்க்கைப் பாதை

*"ஒரு,*
*புல்முனை அளவான*
*தீப்பொறி கிடைத்தாலும்*
*பூமிக்கு ஒளியூட்டுவேன்!*
*சிறு,*
*நெல்மணி கிடைத்தாலும்*
*அதையே நான் விளைவாக்கி*
*நில மக்கள் பசிபோக்குவேன்!"*

✡ என முழங்கும் கவிஞர் பொன்னடியார் 'கவிஞர்களை வளர்க்கும் கவிஞர் எனப் போற்றப்படுபவர்.

✡ புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் அன்புக்கும் நம்பிக்கைக்கும் உரிய மாணவராகப் பணியாற்றிப் பாராட்டுகளைப் பெற்றவர்.

✡ இருபதாம் நூற்றாண்டின் தமிழ்ச் சங்கமான தமிழ்க் கவிஞர் மன்றத்தின் பொதுச் செயலாளர்.

✡ வெள்ளி விழாக் கண்ட திறந்த வெளிக் கவியரங்கங்களின் தாய்க் கவியரங்கமான 'கடற்கரைக் கவியரங்கின்' தோற்றுநர்-நடத்துநர்.

✡ 1966 ஆம் ஆண்டு முதல் 31 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கும் 'முல்லைச்சரம் பல்சுவை இதழின் நிறுவன ஆசிரியர். முல்லைச்சரத்தின் மூலம் எண்ணற்ற கவிஞர், எழுத்தாளர்களை வளர்த்தவர் - வளர்த்து வருபவர்.

✡ பல திரைப்படங்களுக்குப் பிரபலமான பல பாடல்களை எழுதிப் புகழ் பெற்றவர்.

✡ ஐக்கிய நாடுகள் சபை பண்பாட்டுக் கழகத்தில் 'ஒடுக்கப்பட்ட மக்களுக்காகப் பாடும் எழுச்சிக் கவிஞர் எனும் விருதினைப் பெற்றவர் (1970).

✡ கவிஞர் தன் இல்லத்தில் ஒரு பகுதியில் தொடர்ந்து நடத்தி வரும் 'படைப்பரங்கம் -இலவச இலக்கண இலக்கிய வகுப்புகள் புதுமையானவை.




✡ தமிழக அரசின் பாவேந்தர் பாரதிதாசன் விருதினைப் பெற்றவர் (1990).

✡ கவிஞரின் கவிதைகளை ஆய்ந்து பலர் பல்கலைக் கழகப் பட்டங்களைப் பெற்றுள்ளனர்.

✡ கவிஞரின் கவிதைகள் ஆங்கிலம், இந்தி, பெர்சியன் மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு நூல்களாக வெளி வந்துள்ளன. 4.6.1940 ஆம் ஆண்டு பிறந்த கவிஞரின் தந்தை ஆசிரியர். பெயர்: திருநாதன். அன்னை: அன்னம்மை.

✡ அறியாமை, மூடத்தனங்களற்ற, அவலங்களும் ஏற்றத் தாழ்வுகளும் அற்ற, சாதி, சமயச் சழக்குகள் அற்ற புதிய சமூகம் காண உழைப்பதே கவிஞரின் வாழ்க்கைக் கொள்கை.

✡ 1968-ல் திருமணமான கவஞரின் துணைவியார் திருமதி இந்திரா, நீர் ஆராய்ச்சித்துறை அதிகாரி. பொன்மலர் என்ற ஒரு மகளும் வெனின் குமார் என்ற ஒரு மகனும் உள்ளனர்.

## கவிஞர் எழுதிய நூல்கள்:

*பனி மலர், ஓர் இதயத்தின் ஏக்கம், ஒரு கைதியின் பாடல்கள், பொன்னடியான் கவிதைகள் (இரண்டு தொகுதிகள்) பறக்கத் தெரியாத பட்டாம் பூச்சிகள், நினைவலைகளில் பாவேந்தர், எங்கள் நினைவில் புரட்சிக் கவிஞர் போன்ற பல நூல்களை எழுதியுள்ளார்.*

## கவிஞருக்கு வழங்கப்பட்ட பட்டங்கள்:

***எழுச்சிக் கவிஞர்*** *(1970) வழங்கியவர்: திரு. சி.வி. நரசிம்மன். அப்போதைய ஐ.நா சபைத் துணை தலைவர். முன்னிலை: மாண்புமிகு டாக்டர் கலைஞர் (அப்போதைய முதல்வர்), மாண்புமிகு பேராசிரியர் அன்பழகன் (அப்போதைய நல்வாழ்வுத் துறை அமைச்சர்)*

***புரட்சிக் குயில்:*** *(1975) ஈரோடு தமிழ்ப் பெரு மன்றம்: தலைமை: கலைமாமணி குமா. பாலசுப்பிரமணியம்.*

***பெருங்கவிஞர்:*** *(1976) கவிஞரின் நூல் வெளியீட்டு விழாவில் வழங்கியவர்: கல்கண்டு ஆசிரியர் (அமரர்) தமிழ்வாணன், முன்னிலை: கல்விக் காவலர் நெ.து. சுந்தர வடிவேலு, பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார்.*

**உணர்ச்சிக் கவிஞர்:** *(1985) கவிஞரின் இலக்கியப் பணி வெள்ளி விழா. தலைமை: முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் முன்னிலை: பன்மொழிப் புலவர் அப்பாத்துரையார், பெரேழுத்தாளர் நாரணதுரைக் கண்ணன், டாக்டர் நாவலர், கவிஞர் மருதகாசி.*

**புதுமைக் கவிஞர்** *(1989) (மலேசிய பொன்பாவலர் மன்றம்) வழங்கியவர்: மாண்புமிகு டத்தோஸ்ரீசாமுவேல்.*

## கவிஞர் பணியாற்றிய சிறப்புப் பொறுப்புகள்:

- *திரைப்படத் தணிக்கைக் குழு உறுப்பினர். (29278 ம் நாளிட்ட நடுவணரசின் ஆணைப்படி)*
- *1981 ஆம் ஆண்டின் தமிழக முதல்வர் டாக்டர் எம்.ஜி.ஆர் தலைமையில் இயங்கிய பாரதியார் நூற்றாண்டு விழா மேல் மட்டக்குழு உறுப்பினர்.*
- *1985 ஆம் ஆண்டு நடைபெற்ற தமிழக முதல்வர் டாக்டர் எம்.ஜி.ஆர் தலைமையில் இயங்கிய ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டின் சிறப்புக்குழு உறுப்பினர்.*

*தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் தலைமையில் இயங்கிய 1990 ஆம் ஆண்டின் பாவேந்தர் பாரதிதாசன் நூற்றாண்டு விழா மேல் மட்டக்குழு உறுப்பினர்.*

## புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் கவிஞர் பொன்னடியாருக்கு வழங்கிய நற்சான்று.

“திரு பொன்னடி என் கவிதை இதழாகிய குயில் வார ஏட்டின் எழுத் தாளராகவும், உதவியாளராகவும் பன்னாள் நன்கு தொண்டாற்றியவர். அவர் மேலும் ஒரு நல்ல கவிஞர். இந்த அரும்பணிக்கு ஆதாரமாக அவரிடம் இலக்கண அறிவும் இலக்கிய அறிவும் அமைந்திருக்கின்றன.

நல்ல குணம், செயல் உடையவர் என்பதோடு கடமை தவறாமை அமையப் பெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது.

*(ஒப்பம்)* **பாரதிதாசன் 24-11-63**

***(வேறொருவருக்குக் கவிஞர் நற்சான்று வழங்கிவிட்டு அருகில் இருந்த பொன்னடியிடம், “நீயும் இப்படி ஒன்னு வாங்கி வச்சுக்க பயன்படும்” என்று அவராக வழங்கியது. அவர் மறைவதற்கு 4 மாதங்களுக்கு முன் வழங்கினார் என்பது குறிப்பிடத்தக்கது.***



ஆசிரியர்: பாவேந்தர் பாரதிதாசன்

10, இராமன் தெரு, சென்னை-17

நற்சான்று

[illegible]

பாரதிதாசன்

26-11-63

பாவேந்தர் பாரதிதாசன் தாம் மறைவதற்கு சில மாதங்களுக்கு முன் தம் மாணாக்கர் கவிஞர் பொன்னடியாருக்கு அளித்த நற்சான்று.

# முத்தமிழ்க் காவலர் பாராட்டு



**கவிஞர் பொன்னடியார் இலக்கியப்பணி வெள்ளி விழாவில் பாராட்டுப் பட்டையம் அளித்து வாழ்த்துகிறார் முத்தமிழ்க் காவலர்.**

"ஒரு கவிஞனுக்குக் கவிஞர்களே விழா எடுப்பது புதுமையானது. வரவேற்கத் தக்கது.

எல்லோரும் பேசுவார்கள். அவர்களால் செயல்பட முடியாது. கோடை இடி இடிக்கும். குளம் நிரம்பாது. மழை பெய்தால்தான் குளம் நிரம்ப வேண்டும். ஆகவேதான் செயற்கரிய செய்பவர்களைப் பெரியவர் என்கிறார் திருவள்ளுவர். ஒரு பத்திரிகையை (முல்லைச்சரம்) தொடர்ந்து 22 ஆண்டுகள் (1985) நடத்துவது என்பது செயற்கரிய செயல்தானே. 17 ஆண்டுகளாக (1985) கடற்கரைக் கவியரங்கத்தை, இலக்கிய இலக்கண வகுப்பை நடத்தித் தமிழ்க் கவிதை இலக்கியத்தை வளர்ப்பது என்பது செயற்கரிய செயல்தானே. இத்தகைய அரிய செயல்களைச் செய்து வருவதோடு இளைஞர்களை வழி நடத்து வதாலும் பொன்னடியார் பெரியவர் தானே?"

***(கவிஞரின் இலக்கியப் பணி வெள்ளி விழாவின் உரையில் சிறுபகுதி – 1985)***

# பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் பாராட்டுரை



**கவிஞர் பொன்னடியார் நூல் வெளியீட்டு விழாவில் கல்விக் காவலர் நெ.து. சுந்தர வடிவேலு உரையாற்றுகிறார். மேடையில் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார், கல்கண்டு ஆசிரியர் (அமரர்) தமிழ்வாணன்.**

பாரதிக்குப் பாரதிதாசன், பாரதிதாசனுக்குப் பொன்னடி. கவிஞர் பொன்னடியானுக்கும் எனக்கும் ஒரு ஒற்றுமை உண்டு. நாங்கள் எல்லாம் பாவேந்தர் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். பாவேந்தருக்கும் எனக்கும் நல்லெண்ணத் தூதராக விளங்கியவர் பொன்னடியார்.

பாவேந்தர் ஒரு பரம்பரையையே உருவாக்கினார். பொன்னடியார் ஒரு தோப்பையே உருவாக்கினார். அதுவும் அவரே நீர் வார்த்து வளர்த்த தமிழ்த் தோப்பு. தமிழ்க் கவிஞர் மன்றம், முல்லைச்சரம், கடற்கரைக் கவியரங்கம் போன்ற மூன்று வழிகளில் செயல்படும் அவரின் இயக்கம் பிற மாநிலங்களிலும் வளர்ந்துள்ளது. அது உலகளாவியும் நாளை வளரும் என்பது உறுதி. பொன்னடியாரின் தொண்டு மிக அடக்கமானது, அமைதியானது, நீடித்தது.

***(கவிஞரின் இலக்கியப்பணி வெள்ளி விழாப் பேச்சில் சிறு துளி – 1985.)***

## சிலம்புச் செல்வர் ம.பொ.சி. வாழ்த்து




*பாராட்டு விழா ஒன்றில் சிலம்புச் செல்வர் அருகில் கவிஞர் பொன்னடியார், கவிஞர் முருகு சுந்தரம், கவிஞர் மீரா.*

தமிழ் அன்னையைத் தனது முல்லைச்சரத்தால் அணி செய்து வணங்கி வழிபடுவர் கவிஞர் பொன்னடியான். பாரதிதாசனாரின் மாணவராகிய அவர் அந்த மகாகவி மறைந்த பின் தமிழ்க் கவிஞர் மன்றத்தின் காப்பாளராகப் பொறுப்பேற்று நல்ல முறையில் நடத்தி வருவது பாராட்டத் தக்கதாகும்.

**(கவிஞரின் இலக்கியப்பணி வெள்ளிவிழா மலரின் வாழ்த்தில் ஒரு பகுதி)**

## தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் பாராட்டு

தமிழ்க் கவிதையின் பெயரால், இலக்கியத்தின் பெயரால் ஒரு மாநாடு நடத்தி நாற்பதினாயிரம் ஐம்பதினாயிரம் மக்களைக் கூட்ட முடியும் என்பதை இந்தத் தமிழ்க் கவிஞர் மாநாட்டின் மூலம் அறிந்து அளவிலா மகிழ்ச்சி அடைகின்றேன். இந்த அரிய செயலுக்குக்

காரணமான தமிழ்க் கவிஞர் மன்றக் காப்பாளர்களை குறிப்பாக மூல முதல்வரான அன்புச் சகோதரர், தமிழ்க் கவிஞர் மன்றப் பொதுச் செயலாளர் பொன்னடியானை மனமாரப் பாராட்டுகிறேன்.

**(தமிழ்க் கவிஞர் முதல் மாநில மாநாட்டின் (1975) டாக்டர் கலைஞரின் தலைமை உரையில் ஒரு பகுதி)**



**தமிழ்க் கவிஞர் மன்ற முதல் மாநாட்டில் (1976) அந்நாள் முதல்வர் டாக்டர் கலைஞர், பொதுச் செயலாளர் பொன்னடியாருக்கு பொன்னாடை போர்த்திச் சிறப்பிக்கிறார். கண்டு களிப்பவர்கள்: கலைமாமணி (அமரர்) கு.மா. பாலசுப்பிர மணியம், கலைமாமணி புத்தநேரி ரா. சுப்பிரமணியம்.**

# நாவலர் இரா. நெடுஞ்செழியன் பாராட்டுரை




***கவிஞர் பொன்னடியான் இலக்கியத் தொண்டினைப் பாராட்டி டாக்டர் நாவலர் பட்டாடை போர்த்தி பாராட்டுப் பட்டயம் வழங்கிச் சிறப்பிக்கிறார்.***

*பாரதிதாசனுக்கு அமைந்த பரம்பரை போல் வேறு எந்தக் கவிஞருக்கும் அமையவில்லை. பாரதி அடித்தளம் போட்டார் பாரதிதாசன் கோபுரம் அமைத்தார். பொன்னடியான் அதைக் காத்து வருகிறார். தாமே பாவேந்தர் வழியில் புதுமைப் படைப்புகளைப் படைக்கும் கவிஞராக விளங்குகிறார். முல்லைச்சரம், தமிழ்க் கவிஞர் மன்றும் கடற்கரைக் கவியரங்கம் போன்ற மூன்று வழிகளில் செயல்பட்டுவரும் தனித்தன்மை வாய்ந்த கவிஞர் தமிழகத்தில் இவர் ஒருவரே. பொன்னடியான் தன் கவிதைத் திறத்தால் தலை நிமிர்ந்து நிற்கிறார்.*

***(கவிஞரின் இலக்கியப் பணி வெள்ளிவிழா (1985) தலைமை உரையில் சிறுதுளி)***




புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுடன் கவிஞர் பொன்னடியார் (முதலில் நிற்பவர்) பாண்டியன் பரிசு படத் தொடக்க விழா நாளில் எடுக்கப்பட்ட படம்.

**புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்
தம் குயில் ஏட்டின் தலையங்கத்தில்
பொன்னடியார் பற்றி எழுதியது.**

சென்ற குயிலில் (1.5.1962) பிழைகள் ஏராளம். அதற்குக் காரணம் இன்னும் அலுவலினரை வேண்டிய அளவு அமைக்காததே. இப்பொழுது அலுவல் பார்த்து வருகின்றவர்கள் எத்தனைபேர் என்பதையும் இப்போது சொல்லிவிட எண்ணுகிறோம். 10 பேர்கள் இருப்பார்கள் என்று எண்ணிவிட வேண்டாம். அல்லது 5 பேர்கள் இருக்கலாமோ என்று நீங்கள் எண்ணிவிடக் கூடும்.

நான் ஒருவன் பொன்னடி ஒருவர்.

சென்ற இதழில் பிழை பார்க்க ஆள் இல்லாததால் இருப்பவர்க்கும் ஓய்வில்லாததால் இலக்கணப் பிழை மிகுதியாயிற்று. அதற்காக வருந்துகிறோம் ————————

(குயில் 15.2.62)

## பேராசிரியர் க. அன்பழகன்

## பாராட்டுரை

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் மாணவர் பொன்னடியான். சமுதாயத்தில் உலகெங்கும் உள்ள ஒடுக்கப்பட்ட மக்களுக்காகப் பாடும் கவிஞர் என ஐநா விருது வழங்கியது. இவர் பாவேந்தரின் பகுத்தறிவுக் கொள்கையிலிருந்து தடம்புரளாதவர். எத்தனையோ நெருக்கடிகளுக்கு இடையிலும் மனம் தளராமல் பல கவிஞர்களை உருவாக்கி வருகிறார். முல்லைச்சரத்தை இடைவிடாமல் நடத்திவரும் இவரின் உறுதி பெரிதும் பாராட்டுக்குரியது. நாடு. மொழி, ஆகிய இரண்டையும் இரு கண்களாகக் கொண்டு ஓர் இயக்கத்தினை வளர்த்து வருகிற சிறப்பினை இவரிடம் காணமுடிகிறது.

***(கவிஞரின் இலக்கியப்பணி வெள்ளி விழா மலரின் வாழ்த்தில் ஒரு பகுதி 1985)***

## பேரெழுத்தாளர்

## நாரண துரைக்கண்ணன்

பாவேந்தர் புதுவையில் இருந்த போதும் சென்னைக்கு வந்து போய்க் கொண்டிருந்த போதும் பல துறைகளைச் சேர்ந்தவர்களும் அவருடன் நெருங்கிப் பழகியிருக்கின்றனர். ஆனால், அவருக்கு உண்மையில் உதவி புரிந்தவர்கள், பயன்பட்டவர்கள் வெகு சிலரேயாவர்.

புரட்சிக் கவிஞருக்கு மாணவர் பலருண்டு. அவரிடம் பாப்புனைய பயிற்சி பெற்றவர் பலருண்டு. எனக்குத் தெரிந்த வகையில் நண்பர் பொன்னடியாரிடம் எத்தகைய உண்மை அன்பு வைத்திருந்தார் என்பதை நானறிவேன். அவ்வளவு தூரம் தம் பணிவான தொண்டினால் பாவேந்தர் உள்ளன்பை நண்பர் பொன்னடி கவர்ந்திருந்தார். பாவேந்தர் பரரதிதாசன் விருது முதன் முதலாகப் பொன்னடியானுக்குத்தான் கொடுத்திருக்க வேண்டும்.

கவிதை உலகில் ஒரு விடிவெள்ளி போல் உள்ள பொன்னடியானின் கவிதைப் பணிக்கு உரிய சூழ்நிலையை அவர் நண்பர்களும் கவிஞர்களும் உண்டாக்க வேண்டும் என நான் உரிமையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

***(கவிஞரின் இலக்கியப்பணி வெள்ளி விழா மலரின் கட்டுரையில் ஒரு பகுதி.)***



கவிஞரின் 'பறக்கத் தெரியாத பட்டாம் பூச்சிகள்' நூலினை முன்னாள் மத்திய அமைச்சர் என்.டி..திவாரி வெளியிட்டு கவிஞரின் தொண்டுகளைப் பாராட்டுகிறார்.

## திரைப்படப் பாடலாசிரியர். அ. மருதகாசி

சொல்லுக்குச் சொல்லழகும் சுவையூறும் பொருளழகும்
துள்ளுதமிழ் நடையழகும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்
'முல்லைச் சரம்' தொடுத்தான் மூவாறு ஆண்டுகளாய்
பிள்ளைக் கவிஞரெலாம் பெருங்கவிஞராவதற்கு
பொன்னடியான் பொங்கு தமிழ்ப் பண்ணடியான்; பாவேந்தர்
தன்னடியான்; கவிக் கோயில் முன்னடியான் என்றே முழங்கு?
பொருளை இழந்தாலும் புகழ்மகுடம் பலருக்கு
சிரசினில் ஏற்றி வைக்கும் செந்தமிழன் வாழியவே!

*(கவிஞரின் இ.ப.வெ.வி மலரின் கவிதையில் சிறு பகுதி)*

## கவியரசு கண்ணதாசன்

தமிழ்க் கவிதை இலக்கிய உலகம் இன்று என்றுமில்லாத வகையில் புத்துணர்ச்சியுடன் வளர்ந்து வருகிறது. அதற்குப் பொன்னடியானின் அயரா உழைப்பும் ஒரு காரணம். தமிழ்க் கவிஞர்களை ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளாக இணைத்து அவர்களின் சுக துக்கங்களில் தன்னைப் பிணைத்துக் கொள்ளும் இவர் ஓர் தனி மனிதரல்லர் - ஓர் இயக்கம்.

***(திருப்பத்தூர் தமிழ்க் கவிஞர் மன்ற மாவட்ட மாநாட்டில் (1976) கவியரசர்***



***தமிழ்க் கவிஞர் மனற முதல மாநாட்டில் கவியரசு கண்ணதாசன் வாழ்த்துரைக் கிறார். மேடையில் உழைப்புச் செல்வர் ஜி. உமாபதி, கவிஞர் எஸ்.டி. சுந்தரம்.***

## கவிமுரசு வாலி

பொன்னடியார், பொருளடியார், புகழடியார் என்றெல்லாம்
பன்னடியார் படிமிசையாம் பார்த்தறிவோம்; பாட்டாளர்
தன்னடியார்ன் தானென்று தைரியமாய்த் தெரிவிக்கும்
பொன்னடியார் ஒருவன்தான் பொதுவுடைமைக் கவிஎன்பேன்!

***(கவிஞரின் இலக்கியப் பணி வெள்ளி விழா மலரின் கவிதையில் ஒரு பகுதி)***

## பாவேந்தர் மகன் சு. மன்னர் மன்னன்

இருபதாண்டின் முன்னர் இருந்த காட்சியினை ஒப்பிட்டுப் பார்க்கிறேன். பாரதிதாசன் திரைப்பட நிறுவனத்தின் கணக்கை எழுத வேண்டும்; குயில் இதழின் நிர்வாகத்தைப் பார்க்க வேண்டும்; வருவோர் போவோருக்கு விடைகூறியாக வேண்டும்; (குயில்) இதழுக்கு வரும் பாடல்களை முறைப்படுத்த வேண்டும்; இத்தனைக்கும் மேலாகவும் முதன்மையாகவும் பாவேந்தர் எழுதிக் குவிக்கும் பாடல்களை எல்லாம் பெயர்த்து எழுத வேண்டும். இன்னும் எத்தனையோ வேண்டும் - வேண்டும்.

இத்தனைக்கும் பொறுப்பு ஒரே பொன்னடி. இந்த ஒற்றைப் பனைமரம் ஒரு படையே பாசறையிறங்க நிழல் கொடுத்துக் கொண்டிருக்கிறது.

---

இவர் பாவேந்தர் சீடர் என்ற ஒரே காரணத்திற்காகப் பல தாக்குதல்களுக்கு ஆளானவர். இனிய தமிழ்த் தொண்டு செய்து பல காலம் வாழ்க!

**_(கவிஞரின் இலக்கியப்பணி வெள்ளி விழா மலரின் வாழ்த்துரையில் சிறுபகுதி)**




**கவிஞர் பொன்னடியார் இலக்கியப்பணி விழாவில் திரு. சு. மன்னர் மன்னன் வாழ்த்துகிறார்.**

## நாவலாசிரியர் எழுத்தறிஞர் அகிலன்

இந்த நாடு பெற்றெடுத்த மிகப் பெருங்கவிஞர் பொன்னடி அவர்கள். அவரின் கவிதைகள் தலை சிறந்தவை. இந்த நாட்டின் பல்வேறு துறைகளில் உள்ள கவிஞர்களுக்கு அவர் வழிகாட்டி.

(கவிஞரின் இலக்கியப்பணி வெள்ளி விழா மலரின் வாழ்த்துரையில்.)

## நடிகமணி டி.வி. நாராயணசாமி

பாவேந்தரோடு யார் யாரோ இருந்தார்கள்-போனார்கள். ஆனால், பொன்னடிதான் அவர் அந்திம காலத்தில் உடன் இருந்து அவருக்கு வேண்டியவைகளையெல்லாம் செய்து வந்தார் என்பதை நானறிவேன்-நாடு அறியும்.

பொன்னடி நன்றியுள்ளவர்; எளிமையானவர்; பண்புள்ளவர்; மரபுக் கவிஞர்; அவரது தொண்டு நாட்டுக்குத் தொடர்ந்து கிடைக்க வேண்டும். அதற்கு நாம் அவருக்குத் துணை நிற்க வேண்டும்.

(கவிஞரின் இலக்கியப் பணி வெள்ளி விழாவில் (1985) நடிகமணி)

## திருமதி ஜோதி வெங்கடாசலம்

முன்னாள் அமைச்சர் – முன்னாள் கேரள ஆளுநர்

தமிழகத்தின் பெருமைக்குரிய புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட செய்தியைக் கவிஞர் பொன்னடியான் மூலம் அறிந்து, அப்போதைய சுகாதார அமைச்சராக இருந்த நான், அவர் உயிரைக் காக்க உடனே ஓடினேன். புரட்சிக் கவிஞரின் அன்பு மாணவராக அவரின் இறுதி மூச்சுவரை அவருக்குத் தொண்டூழியம் செய்தவர் கவிஞர் பொன்னடியான் என்பது யாவரும் அறிந்த செய்தி.

சிறந்த படைப்பாளராகவும் தம் ஆசான் பாரதிதாசன் வழியில் இருந்து கொண்டு, மற்ற வளரும் கவிஞர்களையும் வளர்த்துவரும் கவிஞர் பொன்னடியான் தொண்டு நாளைய தலைமுறையினரால் அல்ல, இன்றைய தலைமுறையினராலேயே போற்றத்தக்கது.

(கவிஞரின் இலக்கியப் பணி வெள்ளி விழா மலரின் வாழ்த்துரையில் ஒரு பகுதி.)



'எழுச்சிக் கவிஞர்' என்ற பட்டமளித்து முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் கவிஞர் பொன்னடியானுக்குப் பொன்னாடை போர்த்துகிறார். 1985



தமிழ் எழுத்தாளர் மன்றப் பாராட்டு விழாவில் கவிஞர் பொன்னடியானுக்கு விருது வழங்கிச் சிறப்பிக்கின்றனர்.



பாவேந்தர் விழா—பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் அருகில் கவிஞர் பொன்னடியார். உரையாற்றுபவர் பாவேந்தர் திருமகள் திருமதி வசந்தா தண்டபாணி.



சிங்கப்பூர் தமிழ் எழுத்தாளர் சங்கப் பாராட்டு விழாவில் தலைவர் – கவிஞரேறு அமலதாசன் கவிஞர் பொன்னடியாரை வரவேற்கிறார்.

வாழ்வியல் கவிஞர் பொன்னடியாரை வைதீக பெருமக்களும் வாழ்த்திச் சிறப்பிக்கிறார்கள்.






தமிழ்க் கவிஞர் மன்ற விழாவில் பேரெழுத்தாளர் நாரணதுரைக் கண்ணன் பன்மொழிப்புலவர், கவிஞர் பொன்னடியார். அருகில் கவிஞர் வான்முகில்.

மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் நடந்த கவிஞரின் பாராட்டு விழாவில் (8.1.89) மலேசிய நாட்டு அமைச்சர் மாண்புமிகு டத்தோ ஸ்ரீசாமுவேல் 'புதுமைக் கவிஞர்' எனும் பட்டமளித்து மாலை அணிவிக்கிறார்.



அதே விழா மேடையில் டாக்டர் 'சுந்தரம், டத்தின் ஸ்ரீ இந்திராணி போன்ற பெருமக்கள் அமர்ந்துள்ளனர்.




'முல்லைச்சரம்' புதிய வடிவ வெளியீட்டுவிழா: இசைஞானி இளையராஜா, வித்வான் வே. லட்சுமணன், தொழிலதிபர் ஜி.உமாபதி, குமுதம் துணை ஆசிரியர் லேனா தமிழ் வாணன், எழுத்தாளர் இந்துமதி.

தினத்தந்தி பொன்விழா சிறப்பு விருதினை சிறப்பு விருந்தினரான கவிஞர் பொன்னடியாருக்கு தினத்தந்தி அறக்கட்டளைத் தலைவர் திரு. சிவந்தி ஆதித்தன் வழங்குகிறார்.



கவிஞர் பொன்னடியானுக்கு அளிக்கப்பட்ட சிங்கப்பூர் பாராட்டுவிழா விருந்து நிகழ்ச்சி. கவிவாணர் இக்குவனம் வரவேற்கிறார். காலைக் காவலர் காந்தம், நீதிபதி கலா மோகன், எழுத்தாளர் ஏ.பி.ராமன்.




மலேசியாவில் நடந்த பாராட்டு விழாக்களின் ஒன்று.



கவிஞர் பொன்னடியாருக்கு பெருங்கவிஞர் பட்டமளித்து – கல்கண்டு ஆசிரியர் (அமரர்) தமிழ்வாணன் பாராட்டுரைக்கிறார்.



கவிஞர் மகள் பொன்மலர் திருமணவிழாவில் கவிஞரின் குடும்பத்தினர்.

**கடற்கரைக் கவியரங்கம் 25–ஆம் ஆண்டு வெள்ளிவிழா–சில காட்சிகள்.**



முன்னாள் அமைச்சர் கவிஞர் வேழவேந்தன் கடற்கரைக் கவியரங்கத் தோற்றுனர் கவிஞர் பொன்னடியாருக்கு ஆடை போர்த்திச் சிறப்பிக்கிறார்.



வெள்ளிவிழாக் கவியரங்கத் தலைவர்–மூத்த தமிழறிஞர் டாக்டர் நா. சுப்பு ரெட்டியார், கவிஞர் வேழ வேந்தன், டாக்டர் மெய்கண்டார், தமிழ்க் கவிஞர் மன்றத் தலைவர் கலைமாமணி முகவை ராஜமாணிக்கம்.

**BharathiDassan Pictures**

MOTION PICTURE PRODUCERS

10, Raman Street, T'NAGAR - MADRAS-17.

28.11.62

திரு. பொன்னடி

வணக்கம்

ஐம்பது ரூபாய்

கிடைக்கப் பெற்றேன்

நன்றி

[illegible]

[illegible]

[illegible]

பாரதிதாசன்

கவிஞர் பொன்னடியாருக்கு பாவேந்தர் எழுதிய கடிதங்களில் ஒன்று.

# திரைத் துறையில் பொன்னடியார்

தமிழ்க் கவிதை இலக்கிய உலகில் புதிய வரலாறுகளைப் படைத்துள்ள கவிஞர், தமிழ்த் திரைப்பட உலகிலும் பல படங்களுக்குப் பாடல்கள் எழுதி புகழ் பெற்றுள்ளார். இவர் பாடல்கள் எழுதிய படங்களில் சில:

'நெஞ்சில் ஒரு முள்" "சொல்லத் துடிக்குது மனசு", "ஒருவர் வாழும் ஆலயம்", (முழுப்பாடல்கள்), "ராஜாதி ராஜா", "பாட்டுக்கு நான் அடிமை", "சிங்கார வேலன்", "சின்னச் சின்ன ஆசைகள்", "மணிக் குயில்", "தங்கக்கிளி", "உன்னை நெனச்சேன் பாட்டுப் படிச்சேன்", "என் ராசாவின் மனசிலே", "பரதன்", "எங்க தம்பி," "சின்னச் சிட்டு", "அரண்மனைக்கிளி", "அமைதிப்படை", "செவ்வந்தி", "பெரியமருது", "எல்லாமே என் ராசாதான்", "இளையராகம்", "கட்டப் பஞ்சாயத்து" முதலான படங்களுக்குப் பாடல் எழுதியுள்ளார்.

மற்றும் இவர் பாடல்கள் எழுதிய மொழி மாற்றுப் படங்கள்:

"இலட்சியப் போராட்டம்" (முழுப்பாடல்கள்) "சாகசக்காரன்" (முழுப்பாடல்கள்) "மாய மோகினி"

இவர் எழுதிய பாடல்களில் குறிப்பிடத்தக்கவை.

*எங்கிட்ட மோதாதே*
*நான் ராஜாதி ராஜனடா* **("ராஜாதி ராஜா")**

*தூது செல்வதாரடி*
*உருகிடும் போது செய்வ தென்னடி* **("சிங்கார வேலன்")**

*மலையோரம் மயிலே விளையாடும் குயிலே*
*விளையாட்டைச் சொல்லித் தந்ததாரு?*
**("ஒருவர் வாழும் ஆலயம்")**

*உயிரே உயிரே உருகாதே*
*கனவே மயிலே கருகாதே*
**("ஒருவர் வாழும் ஆலயம்")**

*சிங்காரப் பெண்ணொருத்தி*
*சீரான செம்பருத்தி* **("ஒருவர் வாழும் ஆலயம்")**

தாலாட்டுக் கேட்காத
பேரிங்குயாரு
தாய்போல வேறிங்கு யாரு? ("பாட்டுக்கு நான் அடிமை")

போடா போடா புண்ணாக்கு
போடாதே தப்புக்கணக்கு ("என் ராசாவின் மனசிலே")

குயில் பாட்டு வந்ததென்ன இளமானே
அதைக் கேட்டு செல்வதெங்கே மனம்தானே!
("என் ராசாவின் மனசிலே")

என் தாயெனும் கோயிலைக்
காக்க மறந்திட்ட பாவியடி கிளியே! ("அரண்மனைக் கிளி")

இப்படை தோற்கின்
எப்படை வெல்லும் - வெற்றி வருது வெற்றி வருது
புதிய உலகம் நமது என்று விழித்தெழு! ("அமைதிப்படை")

அழகே அமுதே பூந்தென்றல்
தாலாட்டும் பூஞ்சோலையே
("பரதன்")

சிங்காரமா நல்ல ஒய்யாரமா
ஏர்பூட்ட வேணும் அண்ணே அண்ணே ("பெரிய மருது")

எட்டணா இருந்தா
எட்டூருக்கென் பாட்டுக் கேட்கும்
("எல்லாமே என் ராசாதான்")

என் மீசை மேலே கை போட்டுப் பாடுவேன் - என்மேல்
ஆச வச்ச அன்னக் கிளியைத் தேடுவேன்
("கட்டப் பஞ்சாயத்து")

குயிலுக்கொரு நிறமிருக்கு-அதன்
கூலுக்குகொரு நிறமிருக்கா? ("சொல்லத்துடிக்குது மனசு")

நினைக்காத நேரமில்லை-உன்னை
நினைக்காத நேரமில்லை!
("தங்கக்கிளி")

காதலெனும் வேதம் இங்குக் கண்ணீரில்
வாடுதம்மா - நடுக்
கானகத்தில் கண்விழித்துப் பொன்மானைத்
தேடுதம்மா!
("மணிக்குயில்")



இருபத்து நான்கு வயதில் இளங்கவிஞர் பொன்னடியார்.

# பொன்னடியனின் பொன்னடிகள்

## என் மதம்

*உண்மையின் மீது நம்பிக்கை வைத்திடு*
*அதுவே என்மதம் நண்பனே!*
*உயிர்களின் மீது எப்போதும் அன்பு வை*
*இதுவே என் மனம் அன்பனே!*

*ஆயிரம் வந்தாலும் அஞ்சாமல் நின்றிடு*
*அதுவே என் வழி நண்பனே!*
*அறிவோடும் அறிவியல் நெறியோடும் சென்றிடு*
*இதுவே என்மொழி அன்பனே!*

## எழுதிடுங்கள்

*எல்லாரும் கவிதை எழுதிடுங்கள்!*
*இனியநன் நாட்டை எழுப்பிடுங்கள்!*
*பொல்லாங்கு எல்லாமும் போக்கிடுங்கள்!*
*புதுமையைத் துறைதோறும் தேக்கிடுங்கள்!*

## மனிதரைப் போல் .......

*காற்றடிக்கும் பக்கமெல்லாம் என் துடுப்பைப் போட மாட்டேன்*
*கைவலிக்கும் என்பதனால் திசைமாறிப் போக மாட்டேன்*
*சோற்றுக்கே தன் மானம் அடகு வைக்கப் பழகிவிட்ட*
*சோம்பேறி மனிதரைப்போல் பிழைக்கும் வழி தேடமாட்டேன்!*

## குணங்களால்

குணங்களால் மனிதரைத் தரம்பிரிக்கின்றேன்
கொள்கையால் அவர்களை நான் பகுக்கின்றேன்!
மணங்கமழ் பகுத்தறி வாளன் நான் என்பதால்
மதம், சாதி, அரசியலால் மதிப்பதே இல்லை!

ஆண்டவன் என்றாலும் அஞ்சினேன் இல்லை
ஆள்பவர் என்றாலும் கெஞ்சினேன் இல்லை!
மூண்டெழும் என்மனத் துடிப்பொளி யேன்நான்
மோதிடும் பகைகண்டு பயந்தொளி யேன்நான்!

## மாற்ற வேண்டும் என்பேன்!

அடிமைகளாய் நமை ஆக்கிடும்-இந்த
அமைப்புகளே மாற வேண்டும் என்பேன்-அட
மாறாவிட்டால், மாற்ற வேண்டும் என்பேன்!
கொடுமைகளால் கும்பி கொதிக்க வைக்கும்-கீழ்மைக்
கோப்புகளே மாற வேண்டும் என்பேன் - அட
மாறாவிட்டால், மாற்ற வேண்டும் என்பேன்!

## நடந்தோமா?

விண்ணை அளந்தோம்
மண்ணை அளந்தோம்
விந்தைகள் கோடி புரிந்தோம்.
ஆனால், - மனிதத்
தன்மை அறிந்து
நம்மை உணர்ந்து
உண்மை வழி நடந்தோமா?

## போர் முனைப் பாடல்!

எப்போதும் சிவப்புநான்! எரிகின்ற நெருப்புநான்
தப்பாது தவறெலாம் தடுக்கின்ற தடுப்புநான்!
போர்முனைப் பாடல்நான்! புதுமையின் ஆடல்நான்
நேர்வழி செல்வோர்தம் நெஞ்சத்தின் கூடல் நான்!

## வன்முறை ஒரு போதும்!

வாழ்வெனும் செம்பயிர் வளர்ந்து செழித்திட
வன்முறை ஒரு போதும் வழிவகுக்காது!
வையத்தின் முன்னேற்றம் வானோங்கி நிமிர்ந்திட
அம்முறை எப்போதும் துணை புரியாது!

கைகலப்புக்களும் உயிர்ப்பறிப் புக்களும்
காலத்தை வென்றிடக் கைகொடுக்காது!
கரைமீறி வருகின்ற காட்டாற்று வெள்ளமாம்
அதனாலே மனிதர்க்குப் பயன் இருக்காது!

## நீங்கள்

நீங்கள் எந்த இயக்கத்தி லாவது இணைந்தே
இழைந்து குழைந்திடுங்கள்! - ஆனால்
ஏமாற்றப் பட்டவர் ஏற்றம் பெறும் அந்த
எண்ணத்தில் மட்டும் மாற்றம் துளி இன்றி
என்றும உழைத்திடுங்கள்!

## எல்லாம் துடைப்போம்!

கலை இலக்கியம் நித்தம் வளர்ப்போம்
கவிழாத சமூகம் காண உழைப்போம்?
மானுடம் மணக்கும் மண்ணகம் படைப்போம்
மனிதர் நாம் வேற்றுமை எல்லாம் துடைப்போம்

## நடக்குமா?

இந்த உலகத்தில் வாழும் மனிதர்
அனைவரின் இல்லத்திலும் - நான்
சொந்தம் கொண்டாடிக் கலந்துற வாடிட
சிந்தனை செய்துள்ளேன் - இது
நடக்குமா? - இல்லை தோல்வி
கிடைக்குமா?

## கண்டாக வேண்டும்!

ஒவ்வொரு வீட்டிலும் கலப்புத் திருமணம்
காதல் திருமணம்
உண்டாக வேண்டும் என் தோழனே-நம்மைக்
கவ்விய வேற்றுமைச் சனியன் கழுத்தற
இன்றும் புதுவழி
கண்டாக வேண்டும் என் தோழனே!

## எவர் தமிழர்?

தமிழை, தமிழரைத் தம்உறவாக
மதிப்பவர் எல்லாம் தமிழர்களாவர்!
தமிழை, தமிழரைத் தம்பகையாக
எதிர்ப்பவர் எல்லாம் பகைவர்களாவர்!

## வாழ வைப்போம்

எந்த மொழியும் எந்த இனமும்
எங்கட்கு எதிரி அல்ல - ஆனால்,
எந்தையர் மொழியை எங்கள் இனத்தை
எதர்ப்பவர் எதிரிகளாவர்!

வந்தவரை எல்லாம்
வாழ வைப் போம் யாம்!
வாழ்த்துகள் கூறுவோம் யாம்! - ஆனால்,
அந்த விருந்தினர் அழிக்க முனைந்தால்
அழித்திடச் சீறுவோம்யாம்!

## பெண் நினைத்தால்!

பெண் நினைத்தால் ஒரு வீடு துலங்கும்
பெருமைகள் வந்து புழங்கும் - அவள்
கண் நனைந்தால் அந்த வீடு கலங்கும்
கவலைகள் காய்த்துக் குலுங்கும்!

## முழங்கிட வேண்டும்

சிந்திக்க வேண்டும்; செயல்பட வேண்டும்
சீரழிவைத்தர முந்திடும் சிக்கலைச்
சந்திக்க வேண்டும் சமர் செய வேண்டும்
சரித்திர நாயகனாய் எழ வேண்டும்!

பாழும் பழமையைப் பாழாக்க வேண்டும்!
பயன்படும் பழமையைப் பயிர்போல் காத்து
வாழும் உலகிற்கு வழங்கிட வேண்டும்
வளர்க புதுமை என முழங்கிட வேண்டும்!

## சொல்லுங்கள்

தமிழரும் தமிழரும் உறவாடிப் பிரியுமுன்
'வாழ்க வாழ்க' வென்றே சொல்லுங்கள்-தமிழ்
'வாழ்க வாழ்க' வென்றே சொல்லுங்கள்!

தமிழரும் தமிழரும் உறவோடு சேருமுன்
'வாழ்க வாழ்க' வென்றே சொல்லுங்கள்-தமிழ்
'வாழ்க வாழ்க' வென்றே சொல்லுங்கள்!

## உலகைத் தழுவிடுங்கள்

உலகந் தழுவிய கொள்கை உணர்வுடன்
உலகைத் தழுவிடுங்கள் - அட
உங்களைத்தான் என் தோழர்களே!
உலகம் தழுவிய விரிந்த மனத்துடன்
உறவைத் தொழுதிடுங்கள் - ஓ
உங்களைத்தான் என் தோழர்களே!

## பூச்சரமாகும்

இந்திய நாடொரு பூச்சரமாகும்
இதில் ஒரு மாநில மலர் குறைந்தாலும்
வந்துவிடும் சீர் அழிவும் குலைவும்
வழிதடுமாறிக் குழப்பம் நிலவும்?

## மர்மம் உணர்ந்து விட்டால்

மானிடக் கடலின் மழைத்துளி நான் எனும்
மர்மம் உணர்ந்து விட்டால்
வானினை எட்டும் புகழினைத் தொட்டு நீ
வாழ்க்கையில் வென்றிடலாம்!

காலப் பேராற்றில் கடுகே நான் எனும்
கணைக்கினைக் கண்டுவிட்டால்
ஞாலம் வியந்திட நாலு வகையிலும்
நாளும் முன்னேறிடலாம்!

## பகைவித்து!

விண்ணும் மண்ணும் மழைநீரும்
வீசுங் காற்றும் பொதுச் சொத்து - இதை
எண்ணா மனித குலத்தில் ஓங்கி
வளரும் வேற்றுமைப் பகைவித்து!

## பண்படுத்துவோம்!

பண்படா மனிதரை-நாம்
பண்படுத்த வேண்டும்!
பாழ்படுத்தும் செயல் தடுத்து - வரும்
பழி துடைக்க வேண்டும்!

## வாடா இளைஞா!

மூடத் தனத்தின் அடிவேர் கிள்ளியே
முற்றாய் அழித்திட வாடா இளைஞா வா!
மூடமந்திரக் கேடு கதைகளின்
மூச்சை முடிக்கிட வாடா இளைஞா வா!
வாடிக் கிடப் போர்க்குக் கோடி பணி செய்து
வயிற்றுக்குச் சோறிட வாடா இளைஞா வா!
நாடு நலம்பெறப் பீடு நடையுடன்
நல்லுயிர் தந்திட வாடா இளைஞா வா!

## தூக்கி எறியுங்கள்!

தூக்கி எறியுங்கள்
தூக்கி எறியுங்கள்
தூக்கி எறியுங்கள் தோழர்களே!

தூய பணிக்காகத் தொடரும் பயணத்தில்
தொல்லைத் தடைக் கற்களாக மாறிப் போரை
தாயகத்தின் நல்வாழ்வுக் குழைக்கையில்
தன்னலமே எண்ணி உரிமை பறிப்போரைத்

தூக்கி எறியுங்கள்
தூக்கி எறியுங்கள்
தூக்கி எறியுங்கள் தோழர்களே!

## கவலைகளே போங்கள்!

- ஒரு
  காதல் காவியம் கனிந்து கொண்டிருக்குது
  கவலைகளே போங்கள்!
- உயர்,
  கனவினில் நினைவோ நனைந்து கொண்டிருக்குது
  கவலைகளே போங்கள்!
- என்
  எண்ணப் பறவை சிறகடித்திருக்குது
  எதிர்ப்புகளே போங்கள்!
- இந்த
  இதயம் இளமை இன்னிசை எழுப்புது
  இன்னல்களே போங்கள்!

## விடு

அவன் குமுறலை வெடிக்கவிடு!-அந்த
வெடிப்பினிலே ஒரு
விடிவுவரும் என்ற
துடிப்பொன்றினால் நான்
சொல்லுகின்றேன்!-அவன்
குமுறலை வெடிக்கவிடு!

## கூத்தாய் முடிக்காதீர்!

கூடிக் களியுங்கள்!
கொஞ்சி மகிழுங்கள்
கும்மாளம் போடுங்கள் காதலர்காள்!-ஆனால்
குடும்பம் நடத்த
மறந்து விடாதீர்கள்
கூத்தாய் முடிக்காதீர் காதலர்கள்!

## நெஞ்சில் கிறுக்கும் கிறுக்கி!

ஒற்றை மலரினைக் கற்றைக் குழலினில்
ஓவிய மாக வைத்தாய்!-உன்
நெற்றிப் பரப்பின் ஒளியிடையே குழல்
நெளிந்தே உலவ விட்டோய்! - அந்தப்
பற்றற்ற துறவியாய்ச் சுற்றிலும் பார்வையைப்
பழுதறப் பதிய வைத்தாய்! - ஒரு
குற்றமும் இல்லாத கோமே தகம் போலக்
குறுநகை உதிர வைத்தாய்! - அடி
நீ ஒரு காதற் சிறுக்கியடி அவன்
நெஞ்சில் கிறுக்கும் கிறுக்கியடி!

## அவன் வேலை!

கவிழ்ந்திருக்கும் சமுதாயம் நிமிர்தல் வேண்டிக்
காலமெலாம் பாடிடுவோன் கவிஞன் - தீமை
கவிழ்ந்திருக்கும் மனிதர்களின் மடமைப் போக்கைக்
கவிழ்த்துவிடப் பாடிடுவோன் கவிஞன்; நாணிக்
கவிழ்ந்துள்ள நீதிக்கோ புவன் ஐந்தாலும்
காவலனாய் நின்றிடுவோன் கவிஞன்; வையம்
கவிழாத நெறிப் போக்கில் தழைத்து வாழக்
கருத்துகளை விதைப்பதுவே அவனின் வேலை!

## வெற்றி சூழும்!

நம்பிக்கை மோசடி செய்யாத நண்பர்கள்
நாணயம் குறையாத நற்குணத் தோழர்கள்
நான்குபேர் மட்டும் போதுமென்பேன் - நம்
நற்பணியில் வெற்றி சூழும் என்பேன்!

## என்னைத் தடுக்க முடியாது!

- நான், எரிமலையாகிக் கொண்டிருக்கின்றேன்
என்னைத் தடுக்க முடியாது!
என்னை ஒடுக்க முடியாது!
நல்விதையான என் ஏழைச் சகோதரர்
நைந்து படுந்துயர்ப் பாடுகள் கண்டு
- நான் அணுகுண்டாகிக் கொண்டிருக்கின்றேன்
என்னை அழிக்க முடியாது!
என்னை அடக்க முடியாது!

## நான் விரும்பும் நாடு

தேவை என்ப தறியாத மக்கள் சூழ் நாடு
திருட்டுபுரட் டறியாத மனிதர் வாழ் நாடு
பாவியிவன் மற்றொருவன் புண்ணியவான் என்றே
பாகுபாடுகள்வகுக்காப் பண்பறிந்த நாடு
கூவல்களில், குமுறல்களில், கொடுமைகளில் வீழ்ந்து
குறைவாழ்வு நடத்தாத இன்பம்சூழ் நாடு
தேவை என்பேன்! அதுவேநான் விரும்புகின்ற நாட்டின்
திருவடிவம் ஒரு வடிவம் உயர்வடிவம் என்பேன்.

## காப்பிடங்கள்!

ஆசைகளை உள்ளடக்கிப்; பற்றை நீக்கி
அளந்தளந்தே அடியெடுத்து வைத்து; வெள்ளிக்
காசினைத்தம் கணக்குகளில் வைத்து வாழாக்
கனிந்த மனங்கள் அறத்தின் பிறப்பிடங்கள்!
மாசினைத்தம் மனத்திருந்தே அறுத்தெறிந்து
மழைகளை நிதம் துறந்து; பற்றுப் பாச
ஓசைகளில் கலக்காத உள்ளங் கள்தாம்
உயர் அறத்தின் காப்பிடங் களாகும் என்பேன்!

## எதற்கு?

உங்களுக்கும் எனக்கும் முதல் தேவை என்ன?
உண்ணுதற்கு நல்லுணவு; உடுத்த ஆடை!
தங்குதற்கோ ஓரில்லம்; அறிவு ஆற்றல்
தழைப்பதற்கு வாய்ப்புக்கள்! இவையே போதும்!

இங்கிவை நாம் பெற்றிடவே செய்து விட்டால்
எதற்கு இந்த அறநெறியின் பேச்சு எல்லாம்?
பங்கங்கள் வெங்கொடுமை வழக்க மெல்லாம்-
பணம் படுத்தும் பாடுகளால் வருவதன்றோ?

## வரவேண்டும்!

நாம் ஒரு முடிவுக்கு வரவேண்டும்
நாடு விடிவுக்கு வர வேண்டும்!
ஆம்! ஒரு முடிவுக்கு வர வேண்டும்!
அதற்குச் செயலினி படவேண்டும்!

கண்ணி வெடிகளாய்க் காத்துக் கிடந்து
காலம் வரும்போது இளைஞர் எழுந்தால்
அன்னை பூமியின் தீமை போக்கலாம்
ஆயிரம் வளமை நாட்டில் தேக்கலாம்?

நாம் ஒரு முடிவுக்கு வரவேண்டும்?
ஆம்! ஒரு முடிவுக்கு வரவேண்டும்?

## பேரழகுப் பெட்டகங்கள்!

பேரழகுப் பெட்டகங்கள்; ஆண்மை நெஞ்சைப்
பிழிந்துருக்கும் ஓவியங்கள்; வடியா இன்பச்
சாறூறும் கனிக்குலைகள்; நிலைக்கா வையச்
சரித்திரத்தின் முத்திரைகள்; சிங்கா ரித்த
தேரினங்கள்; இருள் உலகின் மின்னற் பூக்கள்
திருவிழியைத் திறக்கின்ற ஒளிக்கீற் றுக்கள்!
போராட்ட வாழ்க்கையிலே கவலை தீர்க்கும்
புனிதங்கள்: புரிகிறதா? அவர்தாம் பெண்கள்!

## வெட்கப்படுகின்றேன்!

போலிச் சமுதாயக் கோட்டையிலே - முழுப்
பொய்மை எனும் கழல் போட்டையிலே - நெடு
வேலி அமைத்துக் குடியிருக்கும் - ஓ
வேடம் புனைந்த மனிதர்களே! - நான்
வெட்கப் படுகின்றேன் உங்களுக்காய்! - ஆம்
வெம்பிக் குமைகின்றேன் உங்களுக்காய்!

## கண்டு களி!

கண்ணுக்கினிய நல் காட்சி அனைத்தையும்
கண்டு கண்டு கண்டு கண்டு களி!
கருத்திற் கிசைந்த நல் கொள்கை அனைத்தையும்
கொண்டு கொண்டு கொண்டு கொண்டு களி!
உண்ணத் தகுந்த சுவைஉண வெல்லாமும்
உண்டு உண்டு உண்டு உண்டு தெளி!
எண்ணத் தகுந்த இனிய நினைவெலாம்
எண்ணி எண்ணி எண்ணி எண்ணிக் களி!

## வேண்டாத வேலை!

விடிந்ததும் ஏமாற்று முகத்தில் விழிக்கிறேன்!
வெளுத்ததை எல்லாம் பாலாக எண்ணியே
வெட்டிப் பயல்களுக்கு வீணுக் குழைக்கிறேன்!
கண்டவனை எல்லாம் நம்பித் தொலைக்கிறேன்
கைகள் குலுக்கியும் கட்டித் தழுவியும்
கள்ள மனிதரிடம் அன்பைச் சொரிகிறேன்.

## ஆனால்,

ஒருவன்மேல் பற்றுவை! ஆனால், நீஅவன்
ஊற்றெழுதியாக மாறிவிடாதே!
ஒருவன்மேல் அன்புவை! ஆனால் நீஅவன்
உளறலுக் கெல்லாம் ஓத்தூதி டாதே!
ஒருவன்நல் வழிநட! ஆனால், நீ அவன்
ஒழுக்கமில் செயலுக்கும் தாளமிடாதே!

## நீதியின் தீர்ப்பு

காய்ந்த தலையனைக் கந்தல் துணியனைக்
கண்ணீர்ப் பெருக்கில் கவிழ்ந்த மனிதனை
மதித்து மனத்தால் பழகிட வேண்டும்!
மதிக்க மறுப்பவர் மாமன்னரானாலும்
மண்கவ்வத்தான் வேண்டும்!-இது
நீதியின் தீர்ப்பு!-இது
நேர்மையின் தீர்ப்பு!

## உண்டாக வேண்டும்!

ஒவ்வொரு வீட்டிலும் கலப்புத் திருமணம்
காதற் திருமணம்
உண்டாக வேண்டும் என் தோழனே?-நம்மைக்
கவ்விய வேற்றுமைச் சனியன் கழுத்தற
இன்னும் புதுவழி
கண்டாக வேண்டும் என் தோழனே!

## அப்பச்சி!

அவனவன் துறையிலே
அவனவன் உழைக்கணும்
அப்பத்தா நாடு முன் னேறிடும் அப்பச்சி!
அவனவன் வழியிலே
அவனவன் பிழைக்கணும்
அப்பத்தா நாமும் முன்னேறுவோம் அம்மச்சி!

## மூலதனம்

பெண்களுக்கு மூலதனம் கண்ணீர்; போலிப்
பெரியோர்க்கு மூலதனம் விளம்பரங்கள்!
பண்களுக்கு மூலதனம் அசைவு; இந்தப்
பாரதத்தின் மூலதனம் வறுமை, ஏழ்மை!
எண்களுக்கு மூலதனம் கோடு; எட்டின்
எழுத்துக்கு மூலதனம் வளைந்த வட்டம்!
அன்புடைய தோழர்களே! நமக்கோ இங்கே
அழியாத மூலதனம் உயர்ந்த உள்ளம்;

## தலையாட்டாதே!

அடுத்தவன் கருத்தினைக் கேட்டுத் தெரிந்தே
அதற்கேற் றாற்போல் தலையாட்டும் தம்பி,
கெடுத்துவிடாதே உன்னையும் நாட்டையும்!
கேவலம் பிழைப்பிற்காய் விலை போய்விடாதே!

நெஞ்சக் கருத்தினை நீஒளிக் காமல்
நேருக்கு நேர் நின்று சொல்லிடும் போக்கில்
அஞ்சாமல் தொடர்வாய்; அது உன்னை, நாட்டை
அணையாமற் காக்கின்ற மதிற்சுவராகும்!

## சோர்வடையாதே!

படிப்பதில் சோர்வடையாதே - கல்வி
பகைத்தால் உலகம் உன் பகைமறவாதே!
படிப்பதில் சோர்வடையாதே?

கண்டதெல்லாம் கற்றுக் கண்விழிப்பாய் நீ
கல்வி நீரோடையில் நிதம் குளிப்பாய் நீ
உண்பிதெல்லாம் உண்டே உடல்வளர்ப்பதைப் போல்
உருப்படி யானவை கற்றிடுவாய் நீ!

## பசித்த புலிகள்

பாயத் துடிக்கின்ற பசித்த புலிகள்
பாட்டாளர் தேவைகள் தலைவர்களே! - அவர்
தீயைத் தேக்கிய காய்ந்த கள்ளிகள்
தீட்டிய கூர்வாள் தோழர்களே!

வெடிக்கத் துடிக்கின்ற நேபாம் குண்டுகள்
வீழ்ந்தார் குமுறல்கள் தலைவர்களே - அவர்
முடுக்கி விடப்பட்ட ஏவு கணைகள்
மூல அணுத்திரள் தோழர்களே!

## எதற்கு நமக்குளே?

நேற்றுப் பகைவன்; இன்று நண்பன்
இன்று நண்பன்; நாளை பகைவன்
இதுதாண்டா தம்பி அரசியல்! - அதனால்,
எதற்கு நமக்குளே உரசியல்?

## பற்றை உணர்ந்துவிட்டேன்?

முற்றும் உணர்ந்துவிட்டேன்! - கொஞ்சம்
கற்றும் உணர்ந்து விட்டேன்!
நெற்றுக்குள்ளே உள்ள நீர் வற்றும் என்பதைப்
பற்றி உணர்ந்து விட்டேன்! வையப்
பற்றை உணர்ந்து விட்டேன்!

## வரலாறுண்டா?

கவிதையிலா நாட்டிற்கு வரலா றுண்டா?
கயமைக்கும் கயவர்க்கும் அஞ்சா நெஞ்சக்
கவிஞனிலா நாட்டிற்கு வாழ்வு ஏது?
கலை நயத்தை எழில்நயத்தைப் வடித்துக் காட்டும்
கவிஞனிலா உலகிற்கே உயிர்மெய் உண்டா?
கண்மூக்கு வாய்நாக்கு வைத்துப் பாடும்
கவிஞனிலா இவ்வாழ்வில் சுவைதான் ஏது?
கவிதையிலா உலகில் நாம் களிமண் ணாவோம்!

எவனோ ஓர் பெருங்கவிஞன் பலநாள் எண்ணி
எழுதிவைத்த நெடுங்கவிதையே இவ்வையம்
அவன் படைத்த நொடிக்கவிதைகள் தான் இங்கே
அணி அணியாய் எழில்கூட்டும் மனிதர் கூட்டம்!
கவண்கல்லாய் அவசரத்தில் அவன் எறிந்த
கனியாத கவிதைகளே விலங்கின் கூட்டம்!
அவன் எழுதக் கருப்பொருளாய் ஏற்றவைகள்
அழியாத அணுத்திரட்சிப் பகுப்பின் சந்தை!

## விழிப்போடிரு!

உன்னைத் தொலைப்பதற்கு
உழைப்பைக் குலைப்பதற்கு
மூலைக்கு மூலை சந்துக்குச் சந்து
திட்டங்கள் தீட்டப்படும் - இங்கு
வேலையற்றோரின் மூளையற்றோரின்
கூட்டங்கள் கூட்டப்படும்!
என்றும் விழிப்போடிரு
இளைஞா முனைப்போடிரு!

## நினைவில்லை!

என்னைநீ ஏற்றிப் போற்றிட வேண்டும்
என்றே என்றும் எண்ணினேன் இல்லை!
ஆனால்,
என்னைநீ தூற்றிக் காற்றிட முனைந்தால்
எல்லா வகையிலும் உன்னைத் தொடர்ந்து
எதிர் கொள்வேன்நான்! நினைவில் வைஇதை!

## எத்தனை எத்தனையோ?

*எத்தனை ஆயிரம் எண்ணங்களில் இவர்*
*இழைக்கப்பட்டனரோ? -*
*எத்தனை ஆயிரம் வண்ணங்களில் இவர்*
*குழைக்கப்பட்டனரோ? -*
*எத்தனை ஆயிரம் இன்பம் வழங்கிட*
*அழைக்கப்பட்டனரோ? - பெண்கள்*
*எத்தனை ஆயிரம் துன்பம் வழங்கிடப்*
*படைக்கப் பட்டனரோ? -*
*எத்தனை எத்தனையோ? - ஆ. ஆ.*
*எத்தனை எத்தனையோ?*

## உங்களால் முடியும்?

*பெண்களே உங்களால் முடியும் - நாட்டின்*
*கண்களே உங்களால் முடியும்!*
*அருமைத் திருநாட்டின் பெருமைகளைக் காக்க*
*பெண்களே உங்களால் முடியும்!*

*பூப்பந்து மேனி பூவையர் உழைப்பால்*
*புத்துலகம் காண முடியும்! - பழத்*
*தோப்பான பெண்மைக் காப்பானால் வந்த*
*துயரங்களை ஓட்ட முடியும்! முடியும்!*

## இரு

*போர்த்தன்மை வாய்ந்தவளாக இரு*
*புதுமை நிறைந்தவளாக இரு!*
*ஆர்த்தெழும் பேரலையாக இரு!*
*அடங்கா எரிமலையாக இரு!*

## இளைஞர் பரம்பரையே!

*ஓ..... எங்கள்*
*இளைஞர் பரம்பரையே!-உங்கள்*
*எழுச்சியில்தான் இந்த நாட்டெதிர் காலத்தின்*
*ஏற்றம் இருக்கின்றது!-உங்கள்*
*இதய வலுவினில்தான் இந்த வையத்தின்*
*வாழ்வும் கிடக்கின்றது!*

## நன்று!

சூழ்ச்சியும் வஞ்சமும் வெல்லும் அப்போதும் நீ
சோர்ந்துவிடாமல் உழைப்பது நன்று?
வீழ்ச்சிகள் ஆயிரம் தழுவும் அப்போதும் நீ
வீழ்ந்தழுவாமல் சிரிப்பது நன்று!

எத்துகள் சூழ்ந்துனை எரிக்கும் அப்போதும் நீ
இடிந்து விடாமல் இருப்பது நன்று!
வித்தைகள் கண்முன்னே வெல்லும் அப்போதும் நீ
வெம்பி விடாமல் நடப்பது நன்று!

## வேண்டும்!

வயிரம் பாய்ந்த நெஞ்சம்
வன்மை தோய்ந்த நெஞ்சம்
துயரம் காய்ந்த நெஞ்சம்
துடிப்பில் வேய்ந்த நெஞ்சம்
உனக்கும் எனக்கும் இனி,
இனி வேண்டும்!

கனிவில் குழைந்த நெஞ்சம்
கருணை கனிந்த நெஞ்சம்
பணிவில் பிசைந்த நெஞ்சம்
பண்பில் முடைந்த நெஞ்சம்
எனக்கும் உனக்கும் இனி இனி வேண்டும்!

## தேர்ந்தெடு!

உனக்கு நன்மையா எனக்கு நன்மையா
என்றே கணக்குப் போடாமல்
ஊரின் நன்மையை நினைவில் வைத்து நீ
உன்றன் தலைவனைத் தேர்ந்தெடு!

தனக்குத் தனக்கென வாழும் மனிதரின்
தடம்நீ பற்றிப் போகாமல்
தவறைத் தாக்கவும் தர்மம் காக்கவும்
துணிந்த மனிதனைத் தேர்ந்தெடு!

## என் நோக்கம்

பொருள் சேர்ப்பதுவும் புகழ் சேர்ப்பதுவும்
பூமியில் என்றன் நோக்கம் அல்ல!
புதுமைக ளோடுஇவ் வாழ்க்கையில் பொதுநலப்
பணி செய்து கிடப்பதே என் நோக்கம்!

## உன் காலில் நிற்காமல்

உன்காலில் நிற்பதற்கே ஒரு போதும் முனையாமல்
என்காலில் நிற்பதற்கே ஏன் முயற்சி செய்கின்றாய்?
உன்னுடம்பின் நோய்போக ஊசிகுத்தி என்னுடம்பில்
நன்மருந்தை நான் உண்டால் நலம் என்று நீ பெறுவாய்?

## ஈரமில்லாத மனங்களிலே...

பாறையில் விதை விதைக்கின்றேன்! - கொடும்
பாலையில் பயிர்வளர்க்கின்றேன்!
ஈரமில்லாத மனங்களிலே என்
எண்ணங்களை நடுகின்றேன்!

கொலைக்களம் என்று அறிந்தும் - என்
கொள்கை சுமந்திருக்கின்றேன்!
விலைபோகா தென்று உணர்ந்திருந்தும் நான்
வேலை தொடர்ந்திருக்கின்றேன்!

## வீர மகனாய் எழு!

பரிசுகட்கே ஏங்கிப் பணி செய்திடாதே
பவர் தயவிற்குப் பல்லிளித் தேநீ
பாதி மனிதராய்ப் பணிந்து விடாதே
பாழும் அவர் வழி தழுவி விடாதே!

பாறையும் நொறுங்கும் பரிதிப் பார்வையின்
வீர மகனாய் வெடி மகனாய் எழு
சிதைந்து போகும் சிலந்தி வலைகளா
சிறுத்தை யான உன் சீர்கரம் நெய்வது?
சீறும் சிங்க ஏறுகள் மடக்கும்
சிதைக்க முடியாச் செழும் வலை பின்னுக!

இன்று நாளை என்னும் நோய்க் கணக்கை
எடுத்தெறி! எண்ணிலா ஆண்டுகள் என்னும்
புதிய கணக்கில் புதுமை தீட்டுக!
பொங்கும் பேரலை யாக எழுக நீ!

## நாட்டிலுள்ள இளைஞரெலாம்!

செயற்கரிய செயல்கள்தமைச்
செய்ய வேண்டும்!
செழுமைமிகு ஓர் நாட்டைப்
படைக்க வேண்டும்!
இயற்கை தந்த செல்வ மெலாம்
மண்ணின் மைந்தர்
எல்லார்க்கும் சமமாக்கிப்
படைக்க வேண்டும்?

நாட்டிலுள்ள இளைஞரெலாம்
அதற்காய் இன்றே
நாளை நமதே நமதே
நமதே என்று
நாடோறும் சிந்தித்தே
உழைக்க வேண்டும்!

## வாழ்த்திடுவோம்!

நாட்டிற்கு உழைத்த நல்லவரை எல்லாம்
நாடோறு நாமினி போற்றிடுவோம்!
நாலு வழியிலும் நாம் வாழ வாழ்ந்தோரின்
பேர் சொல்லி நித்தமும் வாழ்த்திடுவோம்!

## உழைப்புநீர் ஊற்றுங்கள்!

தமிழ்ப்பணி ஆற்றுங்கள்
தக்காரைப் போற்றுங்கள்!
இமைப்போதும் சோராமல்
உழைப்புநீர் ஊற்றுங்கள்!

நம்பிக்கை ஒளியினை
நரம்பினுள் பாய்ச்சுங்கள்!
தெம்பூட்டி எளியோர்க்கு
நல்வழி காட்டுங்கள்!

## ஓர்கை பார்க்க வந்தேன்!

போர்க்களந் தன்னிலே போரிடவே வந்தேன்
தீர்க்கும் கணக் கெலாம் தீர்க்க வந்தேன்!
ஆர்த்துவரும் அலை வஞ்சகத்தின் வலை
அத்தனையும் ஓர் கை பார்க்க வந்தேன்!

பாலை நடுவிலே நெருப்புக் குழம்பிலே
கோலப் பிறவி எடுத்தவன் நான்!
வாலும் தலையும் தெரியா உலகத்து
வாழ்வைக் கரைத்துக் குடித்தவன் நான்!

பீரங்கிப் பிளிரலும் ஒயில் மயில் அகவலும்
ஓர் நிறையாகவே நினைப்பவன் நான்!
யார் எனை எதிர்த்திடப் பேரணி திரட்டினும்
"வாரும் பிள்ளாய்" என்று அழைப்பவன் நான்!

## வரப்போகுது!

முடிவொன்று வரப் போகுது!-அவர்
முடிமீதும் மடிமீதும்
ஏழையர் கை ஓங்கி
அடிஒன்று விழப்போகுது-பே
ரடி ஒன்று விழப்போகுது!

தெருவோரம் சாக்கடைக் கரையோரம் கிடப்போரின்
தோள் உரம் பெறப்போகுது!-அவர்
மறுவாழ்வுப் புரட்சியில் தொந்திகள் கறை வாழ்வு
மறைந்தொழிந் திடப்போவுது!
முடிவொன்று....

## திறந்துவை!

கதவைத் திறந்து வை!-மனக்
கதவைத் திறந்துவை!
முதுமைக் கனவு மறைய வேண்டும்
இளமை நினைவு நிறைய வேண்டும்
புதுமை மலர்கள் பூக்க வேண்டும்
பொய்மைக் கறைகள் போக்க வேண்டும்
கதவைத் திறந்து வை!-மதிக்
கதவைத் திறந்து வை!

## உன்னால் முடியும்

உன்னால் முடியும் தம்பி
உன்னால் முடியும்!

மணிமுடி தன்னை உருள வைத்திடவும்
மாமன்னர் தம்மை மருள வைத்திடவும்
அணிநகை பெருஞ்செல்வம் விளையவைத்திடவும்
அற்புதக் கலைகளை மலர வைத்திடவும்

உன்னால் முடியும் தோழா!
உன்னால் முடியும்!

## எப்படி?

உள்ளப் படுக்கையில் 'உணர்'வெனும் குழந்தையை
உடலெனும் கொசுவலை விரித்துக் கிடத்தினேன்!
கள்ளத் தனமாய் ஆசைக் கொசு வந்து
கடிக்குது கடிக்குது காப்பது எப்படி?

## கூடு

நட்பும் பெருகிவரும்
நட்புகழும் வந்தடையும்
உட்பகைகள் எல்லாம்
ஒழிந்துபோம்!-துட்டுக்கோ
என்றும் குறைவில்லை
இன்பம் குழைந்துவரும்
குன்றாத நல்லறிவைக் கூடு!

## அ(நீ)தி?

நீதி மன்றப் படிகளில் ஏறி
நெஞ்சொடிந்தான் ஏழை
நீதியைத் தேடி
பாதி நீதி அவனிடம் இருந்தது
மீதி நீதி அநீதியின் வடிவில்
அவனிடம் இல்லா இன்னொன்றில் வடிவில்
அறிந்தோ அறியாமலோ அகப்பட்டுக் கொண்டது.

## அதனால் நீ -

ஒவ்வொரு வீட்டின் வாசற்படியிலும்
ஓராயிரமாய்த் துயரக் கீறல்
ஒவ்வொரு வீட்டின் புழக்கடைக்குள்ளும்
ஓயா அவலம் வறுமைச் சாரல்
அதனால் நீ
பிறரின் தயவைத் தேடாதே
அவரின் உதவியை நாடாதே!

## செய்வோம்!

எத்தனை ஆண்டுகள் நாமிந்த வையத்தில்
வாழ்ந்து கிழித்திடப் போகின்றோம் - இன்னும்
எத்தனை ஆண்டுகள் நாமிந்த வாழ்க்கையில்
மகிழ்ந்து செழித்திடப் போகின்றோம்!
பித்துக்குளிக் குணம் விட்டுத் தொலைத்திட்டுப்
பிறர்க்குத் துணை நிற்க முயல்வோம்
நத்தி வந்தோர்க் கெலாம் நம்மால் முடிந்ததை
நாளும் அயராது செய்வோம்!

## உனை இழக்காதே!

வெற்று விளம்பரம் வீண் புகழ்ச்சிக் கெல்லாம்
சற்றும் இடங் கொடுக்காதே?
தொற்று நோயானதோர் பட்டம் பதவிக்கு
முற்றும் உனை இழக்காதே!

## என்ன நான் சொல்வது?

ஏழைத் தமிழன்தான் இலக்கியம் படிப்பான்
இருக்கும் தமிழனோ கலக்கியம் அடிப்பான்!
வறுமைத் தமிழன்தான் வண்டமிழ் காப்பான்
வளமைத் தமிழனோ வயிற்றுக்குச் சேர்ப்பான்!
என்ன நான் சொல்வது
பொய்யா? - சொல்
இங்கு நான் சொல்வது
பொய்யா?

## எப்போது?

முற்போக்கு வாதிகளே - எங்களூர்
முற்போக்கு வாதிகளே! - நீங்கள்
ஒன்றுபடும் நாள் எப்போது? - நாங்கள்
உருப்படும் நாள் எப்போது?

## நீயே...

நீ படைக்கும் படைப்பே உன்
நெஞ்சத்தைத் தொட வேண்டும்!
நெஞ்சைத் தொட்டிழுக்காவிட்டால்
நீயே கிழித்தந்த நெருப்பிற்குள் போட்டுவிடு!

## பாடு

பசிஉன் வயிற்றினைப் பற்றிய துண்டா?
பசியினைச் சுவைத்து நீ பார்த்தது உண்டா?
பற்றிய துண்டு பார்த்ததும் உண்டெனில்
பாடுக தோழனே - பசிபற்றிப் பாடு
பாட்டாளர் படுகின்ற துயர்பற்றிப்பாடு!

## நம்பாதே!

எவனையும் நம்பாதே!
என்னையும் சேர்த்தே
எழுதுகின்றேன் நான்
எவனையும் நம்பாதே!

மனிதரின் மீது மதிப்பினை வை நீ
நம்பிக்கை வைத்து விடாதே!
மனிதரின் மீது பற்றினை வை நீ
மனத்தினைப் பறிகொடுக்காதே!

## பிறப்புரிமை!

புலர்ந்த பொழுதோ ஒளியினைத் தேக்கிப்
புதுமை மெருகெங்கும் பூசுவதும்;
மலர்ந்த மலர்-மணம் வாரி இறைத்தே
மகிழ்ச்சித் திருக்கூத் தாடுவதும்;
வளர்ந்த நிலப்பயிர் விளைந்து குலுங்கியே
வானினை நோக்கிச் சிரிப்பதுவும்;
தளர்ந்த தமிழா உன் தாய்மொழி மேலும்
தழைக்க உழைத்து மடிவதுவும்

பிறப்புரிமை!
பிறப்புரிமை!
பிறப்புரிமை!

## உறவு வேண்டும்!

அரும்புகின்ற எண்ணத்தில்
தெளிவு வேண்டும்!
அழகு முகத்தில் நீங்காப்
பொலிவு வேண்டும்!
திரும்புகின்ற விழிகளிலே
அறிவு வாசல்
திறக்கின்ற ஒளிவேண்டும்
உயர்வு வேண்டும்!
விரும்புகின்ற நற்செயல்கள்
தடங்கலின்றி
விட்ட இடத்தில் இருந்து
தொடங்க வேண்டும்!
பெரும் பொறுப்பு மனிதர்களே!
இயற்றிற் கெல்லாம்
பெண்ணொருத்தி கண்ணசைவின்
உறவு வேண்டும்!

## அணியுங்கள்!

அணியுங்கள்!
ஆயிரம் வகையில் அழகினைக் கூட்டிடும்
அற்புத கைத்தறி ஆடை வகைகளை
அணியுங்கள்!

நெய்யும் தொழிலினை நம்பிய ஏழைகள்
வாழ்வினில் நிம்மதி மலர்ந்திட வேண்டும்!
மெய்யின் வடிவாய் விளங்கும் நெசவுத்
தொழிலிந்த நாட்டினில் வளர்ந்திட வேண்டும்

## கைதிகள் நாம்!

உலகமெனும் சிறையினிலே
உலவுகின்ற பைத்தியம் நாம்!
விலங்கிடாத கைதிகள் நாம்-உண்மை
விளங்கிடாத கைதிகள் நாம்!

பிறப்பதற்கு முன்னாலும்
பிறந்துவிட்ட பின்னாலும்
இறப்பினுக்குப் பின்னாலும்
என்றென்றும் கைதிகள் நாம்!

## எப்படி முடியும்?

நாடே வறுமையில் மூழ்கி அழுகையில்
லஞ்சம் எப்படி ஒழியும்?-அதை
ஒழிக்க எப்படி முடியும்?

நாமே சிறுமையில் ஆழ்ந்து அழிகையில்
ஒழுக்கம் எப்படி வளரும்?-அதை
வளர்க்க எப்படி முடியும்?

வறுமையும் சிறுமையும்
வாடிடும் போதே
வாழ்வின் கேடுகள் மடியும்!

## புன்னகைப் பூக்கள்

புல்லின் நுனிகளில் பூவின் முனைகளில்
சில்லெனத் தேங்கியே சிரிக்கும் பனித்துளிப்
புன்னகைப் பூக்களைப் பாருங்கள் - அவை
கண்ணிமைப் பூக்களைக் காணுங்கள்!

வான நிலத்தினில் வண்ணக் களத்தினில்
நானூறு கோடியாய் நல்முகங் காட்டிடும்
நட்சத்தி ரப்பூக்கள் பாருங்கள் - அவை
நகைப்பொலி யைக்கொஞ்சம் கேளுங்கள்!

## என்வேலை!

உழைப்பாளர் சோகமுக உருவங்கள் என்
உள்ளத்தைக் கிள்ளியதால் கவிஞனானேன்!
குழம்பியச் ஞானசமு தாயம் கண்டு
குமுறலுடன் சிரித்தனால் கவிஞனானேன்!
இழப்படைந்து நொந்துவிட்ட பெரிய நாட்டின்
ஏற்றத்தை எண்ணியதால் கவிஞ னானேன்!
அழைப்பில்லா விருந்தினனாய் வந்த என்னை
அரவணைத்துக் கொண்டால் இக்கவிதை அன்னை!

வாங்குதலும் வழங்குதலும் இல்லா நாட்டை
வடிப்பதற்குத் துடிக்குமிளஞ் சிற்பி யானேன்!
ஏங்குதலும் ஏசுதலும் இல்லா நாட்டை
இங்கமைக்க உழைக்குமொரு உழைப்போ ளானேன்!
தூங்கிவிழும் உலகினைஎன் கவித்திறத்தால்
துள்ளிஎழச் செய்வதுவே என்றன் கொள்கை!
ஈங்குள்ளோர் எல்லைமொழி இனம்கடந்தே
உறவாடப் பாடுவதே என்றன் வேலை?

## போராடு!

போராடு!
போராட வேண்டும் நீ போராடு!
போராடு!
போராடித்தான் வாழ்வில் முன்னேற வேண்டும்
போராடித்தான் நாட்டை முன்னேற்ற வேண்டும்!

## இல்லவே இல்லை

சாதியைப் பெயரிலே ஒட்டி உரைப்பவன்
தமிழனா? இல்லவே இல்லை - தன்
சாதியை நினைவிலே கட்டி அழுபவன்
மனிதனா? இல்லவே இல்லை!

ஊரும் வளர்ந்தது உலகும் வளர்ந்தது
உள்ளம் வளர்ந்ததா? இல்லை - மனிதன்
சோறு துணிக்காக அலைந்தும் தன்மானச்
சுரணை வந்ததா? இல்லை!

## ஓர் அறை அறைந்தால்

ஓர் அறை அறைந்தால் அறைந்தவன் கன்னத்தில்
ஒன்பது அறைதர வேண்டும்!
ஓர் அடி அடித்தால் அடித்தவன் எலும்புகள்
உருச்சிதைத் தொடித்திட வேண்டும்?

அறம்செய் வோனுக்கே அறம் செய்ய வேண்டும்
அன்புக்கு அன்பிய வேண்டும்!
அழித்திடச் சூழ்தோண்டி அழைத்திடும் அன்பனை
அதிலேயே புதைத்திட வேண்டும்!

## கொடுமை கண்டால்

கொடுமை கண்டால் உடன் கொதித்தெழ வேண்டும் நீ
வங்காளியர்களைப் போலே!
கொஞ்சமும் அஞ்சாத நெஞ்சுரம் பெற வேண்டும்
சீக்கிய மறவரைப் போலே?
அடிமைக் குணத்தினை அரவே அகற்றணும்
அந்நியரை அகற்றியது போலே!
அன்றாடம் உன்னை நீ ஆராய்ந்து பார்க்கணும்
பற்றற்ற துறவியைப் போலே!
(மதவெறி - இனவெறி - கொலை வெறிச் சீக்கியர் அல்ல)

## அழைத்திடுங்கள்!

"அழகிற்கும் தூய அன்பிற்கும்
அடிமைப்படாத குணத்திற்கும்
அடிமை இவன்" என்றே
என்னை அழைத்திடுங்கள்!
என்னை அழைத்திடுங்கள்!

## உன்னைப் பறிகொடு

குயில்களின் கூவலில் மயில்களின் தாவலில்
குதியாட்டம் போட்டிடும் குழந்தைகள் குறும்பினில்;
ஒயில் நடம் ஆடிடும் செடிகொடி தழுவலில்
உயர்புகழ் மனிதனே உன்னைநீ பறிகொடு!

அருவிகள் ஒழுகலில் ஆறுகள் ஓட்டத்தில்
அழகொளிர் ஒவ்வொரு பொருள்களின் பொலிவினில்
மருவிடும் தென்றலில் மழைத்துளி மணத்தினில்
மாண்புறு மனிதனே, மனத்தினைப் பறிகொடு!

தொகுப்பாளர்கள்: ஏ.பி. ராமன் கவிஞர் வான்முகில்

# ஒரு பாட்டுப் பறவையின் பல்லவிகள்

தமிழ் நிலத்தில் சத்தமில்லாமல் ஒரு புதுமையை நடத்திக் கொண்டிருக்கிறார் அந்த அருந்தமிழ்க் கவிஞர். நேற்றல்ல, இன்றல்ல, ஏறத்தாழ கடந்த 35 ஆண்டுகளாக, தன்னந்தனியனாக ,ஒரு இயக்கம் நடத்தி வருகிறார் அந்தப் புதுமைக் கவிஞர்!

"கவிஞர்களை வளர்க்கும் கவிஞர் என்று போற்றப்படும் அந்த முல்லைச்சரக் கவிஞர்தான், பாவேந்தர் பாசறைப் பாவலர்தான் கவிஞர் பொன்னடியார்!

பாவேந்தர் பாரதிதாசன் அன்புக்கும், நம்பிக்கைக்கும் உரிய உதவியாளராக, அவரின் 'குயில்' ஏட்டின் உதவி ஆசிரியராக, அவரின் நூல்களை வெளியிட்ட அன்பு நூலக நிர்வாகியாக, பாவேந்தர் பட நிறுவனத்தின் செயலாளராக என்று பாவேந்தர் வாழ்க்கையோடு இரண்டறக் கலந்த பெருமை, கவிஞர் பொன்னடிக்கே உண்டு.

பாவேந்தர் தொடங்கிய **'தமிழ்க்கவிஞர் மன்ற'**த்தில் பாவேந்தராலேயே அதன் செயலாளராக முன் மொழியப்பட்ட கவிஞர் பொன்னடி இன்றுவரை ஏறத்தாழ 35 ஆண்டுகளாகக் அம்மன்றத்தைக் கட்டிக் காத்து, அதன்வழி தமிழ்க் கவிதை உலகில் பல வரலாறுகளைப் படைத்துள்ளார்.

15.8.66-ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட கவிஞர் பொன்னடியின் **'முல்லைச்சரம்'** இன்றுவரை தொடர்ந்து மலர்ந்து, மணம் வீசி கவிதை உலகில், எழுத்துலகில் புரிந்து வரும் சாதனைகள் நாடறிந்தவை.

• 12.6.1971-ஆம் ஆண்டு கவிஞர் தொடங்கிய **'கடற்கரைக் கவியரங்கம்'** தமிழகத்தில், இந்தியத்தில், ஏன், உலக அரங்கில் புதுமை இலக்கியத் தடம்பதித்த கவியரங்கமாகும். இன்று வெள்ளி விழாக் கண்டுள்ள கடற்கரைக் கவியரங்கம் வளர்த்த கவிஞர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள் பலர் அதை நன்றியோடு நினைத்துப் பார்ப்பவர் மிகச் சிலர். இவை எல்லாவற்றையும் விட, தமிழகத்தின் பெருமைக்குரிய தலைநகரில் உள்ள தன் இல்லத்தின் கீழ்ப்பகுதியில், இளம் தலைமுறைக்குத் தமிழ் இலக்கண இலக்கியம் இலவசமாகச் சொல்லிக் கொடுக்கும் **'படைப்பரங்கம்'** பல்லாண்டாக நடத்தி வருவது நாடறிந்த ஒன்று.

இப்படி, எழுத்தாலும், பேச்சாலும், செயல்களாலும் தமிழ், தமிழர் நலன்மட்டுமல்லாது இப்பெருநாட்டின் நலனும் கருதி செயல்பட்டு வரும் கவிஞர் பொன்னடியாரின் தன்னலங் கருதாதத் தனிவழித் தொண்டுகள் வரலாறானவை!

அந்த அரிய மா்மனிதரின் வரலாறெனும் பெருங்கடலின் சிறு துளியாக **'ஒரு பாட்டுப் பறவையின் பல்லவிகள்'** எனும் நூல் அறிஞர் குழுவால் தொகுக்கப்பெற்று, கவிப்பெருமகனின் 35-ஆம் ஆண்டு இலக்கியப் பணிவிழாக் கொண்டாடும் இவ்வேளையில் வெளியிடுவதில், பெருமை கொள்கின்றோம்.

ஒரு பாடலுக்குப் பல்லவி-(எடுப்பு) எவ்வளவு முக்கியமோ, அத்தகு முக்கியம் வாய்ந்த வரலாற்றுச் செய்திகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. அதே போல் கவிஞர் அய்யாவின் பாடல்களின், கவிதைகளின், பல்லவிகளின் சிறு பகுதியை மட்டும் கொய்தளித்து, கவிஞர் கோவின் கொள்கை நெஞ்சத்தைப் படம் பிடித்துக் காட்டி யுள்ளோம்.

தமிழ் நெஞ்சங்களில்! போலித்தனங்களும், பொய்மைத் தனங்களும் அறியாத தன்னலங் கருதா ஒரு தங்கக் கவிஞனின் வரலாற்றுக் குறிப்புகளினால், ஏறத்தாழ 40 ஆண்டுகளின் தமிழ் இலக்கிய வரலாறும் பின்னிப் பிணைந்திருப்பதை இந்நூல் மூலம் கண்கூடாக கண்டு, உண்டு, களிப்பீர்கள் என்பது திண்ணம்.

வாழ்க தமிழ்!

வெல்க பொன்னடியார்

கவிதைக் கொள்கைகள்

- பதிப்புக்குழுவினர்.



# தன்னலம் கருதாத தனிப் பெருங் கவிஞர்!

வித்வான் வே. லட்சுமணன்.

"வெண்பாவிற் புகழேந்தி விருத்தமென்னும்

ஒண்பாவிற்கு உயர்கம்பன்"

என்கிற கூற்று உண்டு.

நமது கவிஞர் பெருந்தகையான திரு. பொன்னடியார் அவர்களோ. எல்லா வகைப் பாக்களுக்கும் எடுத்துக்காட்டாகச் சொல்லக்கூடிய. சுவைமிக்க நயமான பாக்களைப் பாடும் ஆற்றல் மிக்கவர் என்பதைத் தமிழ்கூறும் நல்லுலகத்துச் சான்றோர்கள் அனைவரும் அறிவார்கள்.

"இருந்தமிழே உன்னால் இருந்தேன்: வானோர்

விருந்து அமிழ்தென்றாலும் வேண்டேன்"

என்று தமிழ்க் கவிதைக்காகவே தம்மை அர்ப்பணம் செய்து. தமிழ்த்தாயின் உள்ளத்தைக் குளிர வைக்கும், "பொன்னான கவிஞர்" நம் பொன்னடியார்! கவிச்செம்மல்களின் எந்த அமுதமும் வேண்டாம் என்கிற பாரம்பரியத்தில் வந்த நம் கவிஞர் பொன்னடியார், பொன்னையா

வேண்டுவார்? அல்லது சாதாரண பொருளைத்தான் வேண்டுவாரா?

அவர் பாடிய பாடல் ஒவ்வொன்றும் மக்கள் நலத்தையே பரிசாகப் பெறும் நோக்கத்தில் உருவானது என்றுதான் நான் சொல்லுவேன்!

நான் மட்டும் என்று சொல்வது தவறு! என்னைப் போல் நம் கவிஞரை நன்கறிந்தவர்கள் இந்நாட்டில் ஏராளமானவர்கள்! எல்லோரும் ஒருமிக்க இக்கவிஞர் பெருமகனைப் பற்றிக் கூறும் ஒரே வாசகம், "தன்னலங்கருதா தனிப் பெருங்கவிஞர்" என்பதே.

இத்தகு மேன்மைகளுக்குரிய நம் பொன்னடியாருக்குப் பாராட்டு விழா நடப்பதும், அன்னாரின் அரும்படைப்பாகிய, "முல்லைச்சரம்" பத்திரிகைக்கு நல்லதோர் சிறப்பு விழா நடப்பதும் எல்லோராலும் வரவேற்கப்படுபவை ஆகும்.

ஏனென்றால் இந்த விழா, "தமிழன்னைக்குத் தமிழ்த்தாயின் மக்கள் தங்கள் நன்றியைச் செலுத்தும் விழா" என்று கூறவேண்டும்.

கவிதை உலகில் பல சாதனைகளைச் செய்த கவிச்செம்மல் பொன்னடியாரைப் போற்றுமுகத்தான், தமிழன்னையின் மனங்குளிர்வதுடன், தமிழ்க் கவிஞர்களின் உள்ளங்கள் அனைத்தும் பூரித்து மகிழ்கின்றன என்றும் கூறுவது முற்றிலும் பொருந்தும்.

அவரின் மணம் மிகுந்த படைப்பான முல்லைச்சரம் வளரவேண்டும்



**மகாவித்வான் அரவணைப்பில்**
**பொன். லெனின்குமார் அருகில் பிரசாந்த்**

என்றும், அவரின் செஞ்சொற்கவிதைகள் தொடர்ந்து தமிழன்னையின் பொன்மேனியை அலங்கரிக்க வேண்டும் என்றும், பல்லாண்டு பல்லாண்டு நம் கவிச்செம்மல் பொன்னடியார் தம் சாதனைகளை மேலும் மேலும் ஆற்றிவர வேண்டும் என்றும், அன்னாரின் படைப்புகளைத் தமிழ்கூறும் நல்லுலகத்து மக்கள் அனைவரும் வாங்கிப் படித்துப் பயனடையவேண்டும் என்றும் இறையருளை வேண்டுகிறேன்.

செஞ்சொற்கவிச்சுரங்கமாகிய நம் பொன்னடியாரின் உள்ளத் திலிருந்து ஊற்றுப் போல் சுரக்கும் கவிதைகள் அனைத்தும் மனிதகுல நல்வாழ்வுக்கு வழிகாட்டும் ரத்தினங்கள்.

அந்த ரத்தினங்களைத் தன்னிலே பதித்துக் கொண்டிருப்பவரும், அவற்றின் ஒளிக்கிரணங்களைப் பெருமளவில் பரப்புகின்றவரும், *"கவிதையே தன் வாழ்வு"* எனப் போராடிக் கொண்டிருப்பவருமாகிய, இந்தத் தன்னலம் கருதாத் தமிழ்க் கவி வேந்தரைப் போற்றுவோம்! என்றென்றும் போற்றுவோம்!

இதன் வாயிலாக நாம் உய்வோம்! நாடு உய்வு அடையும்! இவரின் படைப்புகளால் தமிழ்த்தாயின் தனிச்சிறப்புடைய புகழ் தரணி முழுவதும் படரும்! மலரும்! ஒளிவீசும்! ஆம்! இது என் உள்ளத்தின் கணிப்பு! அதே நேரத்தில் என் இதயத்தின் ஒரு வேண்டுகோள்!

**எல்லோரும் போற்றுவோம்.**

**'எங்கள் பொன்னடியார் வாழ்க ! வளர்க !'' என்று.**

**வணக்கம்.**



மகள் — பேத்தி.

## எஸ்.ஆர்.எம். பொறியியல் கல்லூரி விழா



எஸ்.ஆர்.எம் பொறியியல் கல்லூரி தமிழ் மன்ற விழா: சிறப்பு விருந்தினர் கவிஞர் பொன்னடியான் பரிசுகள் வழங்குகிறார். அருகில் திலகவதி ஐ.பி.எஸ். மன்றத் தலைவர் டாக்டர். ப. காமராஜ்.



சிறப்பு விருந்தினர்களுடன் மன்றக் காப்பாளர்கள் கல்லூரி முதல்வர் பேராசிரியர் வெங்கட்ரமணி, டாக்டர். ப.காமராஜ், பேராசிரியர் வாசுதேவன், பரிமளா ரெங்கநாயகி.



பெருங்கவிஞர். கலைமாமணி முகவையாருக்கு இசைஞானி 'முல்லைச்சரம்' விருதினை வழங்குகிறார்.



# வெலிங்டன் சீமாட்டி விழா—



வெலிங்டன் சீமாட்டி கல்லூரி விழாவில் முதல்வர் திருமதி. ராஜலட்சுமி கவிஞர் பொன்னடியானுக்குப் பரிசு வழங்குகிறார். அருகில் கவிதைப் போட்டியில் பரிசு பெற்ற செல்வி. சித்ரா.

புகழ்பெற்ற சென்னை வெலிங்டன் சீமாட்டிப் பெண்கள் கல்லூரி ஆண்டு விழா மூன்று நாட்கள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டன. மாணவிகள் திறமை காட்டும் பல போட்டிகள் நடைபெற்றன. புகழ்பெற்ற நடிகர் ஸ்ரீகாந்த், கவிஞர் பொன்னடியான், லியோ பிரபு போன்ற பல பெருமக்கள் நடுவர்களாக – சிறப்பு விருந்தினர்களாகக் கலந்து கொண்டனர். கல்லூரி முதல்வர் திருமதி. ராஜலட்சுமி, விரிவுரையாளர்கள் திருமதி மஞ்சுளா, திருமதி. மும்தாஜ், மாணவியர் தலைவி ஸ்ரீபிரியா, கல்லூரி பத்திரிகை ஆசிரியர் திலகவதி ஆகியோர் விழா ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தனர்.

– சின்னப்பா

# கவிஞர் பொன்னடியார் பாராட்டு விழா



17.1.1999-ம் நாள் காமராஜர் அரங்கில் சென்னைக் கலாசாரக் கழகத்தின் சார்பில் கவிஞர் பொன்னடியான் அவர்களுக்குப் பாராட்டு விழா நடைபெற்றது. தலைவர் ஜி. மணிலால் தலைமை தாங்கினார். தொழிலதிபர் டி.கே.தங்கராஜ் முன்னிலை வகித்தார். நீதியரசர் ச.மோகன், சமூக நலத்துறை அமைச்சர் மாண்புமிகு சற்குண பாண்டியன், கவிச் செல்வர் கங்கை அமரன் ஆகியோர் சிறப்புரையாற்றி, முடிசூடி கேடயம் வழங்கினர். கவிஞர் சிந்தைவாசன் அனைவரையும் வரவேற்றார். ஊனமுற்றவர்களுக்கு மூன்று சக்கர வண்டி வழங்கப்பட்டது.



கவிஞர் பொன்னடியான் தமிழ்த் தொண்டினைப் பாராட்டி மத்திய அமைச்சர் மாண்புமிகு. எம். அருணாச்சலம் பொன்னாடை அணிவிக்கிறார்.

இந்தியன் வங்கித் தலைவர் திரு. எம்.கோபாலகிருஷ்ணன் அவர்கள் கவிஞருக்குப் பொன்னாடை போர்த்திப் பரிசளிக்கிறார். அருகில் மூத்த பத்திரிகையாளர் கருப்பையா, துணை ஆசிரியர் ஏ.பி.ராமன், விழாக்குழுத் தலைவர் ஆர். வெங்கட்டராமன்.





மக்கள் தலைவர் ஜி.கே. மூப்பனார் அவர்கள் பொன்னாடை போர்த்துகிறார். எம்.ஜி.ஆர் மன்றத் தலைவர் ஆர்.எம்.வீ. சுவாமி சாந்தானந்தா, இசைஞானி.



முகப்பேரு முல்லைச்சரம் வாசகர் வட்டத்தின் சார்பில் கவிஞருக்கு மலர்க் கிரீடம், மாபெரும் மாலை அணிவிக்கப்படுகின்றன. அருகில் அண்ணன் ஆர்.எம்.வீ, தலைவர் பாலன், செயலாளர் பீட்டர் திரு. க. சிவகாமிநாதன், திரு. ஹென்றி இசிதோர்.



# பணிவிழா நாயகர் பொன்னடி வாழ்க!

பாவலர் முனைவர்
க.மீனாட்சி சுந்தரம்
Ex. MLC.

பாட்டுச் சூரியன் பாவேந்தர் பாசறையில் பயின்ற அதிர்வேட்டுச் சூரியன்தான் கவிஞர் பொன்னடியான்.

சற்றொப்ப 45 ஆண்டு காலமாக பாவுலகில் பவனி வரும் இவ்வெழுச்சிக் கவிஞரின் பாக்கள் ஒவ்வொன்றும் எரியீட்டி. பகுத்தறிவுக் கனல், பண்பாட்டைக் கற்பிக்கும் கற்பூரச்சுடர், அனைவருக்கும் வாழ்வில் நம்பிக்கையை ஊட்டி வரும் விடிவெள்ளி.

தன் 26 வயதிலேயே முல்லைச்சரம் என்ற கவிதை ஏட்டைத் தொடங்கி, தொகை தொகையாய்த் தொடர்ந்த தொல்லைகளை யெல்லாம் துவளாமல் தாங்கி நின்று, அன்றும், இன்றும், என்றும் தாய்த் தமிழுக்காக தன்னை ஒப்படைத்துள்ள ஒல்காப் புகழுடைய ஒப்பற்ற கவிஞர்தான் பொன்னடியான்.

"முல்லைச்சரம்" என்ற அவ்வெல்லத் தமிழ்க் கவிதையேட்டின் மூலம் பல்லாயிரக்கணக்கான கவிஞர்களைத் தமிழ் கூறும் நல்லுலகுக்கு அறிமுகப்படுத்தி, வளர்த்து, அவர்களில் சிலர் இன்று வான்புகழ்ப் பெற்று வாழ்வதைக் கண்டு அகமகிழ்ந்து, அவர்தம் ஆற்றலைப் போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்து வரும் விரிந்த மனம் படைத்த வித்தகராவார் பொன்னடியான்!

அவ்வுணர்ச்சிக் கவிஞரின் 'பாவடி' ஒவ்வொன்றும் 'பொன்னடி' யாகும். 'நாவடி' ஒவ்வொன்றும் 'பேரிடி'யாகும்; அதுவே கருமேகமாகும். பின் குளிர் மழையுமாகும்!

தன்னை வளர்த்த ஆசான் பாவேந்தர் நிறுவிய தமிழ்க் கவிஞர் மன்றத்தைக் கண்ணே போல் காத்து அதன் காப்பாளராகவும், பொதுச்

செயலாளராகவும் இன்றும் செயல்பட்டுத் திங்கள் ஒருமுறை கடற்கரைக் கவியரங்கத்தைத் தொய்வில்லாமல் நடத்தி, அதை உலகச் சாதனையாக்கி, பெர்ய்யிலாப் புகழுக்குரியவராக விளங்குபவர் வணக்கத்திற்குரிய பொன்னடியான் அவர்கள்.

திருவாரூர் மாவட்டம், வடகுடி என்னும் சிற்றூரில் பிறந்த, வளர்கின்ற போதே 'கவிதை' என்று ஏதோ கிறுக்கி வந்த எனக்கு, ஆண்டு 1966-ல் தமிழ்க் கவிஞர் மன்றம் நடத்திய கவிதைப் போட்டியில் "பள்ளம்" என்ற தலைப்பில் பாடும் வாய்ப்பளித்து, குடவோலைத் திட்டத்தின் மூலமாக கொள்கைக் கவிஞர்கள் 99 பேர் வாக்களித்ததில், பெரும்பான்மை வாக்குகளை நான் பெற்றதால், முதல் பரிசான பொற்கிழியை எனக்கு வழங்கி, 'பாவலர்' பட்டத்தையும் தந்து உவமைக் கவிஞர், சுரதா தலைமையில் உலகுக்கே என்னை அறிமுகப்படுத்திய உன்னதக் கவிஞர், நான் நன்றியுடன் நெஞ்சில் வைத்து என்றும் வணங்கும் செஞ்சொற் கவிஞர் பொன்னடியான் ஆவார்!

பொதுவாகக் கவிஞர்கள் இயற்கையைப் பாடுவர்; எழில் குறையாத மங்கையரைப் பாடுவர்; மற்றக் கருத்துக்களை இங்கொன்றும் அங்கொன்றுமாகப் பாடுவர்.

ஆனால், பள்ளத்தில் அழுத்தப்பட்டப் பாமரனின் செல்லக் கவிஞர் பொன்னடியான் ஒரு உயர்குணப் பெண்ணரசியின் கண்ணடிபட்டக் காலந்தவிர, அழகுமிழும் மண்ணடி போட்டக் காலந்தவிர, அவர் வாழ்வில் அனைத்துக் காலங்களிலும் சாதி, மதச் சடங்குகளை, சாத்திர சம்பிர்தாயங்களை, வசதி படைத்தவர்களின் வன்முறைகளை, பொய்யிலே உலவும் புன்மையாளர்களை, நாட்டுச் சொத்தைக் கொள்ளையடிப்பவர்களை, குணக்கேடர்களை, மொழிப் பற்று, நாட்டுப் பற்று இல்லாத நடமாடும் மனித மிருகங்களை, மனித நேயமே இல்லாத பொல்லாதவர்களைச் சாடி, திருத்தி, புத்துலகை-பொன்னான உலகைப் படைக்கத் தொடர்ந்து கவி பாடி வருபவர் தமிழ்த்தாயின் கண்ணான கவிஞர் பொன்னடியான் அவர்கள்!

எவருக்கும் இவர் பொதுவானவர். எவர் வழியிலும் நடை போடாதவர். எவர்கூட்டிலும் தன்னை ஒப்படைக்காதவர்: எவர் எழுத்தையும் திருடாதவர்! தானே சிந்தித்து, எதிலும் தனி வழி கண்டு தரணிக்கே முன்னுதாரணமாகிப் புகழொளியை வீசுபவர் பொன்னடியான் அவர்கள்! அவரே கூறுகிறார்.

**தன்னந் தனியன் நான். தனிவழியின் புதுமனிதன்.**

**இன்னும் தனியன் தான். இனியும் தனியன்தான்!**

தனக்கென கொள்கை, கோட்பாடு எதுவும் இல்லாமல் காசுக்கு வளைந்து கொடுத்ததால் வளமோடு வாழும் கவிஞர்கள் ஏராளம் நம் நாட்டில். ஆனால், அவர்கள் வரலாற்றில் நிற்கமாட்டார்கள்

ஆனால், என்றைக்கும் வளமான வாழ்வு இல்லாவிட்டாலும் வளமான, வலிவான கொள்கை வழி நிற்கிறார்; யாருக்கும் குசலம் பாட மறுக்கிறார்.

அதனால் தான், யாருக்கும்அஞ்ஞாக்கவிஞன் எவரிடத்திலும் கெஞ்சாக் கவிஞன் பொன்னடியான் கூறுகிறார்.

காற்றடிக்கும் பக்கமெல்லாம்
என் துடுப்பைப் போடமாட்டேன்:
கைவலிக்கும் என்பதினால்
திசைமாறிப் போகமாட்டேன்:
சோற்றுக்கே தன்மானம்
அடகு வைக்கப் பழகிவிட்ட
சோம்பேறிப் பயல்களைப் போல்
பிழைக்கும் வழி தேடமாட்டேன்

எனப் பாடி நெஞ்சுயர்த்திக் கூறுகிறார். எனவே நாம் அவரை நெஞ்சில் இருத்தி வணங்குகிறோம்.

ஆண்டவன் என்றாலும் அஞ்சினேன் இல்லை
ஆள்பவன் என்றாலும் கெஞ்சினேன் இல்லை

எனக்கூறி தான் ஒரு தன்மானச் சிங்கம் என்பதை மெய்ப்பித்து வருகிறார்.

கிரேக்க ஞானி சாக்ரடீசு பட்டப் பகலில் ஒரு சிம்னி விளக்கை ஏற்றி கையில் பிடித்துக் கொண்டு வீதியில் வருவோர், போவோர் முகங்களுக்கு எதிரே பிடித்துக் கூர்ந்துப் பார்த்துக் கொண்டிருந்தாராம்.



மகள் பொன்மலர், தம்பி பிரேம்குமார் மகள்கள் பிரீதி பிரியங்காவுடன் திருமதி. இந்திரா பொன்னடி.

என்ன தேடுகிறீர்கள், பேரறிஞர் அவர்களே என ஒருவர் கேட்க,

"நான் மனிதனைத் தேடுகிறேன். ஆனால் எவரும் கிடைக்கவில்லை" என்றாராம் அந்தத் தத்துவ ஞானி.

அதுபோல, நம் மனித நேய மாண்பாளராகக் கவிஞர் பொன்வடியான்

அலைகின்றேன், அலைகின்றேன், நெஞ்சத்துள்ளே

அணுவேனும் உண்மை வாழ் மனிதன் தன்னை.

...................... ........................... ..................

நெடுந்தூரம் பார்க்கின்றேன்: தோல்வி: தோல்வி:

என எதற்கும் சோர்வடையாத மன வலிமை மிக்க கவிஞர், நினைவெல்லாம் சோர்வடைந்து சொல்கிறார்.

மனிதனிடத்திலே காண முடியாத சிறப்பியல்புகளை மிருகங்களிடத்திலே காண முடிகிறதே என்பதை,

காட்டிலுள்ள விலங்கினத்திற் குள்ள கொஞ்சம்

கருணைமன மும்இன்றிச் செயல்பு ரிந்தோம்!

எனப் பாடுவதன் மூலம் ஆறறிவு படைத்த மனிதனைவிட அய்ந்தறிவு விலங்குகளே அனைத்துப் பண்புகளுக்கும் எடுத்துக்காட்டு என என்னை எண்ணத் தூண்டினார். அதன் விளைவாக என்னுடை நெருஞ்சிப் பூக்கள் என்னும் கவிதை நூலில் நான் எழுதினேன் இவ்வாறு:-

செய்நன்றி மறவாத் தன்மை
செப்பிடவே நாய் தான் கண்டாய்!
மெய்க்காதல் கொள்ளும் பண்பை
மெய்ப்பிக்க அன்றில் சொன்னாய்!
பொய்க்காத ஊக்கத்திற்குப்
பூநாடும் தேனீ என்றாய்!
கைக்காத ஒற்று மைக்கோ
காக்கையைக் கூறிச் சென்றாய்!
எப்போதும் சுறுசுறுப் பிற்கோ
எறும்புதான் சிறந்த தென்றாய்!
தப்பாத நினைவு கொள்ளும்
வெண்தந்த வேழம் என்றாய்!
இப்பாரில் ஏற்றம் காண்போர்
எதிர்க்கின்ற சிங்கம் என்றாய்!
அப்பாவி மனிதா உன்றன்
அருங்குணம் எதுதான் சொல்வாய்?
என்று.



இப்பாட்டு, பண்பாட்டுக் கவிஞர் கலைஞர்அவர்களாலே பின்னர் பாராட்டப்பட்டப் பாட்டாகும்.

எனவே, என்னைப் போன்றோர்க்குக் கருப்பொருள் தருபவராகத் திகழும், ஏனையோர் எப்பொருள் பற்றிக் கெட்டாலும், இல்லையென்னாமல் தன் பாக்களிலே பதில்தரும் கற்பகத் தருவாகக் காட்சி தரும் கவிஞர் பொன்னடியான்அவர்களின் 40 ஆண்டுகால கவிதைப் பணியைப் பாராட்டி எடுக்கும் விழா அவருடைய அகவை அறுபது என்பதையும் நினைத்து மகிழும் மணிவிழாவாகவும் அமைந்துள்ளது.

அந்த இலட்சியக் கவிஞரின் பாட்டுப்பணி தமிழன்னைக்குச் சூட்டும் எழிலும் மணமும் மிக்க முல்லைச்சரமாக என்றும் தொடர ஒல்லும் வகையாலும் தமிழார்வலர்கள் ஒத்துழைப்பை நல்கி நிற்பார்கள் எனத் திடமாக நம்புகிறேன்: அதையே வேண்டுகிறேன்.

அவ்வரிமாக் கவிஞரின் பணிவிழா மட்டுமல்ல, இது, மணிவிழா என்பதையும் நினைவு, கூர்ந்து என்றும் வாடாத வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்வதோடு, அவர் அடுத்தடுத்துப் பவள விழா, முத்து விழா, நூற்றாண்டு விழாவென்னும் கனிவிழா காணவும் வாழ்த்தி, அவ்விழாக்கள் ஒவ்வொன்றிலும் என் வாழ்த்து மணம் வீசும் என்பதையும் உறுதியளித்து மகிழ்கிறேன். ★


மகன் பொன் லெனின்குமார், மருமகன் எஸ்.எம்.சாமி, மகள் பொன்மலர், பேத்தி நவீனா ஆகியோருடன் கவிஞரும் அவர் துணைவியார் இந்திராவும்



# புரட்சிக் கவிஞரும் பொன்னடியும்

பார்வதி மணாளன்

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களின் உதவியாளராக - அவர் 'குயில்' பத்திரிகையின் உதவி ஆசிரியராக, அவர் எடுக்கவிருந்த 'பாண்டியன் பரிசு' பட நிறுவனத்தின் நிர்வாகியாக எனப் பல பொறுப்புக்களை ஏற்றுத் திறம்படச் செயல் பட்டவர் கவிஞர் பொன்னடியான் இதுபற்றி புரட்சிக் கவிஞர் மகன் திரு மன்னர்மன்னன் அவர்களும் விரிவாகத் தெளிவாக பல கட்டுரைகள் வாயிலாக விளக்கி எழுதியுள்ளார். கூட்டங்களிலும் பேசியுள்ளார்.

கவிஞரின் இலக்கியப்பணி வெள்ளி விழா மலரில் 'நெருப்பாகும் நிழல்' என்ற தலைப்பில் எழுதிய வாழ்த்துக் கட்டுரை அவைகளில் குறிப்பிடத்தக்க ஒன்று.

பாவேந்தர் இளங்கவிஞரான தன் மாணவர் பொன்னடியானை ஒருபோதும் பொன்னடியான் என்று அழைத்ததே இல்லை. அதாவது மருத்துவமனையில் அவர் மறையும்வரை பொன்னடி - பொன்னடி என்றே அழைத்தார் என்பது அக்காலத்தவர் அனைவரும் அறிந்ததே.

பாவேந்தர் இல்லத்திற்குச் சென்று பொன்னடி பற்றிக் கேட்டால் பாவேந்தர் "பொன்னடி அங்கு சென்றிருக்கிறார். மாலை வருவார்" என்ற வகையில்தான் பதில் கூறுவார். தன் மாணவன் தானே என்று அன் விகுதி போட்டு அங்குச் சென்றிருக்கின்றான் மாலை வருவான்" என்று ஒருபோதும் அழைத்ததே இல்லை என்பது புரட்சிக் கவிஞரின் உயரிய பெருள்ளத்தை நமக்குப் படம் பிடித்துக் காட்டும்.

அதேபோல் பொன்னடியாருக்குக் கடிதம் எழுதும்போதும்

"அன்புள்ள பொன்னடிக்கு" என்று விளித்தே கடிதங்கள் எழுதியுள்ளார் என்பதற்கு அவர் கவிஞர் பொன்னடியானுக்கு எழுதிய பல கடிதங்கள் சான்றாக உள்ளன. முகவரியிலும் திரு. பொன்னடி என்றே குறிப்பிட்டிருப்பார்.

24-11-1963-ஆம் நாளிட்டு கவிஞர் பொன்னடி அவர்களுக்குப் பாவேந்தர் கொடுத்த நற்சான்றுக் கடிதத்திலும் திரு. பொன்னடி என்றே குறிப்பிட்டுள்ளார்.

1-5-62-ஆம் நாள் தேதியிட்ட 'குயில்' தலையங்கத்தில் 'குயிலின் நிலை' பற்றி எழுதியுள்ள தலையங்கத்தில், "சென்ற குயிலில் (1-5-62) பிழைகள் ஏராளம். அதற்குக் காரணம் இன்னம் அலுவலினரை வேண்டிய அளவு அமைக்காததே. இப்பொழுது அலுவல் பார்த்து வருகின்றவர்கள் எத்தனைபேர் என்பதையும் இப்போது சொல்லிவிட எண்ணுகிறோம். 10 பேர்கள் இருப்பார்களோ அல்லது ஐந்து பேர்கள் இருப்பார்களோ என்று நீங்கள் எண்ணி விடக் கூடும்

நான் ஒருவன் - பொன்னடி ஒருவர்.

சென்ற இதழில் பிழை பார்க்க ஆள் இல்லாததால் இருப்பவர்க்கும் ஓய்வில்லாததால், இலக்கணப் பிழை மிகுதியாயிற்று. அதற்காக வருந்துகிறோம்." என்று குறிப்பிட்டுள்ளார். இத்தலையங்கத்திலும், "நான் ஒருவன் பொன்னடி ஒருவர்" என்றே குறிப்பிட்டுள்ளது நினைவில் கொள்ளத் தக்கது.

தமிழ்க் கவிஞர் மன்றத்தின் முதல் பொதுக் குழு பாவேந்தர் இல்லத்தில் அவர் முன்னிலையில் கூடியபோது, மன்றத் தேர்தல்



பேத்தி நவினாவுடன் ஒரு பிறந்தநாள் நிகழ்ச்சியில்.

குழுத் தலைவராக பேரெழுத்தாளர் நாரண துரைக் கண்ணன் அவர்கள் பொறுப்பேற்கிறார். ஆட்சி மன்றக் குழுவில் "பொன்னடி பெயர் இல்லையா?" என புரட்சிக் கவிஞர் வினாத் தொடுக்கின்றார். உடனே திரு. நாரண துரைக் கண்ணன் அவர்களும் கவிஞர்கள் சேலம் முருகு சுந்தரம், நாக முத்தையா, நாரா நாச்சியப்பன் போன்றோர் "ஆம்.. பொன்னடியான்..." என்று ஒரு சேரக் குரல் கொடுத்து முன்மொழிந்த போதும் புரட்சிக் கவிஞர் கவனமாக பொன்னடியான் இல்லை பொன்னடி என்று அழுத்தந்திருத்தமாகச் சுட்டிக் காட்டித் திருந்தியதை இன்றும் பல கவிஞர்கள் நினைவில் வைத்துக் கூறுகின்றனர்.

இதை எல்லாம் விட சிறப்பு புரட்சிக் கவிஞர் குடும்பத்தினரும் குறிப்பாக மறைந்த அவர் துணைவியார் திருமதி. பழனியம்மா அவர்களும் அமரர் மாப்பிள்ளை தண்டபாணி அவர்களும் பொன்னடி என்றே அன்பொழுக அழைப்பார்கள். அதேபோல் இன்று புரட்சிக் கவிஞர் மகன் கலைமாமணி மன்னர் மன்னன் அவர்களும், மகள்கள் திருமதி சரஸ்வதி கண்ணப்பன், திருமதி வசந்தா தண்டபாணி அவர்களும் மற்றும் குடும்பத்தினர் அனைவரும் 'பொன்னடி - பொன்னடி' என்று அழைத்தும், எழுதியும் அன்பைப் பொழிகின்றனர். அத்தகைய அன்புக் கவிஞரை நாமும் 'பொன்னடி' என்றே அழைத்துப் பூரிப்படைவோம். ★





# எங்களின் வழிகாட்டி!

*"ஓ இளைஞர் பரம்பரையே - உன்*
*எழுச்சியில் தான் இந்த நாட்டெதிர் காலத்தின்*
*ஏற்றம் இருக்கின்றது- உன்*
*எண்ண வலுவினில் தான் இந்த வையத்தின்*
*வாழ்வும் துளிர்க்கின்றது!"*

அரிமா
டி.ஏ.கணேசன்

இளைஞர் தம் எதிர்கால ஏற்றம் எண்ணி இப்படி முழங்கும் எழுச்சிக் கவிஞர் பொன்னடி அவர்களின் அன்பிற்குச் சொந்தக்காரர்களாக நாங்கள் இருக்கிறோம் என்ற எண்ணமே என் போன்ற இளைஞர்களின் நம்பிக்கை ஒளியாக உள்ளது.

பாரதியை, பாரதிதாசனை பார்க்க முடியவில்லையே, அவர்கள் வாழ்க்கையில் பிணைந்து வாழ முடியவில்லையே என்ற ஏக்கத்தைப் போக்குகின்றது கவிஞர் பொன்னடியாரின் நட்பும் உறவும். இளம் வயதில் என் போன்ற இளைஞர்கள் முன்னேறுவதற்குக் காரணமாக இருந்தவைகளில் ஒன்று கவிஞரின் உண்மை வாழ்க்கையும் அதன் வழியில் பிறந்த எழுச்சியும் உணர்ச்சியும் கலந்த அவர் கவிதைப் படைப்புகளும்தான். - பல ஆண்டுகளுக்கு முன்பு வெளிவந்த அவரின் 'ஒரு கைதியின் பாடல்கள்' நூலில் - (1971)

'உன்னால் முடியும்!' என்ற தலைப்பில் உள்ள கவிதை ஒன்று இன்றும் என் மனத்தில் என் உடன் பிறந்த சகோதரர் திரு. டி.ஏ. சபாபதி அவர்கள் உள்ளத்தினில் பதிந்த கவிதையாகும்:



*"உன்னால் முடியும் தம்பி -*
*உன்னால்முடியும் !*
*மணிமுடி தன்னை உருள வைத்திடவும்,*
*மாமன்னர் தன்னை மருள வைத்திடவும்*
*அணி நகை பெருஞ்செல்வம் விளையவைத்திடவும்*
*அற்புதக் கலைகளை மலர வைத்திடவும்*
*உன்னால் முடியும் தம்பி?*

*உலகை ஒரு நொடியில் கலங்க வைத்திடவும்*
*ஒளியில் பெரு மகிழ்வில் துலங்கவைத்திடவும்*
*கலகப் பகைவரினை ஒடுங்க வைத்திடவும்*
*கல்மனச் செல்வரினை நடுங்க வைத்திடவும்*
*உன்னால் முடியும் தம்பி.*

*பொட்டல் வெளியிடத்துக் குலுங்க வைத்திடவும்*
*பூக்காடு பொற்காடாய்ப் புலர வைத்திடவும்*
*எட்டுத் திசையின் புகழ் உன்னில் வைத்திடவும்*
*எதிர்ப்போரின் திமிரினை மண்ணுள் வைத்திடவும்*
*உன்னால் முடியும் தம்பி.*

என்று நம்பிக்கை ஊட்டி நல்வழி காட்டுகிறார் கவிஞர்

*வஞ்சகருக்கும் வஞ்சகத்திற்கும்*
*வாசல் பல உண்டு தோழனே! - அது*
*வரும் வழி ஒன்றென்று எதிர்கொண்டு நின்று நீ*
*வருந்தி வாடாதே தோழனே !*

என்று புதிர் நிறைந்த, பொறாமை உலகின் திரைமறைவு வேலைகளைச் சுட்டிக்காட்டி இளைஞர்களின் வாழ்வுக்குக் கவிதை வழி காட்டுகிறார் கவிஞர்.

*சாதியைப் பெயரிலே ஒட்டி உரைப்பவன் தமிழனா?*
*இல்லவே இல்லை ! தன்*
*சாதியை நினைவிலே கட்டி அழுபவன்*
*மனிதனா இல்லவே இல்லை*

என்று கோபமாகக் குரல் கொடுக்கிறார் கவிஞர் பொன்னடி.

*மூடத்தனத்தின் அடிவேர் கிள்ளியே*
*முளையில் போட்டிட வாடா இளைஞா வா!*

என்று மூடத்தனம் அற்ற முற்போக்கு வழியைக் காட்டுகிறார் கவிஞர். இப்படிப் பல ஆண்டுகளாக நாடு, மொழி, மக்கள் நலம், உலக நலம் பாடி என் போன்ற இளைஞர்களுக்கு இலக்கிய வழிகாட்டி முன்னேறத் தூண்டும் கவிஞர் பொன்னடியார் பல்லாண்டுகள் வாழ்ந்து வெற்றிகள் நூறு பெற நெஞ்சார வாழ்த்துகிறோம்.

# சொல்லும் செயலும் புதுமை



*வி.டி.லாசர்*

ஒரு நாடு வளமையானதாக - வறுமையற்றதாக மட்டும் இருந்துவிட்டால் மட்டும் அதன் மதிப்பு உயர்ந்திடாது. காலத்தால் அழியா அதன் இலக்கிய வளத்தால் மட்டுமே உண்மையான மதிப்பின் - உயர்வின் - பெருமையின் சிகரத்தை அந்நாடு எட்டமுடியும் என்பது உலகம் அறிந்த உண்மை. ஆங்கிலேயர்கள் ஆயுதபலத்தால் உலகை ஆண்டார்கள் என்பது உண்மையாக இருக்கலாம். ஆனால், அவர்கள் மொழிச் சிறப்பாலும், அம்மொழியின் இலக்கிய வளத்தாலும் உலக மக்களின் மனத்தைக் கவர்ந்தார்கள் என்பதே மறுக்கமுடியாத உண்மையாகும்.

இன்றும் உலக மொழிகளில் எல்லாம் சிறந்த மொழியாக இலக்கிய வளமை மிக்க மொழியாக உள்ள தமிழ் மொழியின் சொந்தக்காரர்கள் நாம் என்பதிலேதான் உண்மையான பெருமை இருக்கிறது. அந்தத் தமிழின், இன்பத் தமிழின் பெருமைக்காகத் தன் முன்னோர்கள் பாரதி - பாரதிதாசன் வழியில் கடந்த 40 ஆண்டுகளாக எவரும் போகாத புது வழியில், புதுமை வழியில் சென்று அயரா உழைப்பால் அழிக்க முடியா வரலாற்றைப் படைத்திருக்கிறார், கவிஞர் பொன்னடியான்.

அவர் கவிதைகள் எப்படி உணர்ச்சியில் தோய்த்தெடுக்கப்பட்ட புதுமை வடிவங்களோ, அப்படியே அவர் சொல்லும், செயல்களும் புதுமையானவை. இந்த நாட்டு மக்களின், ஏன், உலக மக்களின் விடிவுக்கு, சமாதானத்திற்கு, வெற்றிக்குத் துணை நிற்பவை என்றால் மறுப்பவர் இல்லை.

நாட்டில் கவிஞர்கள் இருக்கிறார்கள். ஆனால், கவிஞர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் உழைக்கும் கவிஞர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்? தன்னலங் கருதாது தமிழ்நலம் பேணி உழைப்பவர் எத்தனை பேர் இருக்கிறார்கள்.

வள்ளுவர் வழியில் பசி நோக்காது - கண் துஞ்சாது பாடுபட்டிருக்கும் இந்தப் பாட்டாளர் கவிஞரை, பகுத்தறிவுக் கவிஞரை, புரட்சிக் கவிஞரின் உண்மைக் கவிதை வாரிசான முல்லைச்சரம் கவிஞரை நெஞ்சார வாழ்த்துவோம் - அவர் அரிய முயற்சிகளுக்குத் துணை நிற்போம் ★



விழா மலரை இசைஞானி வெளியிடுகிறார். சாமி சந்தானந்தா பெற்றுக் கொள்கிறார். அருகில் மக்கள் தலைவர் ஜி.கே. மூப்பனார் மதிப்புமிகு ஆர். எம். வீ. கவிஞர் பொன்னடியான்.




விழா மேடையில் மாண்புமிகு பேராசிரியருடன் கவிஞர் கங்கை அமரன், கவிஞர் பொன்னடியான் தலைவர் ஹென்றி இசிதோர்; துணைத்தலைவர் ஏ.பி.ராமன்.



திரு லேனா தமிழ்வாணன் விருது பெறுகிறார்



திரு ராஜு இசிதோா விருது பெறுகிறார்




திரு எம் பழனிச்சாமி (பி.ஏ. செக்யூரிட்டி) விருது பெறுகிறார்



திரு பேராசிரியர் வான்முகில் விருது பெறுகிறார்



நல்வழி நிலையம் நெல்லை இராசானந்தம் பட்டமளித்து பாராட்டுகிறார்.
பேராசிரியர் அன்பழகனார் எம்.ஜி.ஆர் மன்றத் தலைவர் ஆர்.எம்.வீ.



வடசென்னை முல்லைச்சரம் வாசகர் வட்டத் தலைவர் டி.ஏ. கணேசன், செயலாளர் டி.ஏ. சபாபதி ஆகியோருடன் கவிஞர் பொன்னடியான் மற்றும் கங்கை அமரன். திரு ஏ.பி. ராமன்

தஞ்சை மாவட்டத் தமிழ்க் கவிஞர் பெருமன்றத்தின் 10-ம் ஆண்டு விழாவும், கவிஞர் சி.கே. ரெங்கசாமியின் திருக்குறள் நூல் ஆய்வு விழாவும் தஞ்சை ராமநாதன் பேரரங்கில் நடைபெற்றது. திருவாளர்கள் தஞ்சை ராமமூர்த்தி, கவிஞர் கங்கை அமரன், கவிஞர் பொன்னடியான், திரு. குணசேகரன், ஜீவகுமார் ஆகியோர் மேடையில்.

அதே மேடையில் தஞ்சைக் கவிஞர் சி.கே. ரெங்கசாமி, திருமதி தாட்சாயினி ரெங்கசாமி மணிவிழா. புகழ்ச் செல்வர் கங்கை அமரன் வாழ்த்தி பொன்னாடை போர்த்துகிறார்.

## அது எழில்-நிழல் சோலை....!

வாழ்க்கை என்பது
வரண்ட பாலையா?
கல்லும் முள்ளும் நிறைந்த புதரா?
காட்டு விலங்குகள் உலவும் காடா?

எவர் உனக்கு இப்படித் தீமை புகன்றது?
இல்லவே இல்லை என்னுயிர்த் தோழனே!
அது
மணம் நிறைந்துள்ள
மலர்களின் காடு!
சுவைமிகுந் துள்ள கனிகளின் தோப்பு!
உனக்கும் எனக்கும் பயன்கொடுக்கின்ற
ஒப்புமை இல்லா எழில் நிழல் சோலை!

நுனிநாக் கால், அதன் நுனிதொட்டு முகத்தைச்
சுளித்துக் களைத்து நீ
இளைத்துப் போவதோ?

ஆயிரங் கோடி
அர்த்தங்க ளோடு
பல்லாயிரங் கோடி பாசப் பின்னலால்
பக்குவ மாகப் படைக்கப் பட்ட
மானிட உயிர்ப்பின் மாளிகை, வாழ்க்கை!

- 5.9.1989

## என் பேரின்பம்!

எல்லா வகையினும் ஏழைத் தமிழன்
உயர்ந்தால் அதுவே எனக்கின்பம்!
எல்லா வகையிலும் எளிமைத் தமிழன்
வாழ்ந்தால் அதுவே பேரின்பம்!

எல்லாத் துறையிலும் இந்தியத் தோழன்
வென்றால் அதுவே எனக்கின்பம்!
எல்லாத் துறையிலும் வறுமைத் தோழன்
வளர்ந்தால் அதுவே பேரின்பம்!

எல்லா நிலையிலும் மடமை மனிதன்
தெளிந்தால் அதுவே எனக்கின்பம்!
எல்லா முறையிலும் பழமைத் தமிழன்
மீண்டால் அதுவே பேரின்பம்!

- 15.3.1971

## வெற்றிகள் சேர்க்கலாம்!

எழுத்துல கத்தினர்,
சிந்தனை யாளர்கள்
எழுந்துழைத் தாலிந்த இனியநன் னாட்டினைப்
பழுத்துக் குலுங்கும் பழச்சோலை யாக்கலாம்.
பன்னிற வண்ண மலர்ச்சோலை யாக்கலாம்!
அழுந்திக் கிடக்கின்ற
மக்களின் வாழ்வினில்
அன்பினால் ஆயிரம் வளமைகள் தேக்கலாம்!
இதயத்தில் எண்ணிலா வெற்றிகள் சேர்க்கலாம்!

கொள்கை மறவர்நாம்
ஒன்றென்று கூடினால்
கூக்குரல் இல்லாஓர் உலகம் படைக்கலாம்!
'வெல்க!' எனும்ஒரு சொல்லின் வடிவான
வீழாச் சமூகத்தை இன்றே வடிக்கலாம்!
பல்லுயி ரோம்பிடும்
பண்பின் மனத்தினர்
படைப்பாற்ற லால்மண்ணின் துயரம் துடைக்கலாம்!
சொல், செயல் இரண்டின் துணைகொண்டு பூமியில்
தூய்மை துலங்கிடும் வாழ்க்கை சமைக்கலாம்.

## கடமைகள்!

சமூகம் சரிவிலாப் பாதையில் நடக்க
சரியான வழிகளில் சரித்திரம் படைக்க
அமைதியும் அன்பும் வளர்ந்து செழிக்க
ஆயிரம் வழிகளில் நாடு விழிக்க

உனக்கும் எனக்கும் பலநூறு கடமைகள்
உண்டுண்டு உண்டுண்டு உண்டுண்டு நண்பனே! - இதை
உணராவிட் டால் தீமை
ஒருகோடி அன்பனே!

- அக்டோபர் 93

## வரும் நாளின் விடிவுக்கு....

'உலகை அமைதிப் பூஞ்சோலை யாக்குவோம்!
உரிமை தவழும் தாய்வீடாய் மாற்றுவோம்!
கலகம், பொய், சூது, சுரண்டல்கள் போக்குவோம்
கருணை பூமியில் வெற்றியைத் தேக்குவோம்!

மானிடச் சமூகத்தின் மாண்பை வளர்ப்போம்!
மறுமலர்ச்சிப் பாதை நித்தம் நடப்போம்!
வானுயர் புகழெலாம் பெற்று உயர்வோம்
வரும்நாளின் விடிவுக்கு வாசல் திறப்போம்!

## என்றைக்கும்

மனிதரெலாம் இங்கு
ஒன்றெனும் கொள்கையே
மாண்புறு கொள்கையாகும்! - இந்த
மண்ணகம் முழுவதும்
நம்முகம் என்பதே
என்றைக்கும் நல்லவதாகும்!

## தேவை

எதையும் அழித்திட
எம்பிக் குதிப்பவன்
இன்றைக்குத் தேவை இல்லை!
அனைத்தும் செழித்திட
அன்புநீர் வார்ப்பவன்
அவசியம் தேவை தேவை!

## வாயடைப்போம்!

வன்முறை யாளர்களின் வாயடைப்போம்! - அவர்
வழி யடைப்போம்!
தன்மான மனிதரை இனி படைப்போம் - வரும்
தடை உடைப்போம்!

## தலை நிமிர்வோம்

தாய்மொழி வழியில்
அறிவியல் மொழியில்
தக்கதெல் லாம் கற்றுத்
தலைநிமிர்வோம் நாம்!



# வரலாற்று நூலில் கவிஞர் பொன்னடியார்

தமிழ்நாட்டில் 30 ஆண்டுகளுக்கு மேலாக 'கடற்கரைக் கவியரங்கம்' நடத்தி, பல அறிஞர்களை உருவாக்கியவர் கவிஞர் பொன்னடியான்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் மாணவரான பொன்னடியர்ன் பாரதிதாசன் நடத்திய, 'குயில்' இதழின் துணை ஆசியராக இருந்தார்.

'ராஜாதி ராஜா', 'சிங்கார வேலன்', 'ஒருவர் வாழும் ஆலயம்', 'என் ராசாவின் மனசிலே', 'அரண்மனைக் கிளி' முதலிய படங்களுக்கு இவர் எழுதிய பாடல்கள் பிரபலமானவை.

'பொன்னடியான் கவிதைகள்', 'பனி மலர்', 'ஓர் இதயத்தின் ஏக்கம்', 'நினைவலைகளில் பாவேந்தர்', 'பறக்கத் தெரியாத பட்டாம்பூச்சிகள்'. 'ஒரு கைதியின் பாடல்கள்' முதலிய நூல்களின் ஆசிரியர். தொடந்து கடந்த 34 ஆண்டுகளாக 'முல்லைச்சரம்' என்ற பத்திரிகையை நடத்தி வருகிறார்.

1970-ல் ஐ.நா. பண்பாட்டுக் கழக விருதும், 1990-ல் தமிழக அரசின் பாவேந்தர் பாரதிதாசன் விருதும் பெற்றவர்.

'புதுமைக் கவிஞர்', 'எழுச்சிக் கவிஞர்', 'புரட்சிக் குயில்' முதலிய பட்டங்கள் பெற்ற பொன்னடியான் கவிதைகள் ஆங்கிலம், இந்தி, பெர்சியன் முதலிய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

இவருடைய மனைவி இந்திரா, 'கிங் இன்ஸ்டியூட்'டில் நீர் ஆராய்ச்சித் துறை அதிகாரியாகப் பணியாற்றுகிறார். லெனின் குமார் என்ற மகனும், பொன் மலர் என்ற மகளும் உள்ளனர்.

மூத்த பத்திரிகை துறை அறிஞர் ஐ. சண்முகநாதன் எழுதிய 'ஒரு தமிழன் பார்வையில் இருபதாம் நூற்றாண்டு வரலாறு' என்ற அரிய வரலாற்று நூலில் வரலாறு படைத்தவர்கள் பகுதியில் (517-ஆம் பக்கத்தில்) கவிஞர் பொன்னடியார் பற்றி இடம் பெற்றுள்ள வரலாற்றுக் குறிப்பில் ஒரு பகுதி:

# பல்கலைக் கழகப் பாட நூலில்



கவிஞர் பொன்னடியான் கோவையில் 5-6-1940-ல் பிறந்தவர். இவர் முல்லைச்சரம் என்னும் கவிதை ஏட்டினை 35 ஆண்டுகளாக நடத்தி வருகிறார். சென்னைக் கடற்கரையில் தமிழ்க் கவிஞர்களை உருவாக்கி ஊக்குவிக்கும் அமைப்பான கடற்கரைக் கவியரங்கத்தை 30 ஆண்டுகளுக்கும் மேலாக நடத்தி வருகிறார். புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரிடம் அணுக்கத் தொண்டராகப் பணி புரிந்தார். பாவேந்தர் நடத்திய 'குயில்' இதழின் துணை ஆசிரியராகவும் பணியாற்றியவர். ஐ. நா. பண்பாட்டுக் கழக விருது - (1970-ல்), தமிழக அரசின் பாவேந்தர் விருது (1990) போன்ற விருதுகளைப் பெற்றவர்.

இவர் எழுதிய கவிதைகள் பொன்னடியான் கவிதைகள் என்ற பெயரில் வெளிவந்துள்ளன. இவரது பிற படைப்புக்கள் 'பனி மலர்', 'ஒரு இதயத்தின் ஏக்கம்', 'ஒரு கைதியின் பாடல்கள்', 'நினைவலைகளில் பாவேந்தர்', 'பறக்கத் தெரியாத பட்டாம்பூச்சிகள்' ஆகியன. திரைப்படங்களுக்கும் பாடல்கள் பல எழுதி உள்ளார்.

நமக்குப் பொன்னடியான் கவிதைகள் எனும் தொகுப்பிலிருந்து 'பேரழகுப் பெட்டகங்கள்', 'தமிழவே கற்றுக் கொள்' எனும் தலைப்பில் உள்ள கவிதைகளைப் பாடமாக வைக்கப் பெற்றுள்ளன. இக் கவிதைகளில் பெண்களின் மாட்சிமை, தாய்மையின் உயர்வு, தமிழர் கற்றுக் கொள்ள வேண்டியன ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடியுள்ளார் கவிஞர்.

நன்றி: சென்னைப் பல்கலைக் கழகம் - முதலாம் ஆண்டு, கலையியல், அறிவியல், வணிகவியல் பட்டப் படிப்பு பகுதி 1 தமிழ்ச் செய்யுள் திரட்டிலிருந்து எடுக்கப்பட்டது.



விழாவில் கவிஞர் பொன்னடியான் அவர்களுக்கு இந்தியத் தொலைபேசித் தொழிலகத்தின் சார்பில் வழங்கப்பட்ட 'பாரத கவிஞர் திலகம்' எனும் பட்டத்தை இசைஞானி வழங்குகிறார். அருகில் திரு. கங்கை அமரன், திரு. தேவநாதன், திரு. ஜே. விஜய்சிங், திரு. பார்த்தசாரதி.

'பாரத கவிஞர் திலகம்' எனும் பட்டம் பெற்ற கவிஞர் பொன்னடியான் அவர்களுக்கு இசைஞானி பொன்னாடை அணிவிக்கிறார்.

# அந்த நாள் ஞாபகம்!

## ப.மு. இளங்குமரன்.

**1962**-ஆம் ஆண்டின் நரைத்த பகுதி. சென்னை-வடபழனி; ஆற்காடு சாலையில் அமைந்திருக்கும் திரு. பகீரதன் அவர்களை ஆசிரியராகக் கொண்ட 'கங்கை' எனும் திங்கள் இருமுறை இதழ். இதனுடன் சேர்ந்து 'அன்பு நூலகம்'. இது, நூல்களை குறிப்பாக பாவேந்தர் நூல்களை வெளியிடும் பதிப்பகம்.

நிறுவனர்கள் திருவாளர்கள் பி. இராமரத்னம், வழித்துணைராமன் இவர்கள் இருவரும் பிரபலமான ஒரு தமிழ் நாளேட்டின் உயர் பதவிகளில் இருந்தவர்கள்.

நான் கங்கையில் துணையாசிரியன்: பிழை திருத்துபவனும் கூட. (அந்த நாளில் துணையாசிரியர் தான் பிழைதிருத்துபவராகவும் பணிபுரிய வேண்டும்).

பாவேந்தர் சிபாரிசில் பாவேந்தர் 'சார்பாளராக மேற்பார்வைப் பணியில் சேர்ந்தவர் நம் முல்லைச் சரம் ஆசிரியர்-கவிஞர் பொன்னடி. அப்போது அவர் மணமாகாதவர். நான் அப்படி இல்லை. ஆசிரியை ஆன என் மனைவி மதுரையில். நானோ சென்னையில்.

புரட்சிக் கவிஞரின், 'மணிமேகலை வெண்பா', 'கண்ணகி புரட்சிக் காப்பியம்'-ஆகிய வளமான நூல்கள் அன்பு நூலகத்தில் தயாராகிக் கொண்டிருந்தன.

நானும், சகோதரர் பொன்னடியும் பல இரவுகள் மொட்டை மாடியில் அமர்ந்து கவிமன்னரைப் பற்றி நிறைய பேசுவோம். என்னிடம் பொன்னடி பல சுவையான செய்தி களைக் கூறுவார். கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணனைப் பற்றிக் கவிஞர் சுப்பு ஆறுமுகம் அவர் களிடம் கேட்பது எப்படிச் சலிப்புத் தட்டாதோ- (அனுபவம் பேசுகிறது) அப்படித்தான் புரட்சிக் கவிஞரைக் குறித்து 'முல்லைச்சரம்' வாய்மூலம் கேட்பதும்.

ஏழைகள் நலனை, நாட்டின் நலனைப் பற்றிப் பேசும்போது எவ்வளவு நேரம் பேசுகிறோம் என்பதைப் பற்றியெல்லாம்



பாவேந்தர் கவலைப்படுவதில்லை. சூழ்நிலையை மறந்து விடுகிற குணம். நாமார்க்கும் குடி அல்லோம்; நமனை அஞ்சோம் என்ற கொள்கைதான் அய்யா அவர்களுக்கு" இவ்வாறு பொன்னடியிடம் நான் அதிகம் கேட்டிருக்கிறேன்.

ஒருநாள் நண்பகல் நேரம். தாராளமான வெயில் பொழுது.

கங்கையும், அன்பு நூலகமும் முதல் மாடியில்; தளப்பகுதியில் அச்சகம்.

அன்று இரண்டிலும் குறிப்பிடத் தக்கவர் எவருமிலர். நான், அச்சக ஊழியர்கள், அன்பு நூலகத்துக் கணக்காளர். அவ்வளவுதான்.

ஆற்காடு சாலையில்-அலுவலக வாசலில் கார் வந்து நிற்கிற ஓசை கேட்டது. மாடியிலிருந்து பார்த்தேன். முதன்முதலாக அந்த அரிய கவிதைக் கருவூலத்தைத் தரிசித்தேன். உடலும், உள்ளமும் என் வசத்தில் இல்லை. மகிழ்ச்சி, மருட்சி, எனும் கலப்படமான மனநிலை.

பாவேந்தருடன், "இரத்தக் கண்ணீர்"த் திரைப்படப் புகழ் திருவாரூர் தங்கராசனும் வந்தார்.

நிமிர்ந்த நடை; நேர் கொண்ட பார்வை; கம்பீரமான தோற்றம்; அதைக் கூட்டுகிற விதமாய் மீசை.

மாடியேறி வந்தனர். நான் கைகளைக் குவித்தேன்.

இருவரும் இருக்கைகளில் அமர்ந்தனர்.

"இராமரத்னம் இருக்காரா?" - வெண்கல நாதம்.

"இல்லை அய்யா" - இப்படி நான்.

"பொன்னடி?"

"காலையிலெ நூலகப் பணிக்காக வெளியிலெ போனவர். இன்னும் வரலை".



"அப்படியா!... இங்கே நீ?" - கேள்வியில் மிடுக்கு.

நான் எனது பெயரைச் சொன்னேன்; கங்கையில் எனக்கிருக்கும் பொறுப்பைப் பணிவாய்ச் சொன்னேன்.

"ரொம்ப மகிழ்ச்சி" என்ற பாவேந்தர் முகத்தைத் துண்டினால் துடைத்துக் கொண்டார்.

'இரத்தக் கண்ணீர்' மௌனம் காத்தார்.

திடீரென்று கம்பீரமாய் - உரிமை விரவிய அதிகாரக் குரல் எழுந்தது.

"போயி, குடிக்கிறதுக்கு சோடா வாங்கிட்டு வா!"

பெருமையோடும், பூரிப்போடும் கீழிறங்கி ஓடினேன்; எதிரில் இருந்த பெட்டிக் கடையில் சோடாவை வாங்கிக் கொண்டு விரைந்து திரும்பினேன்.

நாடே மதிக்கும், நான் துதிக்கும் நற்றமிழ்க் கவி வேந்தரிடம் சோடாவை மரியாதையுடன் நீட்டினேன்.

"நானும், தங்கராசனும் வந்திட்டுப் போனதா ராமரத்தினத்திடமும், பொன்னடிகிட்டேயும் சொல்லுப்பா!" என்று ஆணையிட்டார். அடுத்த விநாடி புறப் பட்டுவிட்டார்.

தன்னிடம் இருந்த கவி மாணாக்கர்களில் 'முல்லைச்சரம்' ஆசிரியர்பால் பாவேந்தருக்கு இருந்த அன்பையும், பாசத்தையும் நேரில் காணும் சந்தர்ப்பம் கிட்டியது. 'பொன்னடியான்' என ஏகவசனத்தில் விளித்தால் அன்பு சிதறுமோ என எண்ணி, 'பொன்னடி' என்று கூப்பிட்ட 'புரட்சி'யின் குணம்தான் -பண்புதான் எத்துணை சிறப்புப் பெற்றது! என்னுள் சிலிர்ப்பு, நிறைகுடமல்லவா அவர்!

அடுத்த நிகழ்ச்சி, நெஞ்சில் பதிந்த நெகிழ்ச்சி. அதே ஆண்டில் ஒரு நாள் மாலை. சென்னை, தியாகராய நகரிலிருந்த பாவேந்தர் இல்லத்துக்கு பொன்னடி என்னைக் கூட்டிப் போயிருந்தார்.



பெருங்கவிஞர், ஸ்டான்லி மருத்துவ மனையிலிருந்து வந்திருந்த இரண்டு இளம் மருத்துவர்கள், அற்புதக் கவிஞர் கம்பதாசன் ஆகியோர் இருந்தார்கள்.

என்னை பொன்னடி பாவேந்தருக்கு முறையாக அறிமுகப் படுத்தினார்.

'நல்லதொரு கவிஞன் மனிதாபிமானத்தின் சிகரம்' என்பது எனது அனுபவம். எனக்கும், பொன்னடிக்கும் இரு தட்டுகளில் மாம்பழத் துண்டுகள், வாழைப் பழங்கள். குடிப்பதற்கு டீயோ, காபியோ (நினைவில் இல்லை) வந்தன.

நானும் பொன்னடியும் அவர் எதிரில் அமர்ந்திருக்க ஓர் ஓரமாய் கம்பதாசன், மற்றும் சிலர்.

தமிழன்னைக்கு உவந்த தவப்புதல்வன் நிரம்ப அக்கறையுடன் ஈடுபாட்டு உணர்வுடன்-தனக்கே உரிய அரிமாக்குரலில் நளபாகப் பாடம் நடத்தினார்.

உணவுச் சுவையில் பாவேந்தர் புலியாம். இதுவும் அடியேனுக்குப் பொன்னடி சொன்னதுதான். அன்று அந்தப் பாடல்புலி சொன்ன நளபாகம் என்னை வியப்பில் ஆழ்த்தியது.

போலித்தனம்-நகலான வாழ்க்கை பாவேந்தர் அறியாதவை.

"நான் செய்ய வேண்டியது என்ன வென்பதுதான் எனது சிந்தனையே தவிர, பிறர் என்ன எண்ணுவார்கள் என்பதல்ல!" என்று வாழ்ந்த அந்தப் புரட்சிக் கவிஞரைத் தரிசித்த பெரும் பேறு பெற்றவன் ஆனேன் நான்.

வாழ்க பாவேந்தர்!

# சிங்கப்பூர் தமிழ் எழுத்தாளர் கழகம்



சிங்கப்பூர் தமிழ் எழுத்தாளர் கழகத்தின் ஆண்டுக் கூட்டத்தில் அதன் தலைவர் கவிஞரேறு அமலதாசன் உரையாற்றுகிறார். (கடிகாரச்சுற்றில்) அண்மையில் மறைந்த கவிஞர். ப. கோவிந்தசாமி, கழகத்தின் மதியுரைஞர் திரு. அ. தம்பிநாதன், பொருளாளர், திரு. இரெ. சோமசுந்தரம், செயலாளர் திரு. நா. ஆண்டியப்பன், துணைச் செயலாளர் திரு. நாரண. புதுமைப்பித்தன், கவிஞரேறு அமலதாசன், செயற்குழு உறுப்பினர் கவிஞர் பெரி. நீல.பழனிவேலன் ஆகியோர் அமர்ந்துள்ளனர்.



(இடமிருந்து வலம்) ஆண்டுக் கூட்டத்தில் கலந்து கொண்ட திரு.மலர் மாணிக்கம், செயலவை உறுப்பினர் திரு. வை. சுதர்மன்,திரு. இரா. பன்னீர் செல்வம், ஆசியான் கவிஞர் பரணன், திரு. பெ.திருவேங்கடம், கழக மதியுரைஞர் வெண்பாச்சிற்பி இக்குவனம், புரவலர் கலைக்காவலர் பி.பி. காந்தம் ஆகியோர்.

விமான நிலையத்தில் கவிஞருடன் சிங்கப்பூர் தமிழ் நெஞ்சங்கள்.





சிங்கப்பூர் வீதிகளில் கவிஞருடன் கவிஞரேறு அமலதசான்., மலேசிய ச.ராமசாமி, சிங்கப்பூர் வானொலி சோமசுந்தரம்.

# "மாணிக்கச் சிதறல்கள்..."

"பாவேந்தர்—"

தமிழ் இந்த பூஉலகில் எங்கெங்கே ஒலிக்கின்றதோ அங்கெல்லாம் புரட்சிக் கவிஞர் வாழ்ந்து கொண்டிருப்பார். தமிழ்மீது கவிஞர் கொண்ட பற்று வேறு எந்த கவிஞனும் உலகில் காணமுடியாத பற்றாகும்.

"எங்கெங்கு காணினும் சக்தியடா. தம்பி

ஏழுகடல் அவள் வண்ணமடா!—"

என்று ஆன்மீகக் குரலை எழுப்பி மலர்ந்த கவிமன்னன் புரட்சிக் கவிஞனாய், பாவேந்தனாய் உலவிய இந்த மண்ணில் பிறந்ததற்காக நாமும் பெருமைப்பட வேண்டும்.

"புரட்சிக் கவிஞர்" பெயரைக் கேட்ட பொழுதெல்லாம் கன்று தாய்ப் பசுவை நினைப்பது போல் எனக்குள் ஓர் சிலிர்ப்பு. உணர்வுப் பிழம்பு. தென்னார்க்காடு மாவட்டத்தில் பண்ணுருட்டி நகர் பாவேந்தர்க்கு நல்ல தொண்டர்களைத் தந்த மண். நகர திராவிட இயக்கத் தலைவராய் இருந்த என் அன்பு சகோதரர் முகுந்தராமானுஜன் நாவரசு என கவித்தென்றலாய் வீசிய இராஜவேலு, 'அதே கண்கள்' திரைப் படப் புகழ் சகோதரர் வசந்தகுமார் பாவேந்தரின் பாசப்பிள்ளைகள். எங்கள் வீட்டில் சாய்வுத் திண்ணையில் கம்பீரமாக சாய்ந்து கொண்டு, திராவிட இயக்கத் தொண்டர்களுடன் பாவேந்தர் உரையாடிய காட்சி இன்னும் என் மனத்திரையில் நிழலாடுகின்றது.

சென்னை நகர வாழ்விற்கு பாவேந்தர் தன்னை ஆயப்படுத்திக் கொண்டு ராமன் தெருவில் குடி புகுந்த போது எனது சகோதரர் வசந்த குமார் அறிமுகப்படுத்திய அந்த இளவல், இறுதிக் காலக் கட்டத்தில் பாவேந்தருக்குத் துணை யாய் வாழ்ந்த இன்றைய கவிஞர் திலகம் திரு.பொன்னடியான். பெருங் கவிஞரின் வாழ்க்கைப் பாதையில் பாவேந்தர் கண்டெடுத்த நல்முத்தாய் விளங்கியவர் பொன்னடியான்.

இளங் கவிஞனாய் முகிழ்த்த பொன்னடியின் மீது பாவேந்தர் காட்டிய பாசப்பிணைப்பு மகனின் மீது தந்தை காட்டியது போன்ற பாச உணர்வேயாகும்.

அன்று கவிஞர் ராஜவேலு (நாவரசு) விடம் காட்டிய அன்பினைப் போலும், திரு.பொன்னடியிடம் பாவேந்தர் காட்டிய பரிவு என் நெஞ்சில் பளிச்சிடுகின்றது.

பாவேந்தர் தமிழ்க் கவிஞர் மன்றம் தொடங்கி அதற்கென குயில் ஏட்டை நடத்தினார். அதில் இந்தி எதிர்ப்பு குறித்து திரு. பொன்னடி 'ஓடிவிடு' என்ற



தலைப்பில் எழுதிய கவிதையை (குயில் 1.5.62) வெளியிட்டதுடன் மட்டுமல்லாமல் தான் சுவைத்த அந்தக் கவிதை வரிகளைப் பாவேந்தர் தன்னைப் பார்க்க வந்தவர்களிடம், எப்படியெல்லாம் படித்துக் காட்டி மகிழ்ந்தார் என்பதை இன்று நினைத்தாலும் வியப்பாக இருக்கிறது. அந்த மாபெரும் கவிமன்னன் இளைய தலைமுறையின் இணையற்ற அந்தக் கவிஞனை எப்படி யெல்லாம் எங்களிடம் பாராட்டிப் பேசினார் என்பது மறக்க முடியாத காட்சியாகும்.

சகோதரர் வசந்தகுமார் கதா நாயகனாக நடித்த "பாவேந்தரின் படித்த பெண்கள்" நாடகத்தினை இயக்கும் பொறுப்பினைக் கூட கவிஞர் பொன்னடியிடம் ஒப்ப டைத்து, அதற்கான காரணத்தை பாவேந்தர் விளக்கிய நிகழ்ச்சியை இன்றும் நினைத்துப் பார்க்கிறேன்.

"பாடம் சொல்லிக் கொடுக்க நான் போனால் பிள்ளைகள் பயந்து வசனத்தைப் பேசாது. பொன்னடி கிட்ட எல்லாத் திறமையும் இருக்கு. என்னோட விருப்பமும் அவருக்குத் தெரியும். நான் இவர்களிடம் என்ன எதிர்பார்ப்பேனோ அந்த நடிப்பை பொன்னடி அவர்களிடம் வாங்கி விடுவார்". இளங்கவிஞனை அந்த மாபெரும் கவிஞன் பாராட்டி யதும், பொன்னடியிடம் அவர் தன் உணர்வுகளையே எதிர்பார்த்ததும், பொன்னடி மீது வைத்த நம்பிக்கை யினையே எதிரொலித்ததை நான் உணர்ந்தேன்.

விதவைத் திருமணத்தை ஆதரித்து 'கோரிக்கையற்றுக் கிடக்குதண்ணே' என்று புரட்சிக் குரல் கொடுத்த அவர் வெறும் கவிதை அளவில் நில்லாமல் தன் மாணவனாய் விளங்கிய எங்களூர் கவிஞர் ராஜவேலு அவர்களுக்கு ஒரு விதவைப் பெண்ணையே பாவேந்தர் தன் தலைமையில் திருமணம் செய்து வைத்தார். இதற்கு உறுதுணையாய் இருந்தவர் என் சகோதரர் முகுந்த இராமா னுஜன் அவர்கள்.

மாபெரும் கவிமன்னனை இயற்கை எடுத்துக் கொண்டது. (21.4.1964) தமிழகத் தவப்புதல் வனை, கவி மன்னனை இழந்து தவித்தது! சென்னை, பொது மருத்துவ மனையிலும் கவிஞர் பொன்னடி பாவேந்தருக்கு உறுதுணையாய் இருந்தார். தந்தை யின் உடலை புதுவைக்கே கொண்டு செல்ல விரும்பினார்

பாவேந்தரின் மைந்தர் மன்னர் மன்னன். கவிஞர் கண்ணதாசன் அதற்கான ஏற்பாட்டினைச் செய்து தந்தார்கள்.

இராமன் தெரு வீட்டிலிருந்து பாவேந்தரின் உடலைச் கண்ண தாசன் அனுப்பிய வேனில் ஏற்றும் பாக்கியம் எனக்கும் கிடைத்தது. சகோதரர் வசந்த குமார், கவிஞர் பொன்னடி, மயிலைப் பெரியவர் லோகநாதன் ஆகியோர் அதில் சென்றனர். பொன்னடி என்னை அழைத்தும் புதுவை செல்ல முடியாத சூழ்நிலை எனக்கு. கவிஞர் கண்ணதாசன், சொல்லின் செல்வன் E.V.K. சம்பத் போன்ற சிலர் உடனிருந்து மற்ற பணிகளைக் கவனித்தனர்.

வாயிலுக்கு வெளியே 'வேன்' வந்த போது, கார் ஒன்றுவந்து நின்றது.

காரிலிருந்து கலங்கிய கண்களுடன் கலைஞர் இறங்கினார். வேலூர் சிறையிருந்து அன்றுதான் விடுதலையாகி இருந்தார். கவிஞரின் கவிவரிகளைச் சுவைத்த மூத்த பிள்ளை. அன்றைய இளைஞர்கள் உணர்ச்சியுடன் எழ நாடி நரம்புகளில் பாவேந்தரின் கவிதை வரிகளைப் பாடி தட்டி எழுப்பிய கலைஞர் அவர். அவருடன் நாவலரும் இறங்கி, இறுதி மரியாதை செலுத்தி நின்றனர்.

இந்நிகழ்ச்சிகள் இன்றும் என் நினைவில் மாணிக்கப் பரல்களாய் மின்னி ஒளிவிடுகின்றன!

**– நந்தி கிலிபன்**



# பொன்னெழுத்தில் பொன்னடியான்

## கலைமாமணி
## கு.மா. பாலசுப்பிரமணியம்

**பு**ரட்சிக்கவிஞர் பாவேந்தர் வரலாற்றில் என் அருமை நண்பர் பொன்னடியான் பெயர் பொன்னெழுத்தில் பொறிக்கப்பட வேண்டிய தாகும். அனைத்துலகத் தமிழ்க் கவிஞர் மன்றத்தை 1962-ல் பாவேந்தர் தொடங்கிய நாளிலேயே, அவருக்கு இவர் அடிப்பொடித் தொண்ட ராகப் பணியாற்றியவர்.

அன்று முதல் இன்றளவும் தமிழ்க் கவிஞர் மன்றத்தின் பொதுச் செயலாளராகவும் பொறுப்புடன் இருந்து வருகிறார். பாவேந்தரின் கொள்கைப் புகழ் வளர்க்க 1966-ல் 'முல்லைச்சரம்' ஏட்டை ஆரம்பித்து, எத்தனையோ இன்னல்களுக்கிடையிலும் தொடர்ந்து நடத்துகின்றார்.

1971-ல் கடலோரம் காற்று வாங்கப் போன என்னையே தலைவ னாக்கி, முதல் கடற்கரைக் கவியரங்கம் தொடங்கினார். இருபது ஆண்டுகளாக இடைவிடாத முயற்சியால் மாதந்தோறும் முதல் ஞாயிறு மாலையில் அந்தக் கவியரங்கங்களை நடத்தி எண்ணற்ற இளங்கவிஞர் களை அறிமுகப்படுத்தி வளர்த்துள்ளார்.

இந்தப் பணியைத் தொடர்ந்து கவிஞர் வான்முகில் முதலியவர்கள் ஆரம்பித்த உதகை மலைச்சாரல் கவியரங்கத் தொடரும் என் தலைமை யில் தான் நடைபெற்றது. அதன் பின்னர் பிற மாவட்டங்களிலும் பூங்காக் கவியரங்கம் ஆற்றங்கரை-குளக்கரை-ஏரிக்கரைக் கவியரங்கம் பலவும் நிகழ்த்த இவரே வழிகாட்டியவர்.

30-11-75-ல் நான் தமிழ்க்கவிஞர் மன்றத் தலைவனாக இருந்த போது, சென்னை கற்பகாம்பாள் திருமண மண்டபத்தில் தமிழ்க் கவிஞர் மன்றத்தின் முதல் மாநில மாநாட்டை, தமிழக ஆளுநர், முதல்வர், அமைச்சர்கள், அறிஞர்கள் பலரும் கலந்து கொள்ளும் வகையில் சிறப்பாக நடத்திய பெருமை, கவிஞர் பொன்னடியானுக்கே உரிமை

யாகும். (அதன் பின்னர் இரண்டாவது மாநில மாநாடு இன்னமும் நடக்கவில்லையே என்பது என் மனக்குறை)

இத்தனை சாதனைகளையும் செய்துள்ள பொன்னடியின் உயிர்த் துடிப்பாக விளங்கும் "முல்லைச்சரம்" ஏடு-பாவேந்தரின் நூற்றாண்டுக் காலத்திலே வெள்ளி விழாச் சிறப்பு மலராக வெளிவருவது மிகப் பொருத்தமான சிறப்பு! தமிழுக்கும், நம் கவிஞர்களுக்கும் பெருமை!

முழு முயற்சியின் வெற்றி வடிவமான கவிஞர் பொன்னடியான் புகழும், வளமும், "முல்லைச்சரம்" இதழும் மேலும் பல்லாண்டுகள் வளர்ந்தோங்க வாழ்த்துகிறேன்.






கடற்கரைக் கவியரங்கம் உலகின் முதல் திறந்த வெளிக் கவியரங்கம். புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் தொடங்கிய தமிழ்க் கவிஞர் மன்றத்தின் சார்பில் கவிஞர் பொன்னடியான் இக் கவியரங்கை 13.6.1971 ல் தொடங்கினார்.

சென்னை, மெரினாக் கடற்கரை திருவள்ளுவர் சிலைக்குப் பின்புற மணல் வெளியில் ஒவ்வொரு மாதமும் முதல் ஞாயிறு, மாலை 6 மணி அளவில் நடைபெற்று வருகிறது. இக் கவியரங்கில் பங்கு கொண்ட பலர் இன்று எல்லாத் துறைகளிலும் புகழ் பெற்றவர்களாக விளங்குகின்றனர். சாதி, சமய, அரசியல் காழ்ப்புணர்சிகளுக்கு உட்படா படைப்புகளே இங்கே படிக்கப்பட வேண்டும் என்பது குறிப்பிடத்தக்கது. பூங்காக் கவியரங்கம், ஆற்றங்கரைக் கவியரங்கம், மலைச்சாரல் கவியரங்கம், மலைக் கோட்டைக் கவியரங்கம், சோலைக் கவியரங்கம், நிலா முற்றக் கவியரங்கம் என்ற பல பெயர்களில் இதன் வழி நாடெங்கும், பிற மாநிலங்களிலும், மொரிசியஸ் போன்ற பிற நாடுகளிலும் திறந்த வெளிக் கவியரங்கங்கள் நடைபெற்று வருகின்றன.

புலவர் மாமணி. இளஞ்செழியன்

# ஆதித்தனார் அன்பில் கலந்த கவிஞர்!

ஞானச்சித்தன்

'நாம் தமிழர் இயக்கம்' தமிழகத்தில் தமிழ் உணர்ச்சி விதை விதைத்துக் கொண்டிருந்த நேரமது. அதன் நிறுவனரும், தமிழ் உணர்ச்சித் தந்தையென அழைக்கப்பட்டவருமான திரு. சி.பா. ஆதித்தனார் அவர்கள் ஒரு நாள் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களை அவரின் தியாகராயநகர் இல்லத்தில் சந்தித்து உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது "ஐயா தமிழ் மக்கள் மேம்பாட்டிற் காகவும் தமிழ் மொழி வளர்ச்சிக்காகவும் அயராது பாடுபட்டு வரும் தாங்கள் அதே நோக்கத்திற்காகச் செயல்பட்டு வரும் "நாம் தமிழர் இயக்கத்திற்கு" ஆதரவு தரவேண்டும். எங்கள் இயக்க மேடைகளில் பாடு வதற்குத் தமிழ் உணர்வுமிக்க பாடல்களை எழுதி உதவுங்கள், அதைப் புத்தகமாகவும் வெளியிட்டுக் கொள்வோம்" என்று புரட்சிக் கவிஞ ரிடம் வேண்டுகோள் விடுத்தார்.

அது கேட்ட பாவேந்தர், "உங்கள் நாம் தமிழர் இயக்கப்பணிகள் வெற்றி பெற வேண்டும். அதற்காக நான் புதிய பாடல்களும் எழுதித் தருகிறேன். அதே நேரத்தில் முன்பே நான் தமிழ் தமிழர் நலன் கருதி எழுதியுள்ள உணர்ச்சிப் பாடல்களை நீங்கள் பயன்படுத்திக் கொள்ளலாம்.

பாடல்களைத் தேர்ந்தெடுப்பதற்கு "பொன்னடி"யையும் உங்களுக்கு உதவச் சொல்லுகிறேன், எனக் கூறி அப்பணியில் ஆதித்தனார் அவர்களுக்கு உதவும்படி கவிஞர் பொன்னடியானுக்குக் கட்டளை யிட்டார்.

உரையாடல் முடிந்து பாவேந்தரிடம் விடை பெற்று ஆதித்தனார் செல்லும் போது வழியனுப்ப வந்த பொன்னடியானைப் பார்த்து, "ஐயா அவர்கள் 'பொன்னடி' என உங்களை அழைத்தார். நல்ல பெயர். முழுப் பெயர் என்ன என்று கேட்க, "பொன்னடியான்" என்று நமது கவிஞர் கூறுகிறார். ஆதித்தனார் இரண்டு மூன்று முறை அப்பெயரைச் சொல்லிப் பார்த்து விட்டு "பொன்னடியார்" என்று உச்சரித்து முற்றுப் புள்ளி வைக்கிறார். "பாரதியார்" "பொன்னடியார்" என்று கூறிப் பார்த்துக் கொள்கிறார். இளங்கவிஞர் பொன்னடியான் முதுகில் தட்டிக் கொடுத்துக் கொண்டே "எதிர்காலத்தில் பாரதியார் போல் பொன்னடியாரும் புகழ் பெற வேண்டும்" என்று வாழ்த்துக் கூறுகிறார். அதன் பிறகு நமது கவிஞரைப் பார்க்கும் போதெல்லாம் தமிழ் உணர்ச்சித் தந்தை ஆதித்தனார் அவர்கள் மறவாமல் "பொன்னடியார்" என்று அழைத்தே அன்புப் பாராட்டுவார்.



## இவர் பாடலுக்கு இவரே முரண்படுகின்றார்!

**"எவனையும் நம்பாதே**
**எவனையும் சேர்த்தே**
**எழுதுகின்றேன் நான்**
**எவனையும் நம்பாதே!"**

என்று பல ஆண்டுகளுக்கு முன்பே எழுதிய கவிஞர் 'பொன்னடியான்' அவர் எழுதியபடியே ரொம்பவும் உஷார் ஆனவர் போலும் என்று நினைக்கத் தோன்றும். ஆனால் அதுதான் இல்லை. கண்டவனை எல்லாம் நம்பி விடுவார். அப்போதுதான் சந்தித்த ஒருவரை ஆயிரம் ஆண்டுகள் பழகியவர் போல நம்பி எல்லாவற்றையும் சொல்லிவிடுவார். பின்பு நம்பவைத்துக் கழுத்தறுக்கும் ஆசாமிகளிடம் சிக்கித் திண்டாடுவார். "நீங்கள் தான் முன்பே எவனையும் நம்பாதே என்று எழுதியுள்ளீர்களே பின்பு எப்படித்தான் ஏமாறுகிறீர்களோ?" என்று கேட்டால்,

*"விடிந்ததும் ஏமாற்று முகத்தில் விழிக்கிறேன்*
*வெளுத்ததை எல்லாம் பாலாக எண்ணியே*
*வெட்டிப் பயல்களுக்கு வீணுக்குழைக்கிறேன்*
*கண்டவனை எல்லாம் நம்பி*
*தொலைகிறேன். கைகள் குலுக்கியும் கட்டித் தழுவியும்*
*கள்ள மனிதரிடம் அன்பைச்*
*சொரிகிறேன் என்று சொல்லிச் சிரிக்கின்றார்."*

**வி.ஆர் குமார்**

# தமிழ் இலக்கிய உலகில் பொன்னடி-யார்?

உலகில் பெருமைக்குரிய மொழி தமிழ் மொழி. ஏறக்குறைய 5000 ஆண்டு இலக்கிய வரலாறு உடைய மொழி தமிழ் மொழி. நேற்றும் இன்றும் நாளையும் குன்றாப் பெருமையோடு திகழ்ந்த-திகழும்-திகழப் போகும் மொழி தமிழ் மொழி. அதன் சிறப்புகளுக்காக அந்தந்தக் காலங்களில் மங்காச் சிறப்புடைய இலக்கியங்களைப் படைத்தளித்த புலவர்கள், புரவலர்கள் தமிழின் வேர்கள் என்றால் உண்மை.

இருபதாம் நூற்றாண்டு தமிழின் பொற்காலம்! உலக இலக்கியங்களின் தொடர்புகளோடு அது மேலும் அறிவியல் பொலி வோடு வளப்படுத்திக் கொண்ட காலம். அதற்கு முன்னோடிகள் பாரதி, அவர் சீடர் பாரதிதாசன் என்பது உலகம் உணர்ந்த ஒன்று. அந்தப் பரம்பரையில் பாரதிதாசனாரின் நேரடிக் கவிதை வாரிசாக மலர்ந்த கவிஞர் பொன்னடியாரின் பங்கு இக்காலத் தமிழ் இலக்கிய உலகில் என்ன? இக்கேள்விக்குக் கிடைக்கும் விடை மிக மிகத் தெளிவானது.

அவர்தான் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் மாணவர் என்ற புகழாடையை மட்டும் போர்த்திக் கொண்டு வலம் வரவில்லை.

புரட்சிக் கவிஞர் வழியில் புதுமைப் படைப்புகளை நாளும் படைத்துத் தலை நிமிர்ந்து நிற்கிறார்.

புரட்சிக் கவிஞருடன் அவர் இருந்த காலத்தில் புரட்சிக்கவிஞரால் தொடங்கப்பெற்ற தமிழ்க் கவிஞர் மன்றத்தை இன்றுவரை கட்டிக் காத்து வருகிறார்.

தமிழ் இலக்கிய உலகம், இந்திய இலக்கிய உலகம், ஏன் உலக இலக்கிய உலகமே கண்டிராத திறந்த வெளிக்கவியரங்கமான கடற்கரைக் கவியரங்கை முதன் முதல் தொடங்கி எண்ணற்ற கவிஞர்களை, படைப்பாளர்களை இன்றுவரை வளர்த்து வருகிறார்.

தன் இல்லத்தையே தமிழாலயமாக்கி பல ஆண்டுகளாக 'படைப்பரங்கம்' மூலம் இலவச இலக்கண இலக்கிய வகுப்புகளை நடத்தி இளம்படைப்பாளர்களை முறையாக வளர்த்து வருகிறார்.

தானே ஓர் இயக்கமாகி அந்த இலக்கிய இயக்கத்தை நாடு தழுவி நடத்த 'முல்லைச்சரம்' பத்திரிகையை கடந்த 31 ஆண்டுகளாக நடத்தி வரலாறு படைத்து வருகிறார் கவிஞர் பொன்னடியார். இந்த வரலாறு இன்றைய தமிழ் இலக்கிய உலகத்தின் மேன்மைக்கு மேன்மை சேர்க்கும் வரலாறு என்பதை எவர் மறுக்க இயலும்?

**எம். ஜெய்லானி, பெரியகுளம்.**

இலக்கியப் பணி 40-ஆம் ஆண்டு விழா காணும்
புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின்
உண்மைக் கவிதை வாரிசை,
புதுமைக் கவிஞர் பொன்னடியாரை
பல்லாண்டு பல்லாண்டு வாழ
வாழ்த்துகிறோம்!



**மா. ராம தமிழ்ச்செல்வன்**

(திருவள்ளுவர் திருவுருவப் படம் உருவாகக் காரணமானவர்)

41, அர்ஜூன முதலி தெரு
குடியாத்தம் - 632 602




# போதாதா?

கவிஞர் பெரி. சிவனடியான்

பொன்னடியான் என்றாலும் பொருளடியான் ஆகாமல்
தண்டமிழின் சொந்தத்தால் தமிழடியான் ஆனவரே!
சிவனடியான் உங்கள் செயலறிவான் பல்லாண்டாய்
அவனதனால் உங்கள் அருமைசில சொல்கின்றான்!

பாவேந்தர் சீடரெனப் பகர்வ(து) ஒன்று போதாதா?
மூவேந்தர் தமிழ்காக்கும் "முல்லைச்சரம்" போதாதா?
நாவேந்தும் தமிழ்வளர்க்க நடுமனையில் ஒரு வகுப்பைப்
பாவிரும்பும் மாணவர்க்குப் படிப்பித்தல் போதாதா?

காசுகா(சு) என்றலையும் காலத்தில், கைநீட்டிக்
காசெதுவும் வாங்காமல் கற்பித்தல் போதாதா?
கடற்கரையில் கவியரங்கம் காதினிக்கக் கூட்டியதால்
கடலலைபோல் தமிழலையும் கலந்ததங்கு போதாதா?

பட்டாணி விற்குமிடம் பைந்தமிழை இலவசமாய்
பிட்டுக் கொடுக்கின்ற பெரும்பணிகள் போதாதா?
இசைஞானி ராஜா ஏழிசைக்குப் பாட்டெழுதி
தசை நகமாய் அவரோடு சார்ந்திருத்தல் போதாதா?

நல்ல மனைவி நன்மக்கள் நடுவிருந்து
ஒல்லும் வகைதமிழுக்(கு) உழைத்திடுதல் போதாதா?
போதாது பொன்னடியான் போதாது, மேன்மேலும்
சேதார மாகாமல் செந்தமிழைக் காத்திடு நீ!



# நூற்றுக்கு நூறு உண்மை!

அறிமா. டாக்டர் **கோ. மணிலால்**

இந்த நூற்றாண்டின் இருள் கிழிக்க வந்த இணையில்லாத தமிழ்க் கவிஞர்கள் பாரதி பாரதிதாசன் வழியில் ஒரு துளியும் பிசகாமல் நடை போடுபவர் கவிஞர்:-

*"என்னுயிர் மூச்சும் என்னுடற் பேச்சும்*
*எல்லாம் தமிழினுக்கே -!*
*என் விழி வீச்சும் என் புகழ்ப் பேச்சும்*
*எல்லாம் தமிழினுக்கே!"*

என்று செந்தமிழ்த் தாயின் திருப்புகழைப் பாடி மகிழ்பவர். கவிஞரின் இலக்கியப் பணி வெள்ளிவிழாவில் அமரர் நாவலர் பேசும்போது "கவிதைகளை மட்டும் எழுதுகின்ற கவிஞர்கள் பலபேர் உண்டு. ஆனால் செயல்படுகின்றவர்கள் ஒரு சிலரே. பொன்னடியான் சிறந்த கவிதைகள் மட்டுமே எழுதவில்லை- செயல்படவும் செய்கிறார். பாரதிதாசனுக்கு அமைந்த பரம்பரையைப் போல் வேறு எந்த கவிஞருக்கும் அமையவில்லை. பாரதியார்

அடித்தளம் போட்டார். பார்திதாசன் கோபுரம் அமைத்தார் பொன்னடியான் அதை காத்து வருகிறார்" என்று உண்மை உணர்ந்து, தமிழ் வரலாறு உணர்ந்து மனந்திறந்து பேசி வாழ்த்தினார்.

இதுதான் நூற்றுக்கு நூறு உண்மை. தன் கைக் காசை செலவழித்து 35 ஆண்டுகளாக இந்தியாவிலும், உலகத்திலும், எந்தக் கவிஞனும் பிற கவிஞர்களை-எழுத்தாளர்களை வளர்க்க பத்திரிக்கை நடத்தியதில்லை. தன் இல்லத்தையே தமிழ் ஆலய மாக்கி படைப்பாளர்களை வளர்த்ததில்லை- கடற்கரை கவியரங்கம் போன்ற புதுமை முயற்சிகளைப் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து நடத்தியதில்லை. அத்துடன் தன் குருநாதர் பாரதி தாசன் தொடங்கிய தமிழ்க் கவிஞர் மன்றத்தை இன்றளவும் 40 ஆண்டுகளாக நடத்தி தமிழ் இலக்கியத்திற்குத் தன்னலங்கருதாதத் தொண்டாற்றி வருகிறாரே. இப்படிப்பட்ட வரலாற்றுச் சிறப்புமிக்க பணிகளை வேறு எவர் செய்தார்? செய்கிறார். இவரே இவர் மட்டுமே இத்தகைய செயற்கரிய செயல்களைச் செய்து வருகிறார்.

*கொடுமை கண்டால் உடன்*
*கொதித்தெழ வேண்டும் நீ*
*வங்காளியர்களைப் போலே-*
*கொஞ்சமும் அஞ்சாத*
*நெஞ்சுரம் பெற வேண்டும்*
*சீக்கிய மறவரைப் போலே!*

என்று இளைய தலைமுறையைப் பார்த்து முழக்கமிடும் கவிஞர் பொன்னடியார்.

தமிழ், தமிழர் நலம் நாடிபாடுவதோடு பாரதி வழியில் இந்தியத் திருநாட்டின் ஒருமைப்பாட்டையும்,

*"இந்திய நாடொரு பூச்சரமாகும்*
*இதில் ஒரு மாநில மலர் குறைந்தாலும்*
*வந்துவிடும் சீரழிவும் குலைவும்*
*வழி தடுமாறிக் குழப்பம் நிலவும்*

என்று முழக்கமிடுகிறார்.

உழைப்பாளர் உயர்வை எண்ணி எண்ணற்ற பாடல்களைப் படைப்புகளை எழுதியவர் - எழுதி வருபவர் கவிஞர்.

*உழைப்பவர் தோள்களில்*
*உலகம் ஒரு நாள்*
*ஊஞ்சலாடிடப் போகுது!- எத்திப்*
*பிழைப்பார் வாய்களில் வயிற்றினில் எல்லாம்*
*மண்விழுந்தே மூடப் போகுது"*
*என்று எச்சரிக்கை விடுக்கிறார்.*

அவர் எழுதிப் புகழ் பெற்ற சினிமாப் பாடல்கள் அனைத்திலும் நாட்டுப் பற்றும் மக்கள் முன்னேற்றமும் பொது நலச் சிந்தனையும் மிளிரும் - அமைதிப் படையில் அவர் எழுதிய

*வெற்றி வருது வெற்றி வருது*
*புதிய உலகம் நமது என்று விழித்தெழு*
*தலையை நிமிர்த்து தமிழா*
*தடையை நொறுக்குத் தமிழா*

இருண்டு கிடக்கும் நமது வாழ்வில் வெளிச்சம் வேண்டும்" என்று எழுதி இருப்பார். இசை ஞானியின் எழுச்சி மிக்க இனிய இசையில் கவிஞரின் அந்தப்

பாடலைக் கேட்கும்போது நம் மனம் சிலிர்த்தெழும். இப்படிப் படைப்பாலும் செயலாலும்,

*உண்மையின் மீது நம்பிக்கை வைத்திடு*
*அதுவே என்மதம் நண்பனே!"*

என்றுப் பாடிப் பாட்டுப் பயணம் தொடரும்

இப்பாட்டுப் பறவை

உலகம் தழுவிய கொள்கை உணர்வுடன்

உலகைத் தழுவிடுங்கள்– ஓ

உங்களைத் தான் என் தோழர்களே

உலகம் தழுவிய உறவு நெறிமுறை

உணர்ந்து முன்னேறிடுங்கள்–ஓ

உங்களைத் தான் என் தோழர்களே!"

என்று பாடும் உலக தேசிய கவிஞராகவும் திகழ்கின்றார். இப்பெருங்கவிஞர் தமிழர்க்கும், இந்தியருக்கும் ஏன் உலக மக்கள் உயர் கொள்கைக்கும் உயர்வு சேர்க்கும் கவிஞராக வாழ்கிறார். இப்பெருமகன் பல்லாண்டு வாழ்ந்து பெருமைகள் பலபெற வாழ்த்தி வணங்குகிறோம். ★



புரட்சிக் கவிஞரின் மகள் வழிப் பேத்தி கவிஞர் மணிமேகலையின் கணவர் கவிஞருக்கு ஆடை போர்த்திச் சிறப்பிக்கின்றார்.

# கவிஞர்
# பொன்னடியார்
# வாழ்க்கைப் பாதை





# கவிஞரின் வாழ்க்கைப் பாதை

கவிஞர் பொன்னடியான், "கவிஞர்களை வளர்க்கும் கவிஞர், என்று புகழப்படுபவர். தமிழகத்தின் பெருமை மிகுந்த, தகுதி வாய்ந்த கவிஞர்களில் குறிப்பிடத்தக்கவர் இவர்.

பள்ளி ஆசிரியர் திரு. வி.டி.நாதன், அன்னம்மை ஆகியோரின் முதல்மகனாக 4-6-1940 - ஆம் ஆண்டு பிறந்தவர். இவர் சாதி, இன வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்ட சமத்துவ சமுதாய அமைப்புக்கு உழைப்பவர்; இன்றைய இளைஞர்களுக்கு வழி காட்டும் பகுத்தறிவுப் பண்புப் பலகணி.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் அன்பிற்கும் நம்பிக்கைக்கும் உரிய மாணவராக (1960-ஆம் ஆண்டு முதல் பாவேந்தர் இறுதி நாள் வரை) விளங்கியவர்.

மாணவர் தலைவராக விளங்கியபோது, மொழிநலன் தழுவிய பல போராட்டங்களில் ஈடுபட்டு, எத்தகைய எதிர்ப்புக்கும் அஞ்சாமல் செயல்பட்டவர்.

தமிழ்க் கவிதை இலக்கிய மறுமலர்ச்சி இயக்கமாகவும், இருபதாம் நூற்றாண்டின் தமிழ்ச் சங்கமாகவும் விளங்குவது பாவேந்தர் தொடங்கிய தமிழ்க்கவிஞர் மன்றம், பாவேந்தரோடு இவர் இருந்த காலந்தொட்டு அம் மன்றத்தைக் கட்டிக்காத்து, நாடு தழுவிய கலை இலக்கிய இயக்கமாக உயிர்த் துடிப் போடு நடத்தி, அதன் பொதுச் செயலாளராக விளங்கி வருபவர்.

1966-ஆம் ஆண்டு முதல் '**முல்லைச்சரம்**' எனும் இலக்கிய ஏட்டினைத் தொடங்கி, பல ஆண்டுகளாகத் தொடர்ந்து நடத்தி, எண்ணற்ற கவிஞர்களை, எழுத்தாளர்களை, பத்திரிகையாளர்களை ஆராய்ச்சியாளர்களை உருவாக்கி, ஊக்கமூட்டி, வளர்த்து வருபவர்.

1971 - ஆம் ஆண்டு, உலகக் கவிதை இலக்கியத்துறையின் திருப்புமுனை நிகழ்ச்சியாக விளங்கும் '**கடற்கரைக் கவியரங்கை**'த் தொடங்கி, இன்றுவரை நடத்தி வருவதோடு, தமிழகத்திலும், தமிழர் வாழும் பிற நாடுகளிலும், பிற மாநிலங்களிலும் பல திறந்த வெளிக் கவியரங்கங்கள் தோன்ற முன்னோடியாகத் திகழ்பவர்.

தமிழகத்தின் பலதுறை அறிஞர் பெருமக்களாலும், பத்திரிகை உலகின ராலும், பலதுறை அமைப்புக்களாலும் பாராட்டப்பட்டு வரும் கவிஞரின் பணியைச் சிறப்பிக்கும் வகையில் **முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம்** அவர்கள் தலைமையில் பன்மொழிப்புலவர் அப்பாத்துரையார் அவர்கள் முன்னிலையில் 'இலக்கியப் பணி வெள்ளி விழா' 24-2-85-ஆம் நாள், மயிலை பாரதிய வித்யாபவனில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

புதுமைக் கவிஞர், எழுச்சிக் கவிஞர், உணர்ச்சிக் கவிஞர், புரட்சிக்குயில், மக்கள் கவிஞர், செந்தமிழ்ப் பாமணி போன்ற பல பட்டங்கள், பல அமைப்புக்களால் அளிக்கப்பட்டு பெருமைப்படுத்தப்பட்ட கவிஞரின் புகழ் பெற்ற நூல்கள், 'ஓர் இதயத்தின் ஏக்கம்', 'பனிமலர்', 'பொன்னடியான் கவிதைகள்' (இரண்டு தொகுப்புகள்) 'ஒரு கைதியின் பாடல்கள்', பறக்கத் தெரியாத பட்டாம் பூச்சிகள்' அரங்கேற வருகின்ற 'அன்னப் பறவைகள், 'நினைவலைகளில் பாவேந்தர்' முதலியன.

கவிஞரின் கவிதைகள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு "A Glowing Fire" என்ற நூல் வடிவம் பெற்றுள்ளது. இரானிய இளம் புரட்சிக் கவிஞர் அரஷ், பெர்ஷியன் மொழியில் மொழி பெயர்த்துள்ள கவிஞரின் கவிதை நூல் 'பாதகத்தை எதிர்த்துப் பாடல்கள்' என்பதாகும்.

கவிஞரின் படைப்புகளை ஆராய்ச்சி செய்து பலர் பல்கலைக்கழகப் பட்டங்களைப் பெற்று வருகின்றனர்.

1969-ஆம் ஆண்டு கவிஞரின் கவிதை இலக்கியப் பணிகளைப் பாராட்டி, ஐ நா. பண்பாட்டுக் கழகம், தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் தலைமையில், மாண்புமிகு பேராசிரியர் க. அன்பழகனார் முன்னிலையில் அந்நாளைய ஐ.நா. சபைத் துணைத் தலைவர் திரு. சி.வி. நரசிம்மன் மூலம் '**உலகின் அழுத்தப்பட்ட மக்களுக்காகப் பாடும் எழுச்சிக் கவிஞர்**' என்ற பட்டத்தை அளித்துச் சிறப்பித்தது.

29-2-78 ஆம் நாளிட்ட நடுவணரசின் ஆணைப்படி, தமிழ்த் திரைப்படத் தணிக்கைக் குழு உறுப்பினராகக் கவிஞர் நியமிக்கப்பட்டார். ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டின் பொதுக் கூட்டக் குழுச் சிறப்பு உறுப்பினராகவும், பாரதி நூற்றாண்டு விழாக் குழு உறுப்பினராகவும், பாரதிதாசன் நூற்றாண்டு விழாக் குழு உறுப்பினராகவும் தமிழக அரசால் நியமிக்கப்பட்டார்.

1990-ஆம் ஆண்டு பாவேந்தர் நூற்றாண்டு விழாவில் தமிழக அரசால் 'பாரதிதாசன் விருது' வழங்கிச் சிறப்பிக்கப்பட்டார்.

கவிதை இலக்கியத் துறையில் தமக்கே உரிய தனி வழியில் நடைபோடும் கவிஞர், தமிழ்த் திரைப்படத் துறையிலும் நெஞ்சில் நிலைக்கும் பிரபலமான பல நல்ல பாடல்களும் எழுதி வெற்றியுலா வருகிறார்.

கவிஞரின் துணைவியார் திருமதி. இந்திரா அம்மையார் நீர்ப்பகுப்பாய்வுத் துறையின் ஆராய்ச்சியாளர் - அதிகாரி. கவிஞரின் இலக்கியப் பணிகளுக்கு நல்ல துணையாகவும் விளங்குகிறார். கவிஞருக்கு பொன்மலர், லெனின்குமார் எனும் மகளும், மகனும் உள்ளனர்.

# *Ponnadiyar - A Profile*

**Poet Ponnadiyar** as you may be aware of, is an outstanding Tamil Poet and a front ranker in the literary progeny of Bharathi and Bharathidasan. He has been doing yeomen service to Tamil through various institutions like the Tamil Poets Association, Sea-Shore Poets' Meet, Writers' Forum etc. He has been editing - **'MULLAI CHARAM'**, a popular Tamil Monthly with a unique record of continuous publication for the past 35 years with a rare sense of social awareness and contemporary commitment.

As the author of several books, he has received honours and awards such as the Bharathidasan Award of the Government of Tamilnadu, 'UNESCO' Award etc. He has composed several popular lyrics for Tamil Films, Serials, Radio etc. Above all, he is held in high esteem in the Tamil Literary World as a guiding force who encourages budding poets.

He is a Poet with a national outlook and his poems bear ample testimony to his humanism and universality. His poems have been translated into several languages including English, Hindi, Persian etc. He is the first Tamil Poet whose poems have been translated into Persian.

His verses bear witness to his emotional outburst.

His home is a haven to Budding and popular poets.

He is a bridge between tradition and novelty in poetry.

His poems reflect his passion to glorify humanity and universal brotherhood.